உ



பதினெண் சித்தர்கள் திருவாய்
மலர்ந்தருளிய

# வர்ம வைத்திய மகுடம்.

இஃது

திருநெல்வேலி ஜில்லா, நாங்குநேரி தாலுகா,
தோட்டாக்குடிக் கிராமம், மதுரகுளம்
ஜோ. ஜோசாயா பாக்கியநாதன் நாடார்
குமாரர்
**ஜெபக்கனி பாக்கியநாதன் நாடரால்**
பங்கஜம் பிரஸில் பதிப்பிக்கப்பெற்றது.





முதல் பதிப்பு 1000
இதன் விலை] **1938.** [ரூ 2-0-0

உ



பதினெண் சித்தர்கள் திருவாய்
மலர்ந்தருளிய

# வர்ம வைத்திய மகுடம்.

இஃது

திருநெல்வேலி ஜில்லா, நாங்குநேரி தாலுகா,
தோட்டாக்குடிக் கிராமம், மதுரகுளம்
ஜோ. ஜோசாயா பாக்கியநாதன் நாடார்
குமாரர்

**ஜெபக்கனி பாக்கியநாதன் நாடாரால்**
பங்கஜம் பிரஸில் பதிப்பிக்கப்பெற்றது.



முதல் பதிப்பு 1000

இதன் விலை] **1938.** [ரூ 2-0-0

புஸ்தகம் கிடைக்குமிடம்

பதிப்பாசிரியர் தற்கால விலாசம்:

ஜே. ஜெபக்கனி பாக்கியநாத நாடார்,

மூணார் போஸ்ட்,

திருவாங்கூர் சமஸ்தானம்.

The book can be had of the publisher

**Mr. J. Jebakanhi Pakianathan Nadar,**

**Merchant & Commission Agent,**

**MUNNAR P. O.**

**(Travancore)**



---

# பொருளடக்கம்.

பக்கம் நிர்.

# நூன்முகம்.

---

இந்த வர்ம வைத்திய மகுடமென்று நாமகரணமிடப் பட்ட நூலை வாங்கிப்படிக்கும் ஆசான்மார்களுக்கும் ஸ்ரீமான் ஸ்ரீமாட்டிகளுக்கும், மாணுக்கர்களுக்கும் இதன் பதிப் பாசிரியனுகிய யான் தாழ்மையாய் தெரிவிப்பது என்ன வென்றால்:- நான் பல இடங்களிலும் பல ஆசான்மார்களி டமும் சிஷனுகி அவர்களால் எனக்கு உபதேசிக்கப்பட்ட தும் ஈயப்பட்டதுமான துண்டு நூல்களை எல்லாம் ஒன்று சேர்த்துக் கோர்வையாக எடுத்து எழுதியிருக்கிறேன். இதில் அடங்கியுள்ள நூல்கள் முக்கியமானதும் ஒவ் வொன்றும்மதிக்கப்படத்தக்கதுமானவை.தெரிந்துகொண்ட வர்கள் பிறருக்கு உபதேசித்தால் நம்மை மதிக்கமாட்டார் கள், நாமே எல்லாரையும் அடக்கியாளவேண்டுமென்ற தன் னலத்தால் நமது தேசத்தில் இப்படி ஒரு சாஸ்திரம் இருக்கிறது என்று அநேகர் அறியாமலே மறைவாய் கையாடப்பட்டு வந்தது. எனது கோரிக்கை இந் நூல்களை யாவரும் கற்றுணர்வதால் அவரவர்கள் சரீரத்தைப பாதுகாக்க அவரவர்களுக்கு ஒரு நூதன படிப்பும் பிறருக்கு அகஸ்த்மாத்தாய் உண்டாகும் அபாயங்களுக்கு தைரிய மாய் காரணம் கண்டறிந்து சிகிச்சை செய்ய வல்லமையும் பிறரை உபத்ரவிப்பது 'பாவம் என்றறியவும் அஹிம்சா தர்மத்தைக் கைக்கொள்ளவும் இது ஒரு பிரதான வழியாகி உலகில் யாவருக்கும் நன்மையே பயக்கும் என்பதும் அவ ரவர் தன் தனிப்பிரயாணங்களிலோ மற்றெவ்விதமான விலக் வசதியில்லாத பிறர் உபத்திரவங்களிலோ இதை பிர யோகம் செய்து பின் நிவர்த்தி செய்து விடுவதால் தனக்கு

சாபல்யமும் துஷ்டன் தன் துஷ்டத்தனத்திலிருந்து நல் வழிக்கு வர ஒரு சாதனமுமாகுமென்பதே. இதில் ஞானார்த்தமான விஷயங்களும் அநேகம் அடங்கியிருக்கின்றபடியால் இது இல்லற வாசிகளுக்கு மட்டுமல்லாமல் துறவற வாசிகளுக்கும் முக்கியமான நூலாகும். இதை சரியாய் வாசித்து கிரகித்துக்கொண்டு போக எல்லாம் விளக்கமாக விளங்கும். நான் இதில் ஒன்றும் ஒளிமறைவில்லாமல் எனக்குக் கிடைக்கப்பட்டபடி தெளிவாய் எழுதியிருக்கிறேன். என்றாலும் இதை வாசிக்கும் யாவரும் இதிலிருக்கும் சொற் குற்றம் பொருள் குற்றம் யாவையும் பிழை பொறுத்து அங்கிகரிக்குமாறு தாழ்மையாய் கேட்டுக் கொள்கிறேன்.

இங்ஙனம்

ஜே. ஜெபக்கனி பாக்கியநாதன்,

பதிப்பாசிரியர்.

உ
கடவுள் துணை.

# வர்ம சூஸ்திரம்.



1. ஆதியந்த மூலவட்டக் கணபதியே காப்பு அகன்ற பரிபூரணத்தின் அருளினாலே ஜோதி என நின்றிலங்கும் பிராணதீபம் சூட்சமதாய் யாபேர்க்கும் துலங்கவேண்டி வாதி பெரும் உலகத்தில் மனுவோர்க்கெல்லாம் வகை விபரம் கைபாகம் வழியைச் சொல்வேன், பாதிமதி தரித்த சிவம் தன்னைப் போற்றி பராபரமான திருப்பரனே காப்பு.

2. ஆதாரமானதொரு மூலத்துள்ளே அகண்டமாய் அண்டமெங்கும் நின்ற மூர்த்தி பாதாரம் தனைப்பணிந்து வர்ம சூஸ்திரம் பாடினார் நாடி நரம்பானவாறு வேதாந்தி எனையாண்ட கடாட்சமது போகருட கருணையாலே வாத மரிந்துரைத்த வர்ம சூஸ்திரம் வையகத்தோர் காணாமல் மறைவில்வையே.

3. மறைவிலே வைப்பதென்ன மைந்தாகேளு வகை விபரம் கை பாகம் மறைப்பொன்றில்லை உறவாடி சிலபேர்கள் நூல் தா வென்று ஓவியம் போல் மொழிகள் பேசி உன்னை ஏய்ப்பார் திரமான நூலவர்க்கு வெளியிடாதே சிஷரெனப் பன்னிரெண்டு வருடம் காத்து அறிவான் புத்தியவர்க்கிருந்ததானால் அப்பனே பொருள் வாங்கி நூலை ஈயே.

4. ஈவது தான் யாருக்கு சிவயோகிக்கு இகத்திலுள்ள வம்பருக்கு ஈந்தாயானால் சாவதுவே கடைநரகில் வீழ்வாய் சொன்னேன் சண்டாளர்க் கீயாதே தரணி மீது நாமிதுவே வெளியாகச் சொன்னோமென்று தரணி தனில் இந்நூலை மறைத்தார் சித்தர்.

5. பாரப்பா படுவர்மம் பன்னிரெண்டும் பாங்கான தொடுவர்மம் தொண்ணூற்றாறும் வேரப்பா மெய் தீண்டா காலம்ஒன்று, வெற்றி என்ற பச்சிலையை விளம்பக்கேளு

ஆரப்பா ஙாடி எழுபத்திராயிரம் ஆராய்ந்து சொல்லுகிறோம் அறிந்து தேறே தேறப்பா சூஸ்திரத்தை அறியவென்றால் தேறியே சொல்லுகிறேன் தெளிந்து கேளே.

6. கேளடா மனம் தன்னை அடக்கவேண்டும் கொடி தான கோபமெல்லாம் துலைக்க வேண்டும் ஆரடா ஆனாலும் காலம் கொண்டால் அப்பனே குருபாதம் தேடவேண்டும் பாரடா அனுமானைப் பூஜை வேண்டும் பத்திரமாய் ஐய்ந் தெழுத்தின் சித்திவேணும் சீரடா சிதம்பர சக்கரத்தை எழுதி வைத்து சிறுலகில் ஐந்தெழுத்தை சித்திசெய்யே.

7. செய்யப்பா மூலிகையெல்லாம் சாபம்தீர்த்து செயலான பச்சிலைதானுண்டுபண்ணு கையப்பா வர்மமதை தேர்ந்து கொண்டால் கருத்தான கைபாகம் அறியவேண் டும், கையப்பா இது விபரம் நன்றாய்ப்பார்த்து நாதனருள் பெருக்கத்தை நாடுவாயே பையப்பா வர்மமெல்லாம் பகரக் கேளு பராபரனை நெஞ்சுதனில் நினைந்துநேரே.

8. நேரப்பா நெற்றி நெடுபுருவம்தன்னில் நேராக நெல்லிடைக்குத் தாழ்வதாக தாளப்பா திலர்தக்காலம் அதற்குப்பேறு தட்டெனவே முறிவு கொண்டால் பிளையா தப்பா பிளையாத காலமது திலர்தகாலம், பேசுகிறேன்குணங் கள் அதில் வர்மம் கொண்டால் கேளு இளையாக வாய் பிளந்து வானம் பார்க்கும் இருக்குமடா நாளிகை தான் மூன்றே முக்கால் குளைய நீ இளக்குமுறை கூறக்கேளுகுடிமி தனைப்பிடித்திருத்தி உச்சியில் குணமாய் தட்டி தயவாக பின்கலையும் தடவித்தாழ்த்தி சார்பாக சுக்கு வைத்து ஊதிடாயே உலையாமல் அன்னப்பால் சுக்கும் சேர்த்து உத்தமனே கொடுத்துவிட உருதியாகும் விளலாக இந்த வர்மம் செய்திட்டோர்க்கு விசித்திரமாய் என் மருந்தை ஊதிடாயே ஊதியே அன்னப்பால் சுக்கும் சேர்த்து உத்த மனே கொடுத்துவிட உருதியாமே.

9. சாதி யென்னும் நட்சேத்திரக்காலம் தன்னை தலங் குணமும் விபரமுடன் சாற்றக்கேளு சோதி என்னும்

கடைக்கண்ணின் இமைக்குள்ளே தான் துலங்குகின்ற குளிவதிலே காலமப்பா வாதி என்ற வர்மமது கொண்டதானல் மஞ்சள் போல் கண்முகமும் மாறும் பாறு முகம் மாறி வேர்வையுடன் செவி கேளாது முதுகு விலா இரு புரமும் குளிர்ச்சை காணும்.

**10.** புகமான நாளிகை தான் இருபத் தேளில் உத்தமனே இளக்குமுறை உறைக்கிறேன் கேள் சுகமாக மறுபுறத்தில் கை விரித்து சூஸ்திரமாய் தட்டொன்று சுருதி வெப்பில் வகையாக இருபுரமும் தடவித்தாழ்த்தி மகிழ்ச்சியாய் உச்சியிலோரடியும் போடே போடப்பா சுக்காலே யூதிப்போடு புத்தியுடன் சாமையரிசியன்னப்பாலையூட்டே.

**11.** காடப்பா காது சிறுதண்டில் தானே கலங்காத செவிக்குத்தி காலம் என்பார் வீடப்பா செய்குணத்தை விளம்பக்கேளு விழி இரண்டும் தள்ளி வாயில் முறையும் காணும் நாடப்பா இது குணத்தை நன்றாய்ப் பார்த்து நாளிகை தானிருபத்திமூன் றிற்குள்ளே.

**12.** இதமாக அச்செவி மறுபுரத்தில் குரு பக்தி நினைந்து கைமடக்கி கூசாமல் இருபுரமும் தடவித்தாழ்த்து கருவரிந்து கைபிணைத்துத்தலை மேல் வைத்து கபாலமதிலடியடித்து காதிலூத அருகிருந்தோர் அறியாமல் இளகும் பாரு அரிசியிட்டு அன்னப்பால் சுக்குமாமே.

**13.** ஆமப்பா இன்னமொரு அடவு சொல்வேன் ஆச்சரியம் ஆச்சரியம் இதுபோலுண்டோ தாமப்பா வளை முடிந்ததலத்தில்தானே சார்வான குளிவதிலே பிடரிக் காலம் ஓமப்பா ஓடிவுடனே அடிகள் குத்து ஊக்கமுடன் கொண்டதென்றல் உடனே சாகும் ஆமப்பா தலை குனிந்து கண்ணும் மூடி நன்றான பெருமூச்சு நடுக்கம் காணும்.

**14.** காணப்பா நாளிகை தான் மூவெட்டையா நன்மையுடன் இளக்குமுறை நவிலக்கேளு ஓடப்பா எடுத்திருத்தி அரையாமல் தான் உத்தமனே உச்சியிலோரடியும்

போடே ஆரப்பா கண்டத்தில் அணுவாகத்தான் அசைத்து விடு இருபுரமும் கயறு போலே மாறவே கறியுப்பு அன்னப் பாலும் மைந்தனே கொடுத்துவிட மாறும் தானே.

15. மாறுமடா உறக்கத்தின்காலம் ஒன்று மைந்தனே சொல்லுகிறேன் மருவிக்கேளு தேறுமப்பா இப்படியே தேசத்தோர்கள் செப்புகிற காலத்தில் தெளிவேதென்றால் வேறுபடும் நாடி தன் அறுகு பற்றி விரல் பதியும் குளி வதிலே உறக்கக்காலம் கூறு படாகாலமது கொண்டபேர்க்கு கொஞ்சி திருவாய் பிளந்து நாக்குத்தள்ளும்.

16. தள்ளுமப்பா உடல் வெதும்பி உணர்ச்சை மாறும் தளர்ச்சியாய் உறக்கமது தானுண்டாகும் விள்ளு மப்பா நாளிகைதான் தொண்ணூறுக்குள் விசிதமாய் இளக்குமுறை வீசுறேன் பார், தள்ளுமப்பா எடுத்திருத்தி அசையாமல்தான் அப்பனே உச்சியிலோ ரடியும் போடு கொள்ளுமப்பா பிடரியின் கீள் ஒன்று குத்தி கூசாமல் பிடரி வட்டம் தடவிடாயே.

17. தடவியே ஏலமிட்டு அன்னப்பால் கொள்ளுதப் பாமல் இந்த வர்மம் இளகும்பாறு தடர்குறியாய் இன்ன மொன்று சொல்லுகிறேன்கேள், தும்மி என்ற காலமது அதற்குப்பேரு வீடப்பா இடைபட்டதொண்டையின்கீள் குளிவிலேயா, இந்த மேலான வர்மமது கொண்டுதானால் சுழட்டியே மேல் துடித்து கண்ணும் மூடும் கமலமதும் நாசியில் நீர் ஒலிக்கும்பாரு.

18. ஒலிக்குமப்பா முகம் கருக்கும் வேர்வை யுண்டாம் உத்தமனே நாளிகைதான் பதினெட்டிற்குள் பலிக்குமப்பா எடுத்திருத்தி மறுபுரத்தில் பத்திரமாய் கைபொத்தி பதமாய், தடவி உச்சியிலோரடியும் போடே வசமாகவே நாசி செவி சுக்காலூதி அன்னப்பால் சிரகத்தி லருந்திடாயே அருந்திடவே காலமது இளகும்பாறு.

19. அலிக்கும்பார் ஆச்சரிய நேர் வர்மம் அப்பனே இது இருக்கும் இடத்தைக் கேளு நலிக்குமப்பா கூம்பின் இருவிரலின் தாள்வாய் நலமாக அதில் வர்மம் கொண்டால் கேளு இந்த உடல் குளிர்ந்துவிடும் வேர்வை காணும் இரும விலே ரத்தம் வரும் இதிலுலேதான் பொருந்திடவே நாளிகைதான் பதினெட்டிற்குள் புத்தியுடன் உச்சியிலோ ரடியும் போடு போடப்பா அடியுடனே புறங்கால் கொண்டு புத்தியுடன் முதுவரியில் தலத்தை நோக்கி சாடப்பா சரீரமெங்கும் தடவித்தூக்கி தண்ணீரைக் கொடுத்துவிடு தருகிப்போகும்.

20. அடித்திடவே காலமது இளகும் சொன்னேன் அடக்கமென்ற பச்சிலையை தாக்கச்செய்து துரத்திடவே இந்த வர்மம் அடக்கம் தட்டும் துரோகிகளைப் பாராதே தட்டிப்போடு வீடப்பாபிலத்து உயிர் மீளும் சொன்னேன் வெற்றியுடனின்னமொரு அடவுகேளு.

21. ஈடப்பா முண்டெலும்பில் இரையோர் மூன்றில் நதிப்பான பக்கத்தில் அடப்பக்காலம் காலமென்ற செய்குறி கள் கருதிக்கேளு கடுமையடா தளர்ச்சியுண்டாம் செவி கேளாது கோலமென்ற காலமிச்சம்கொண்டு தானுல் குறி யான தேகமெல்லாம் திமிர்ந்து போகும் காலமென்ன மறு புரத்தில் கால்கொண்டு தட்டியே முதுகு நெஞ்சு தடவித் தாள்த்து வேகமென்ன நாளிகைதான் பதினெட்டிர்க்குள் வெற்றியுடன் இளக இஞ்சியன்னப்பாலே.

22. அன்னம்போல் இன்னமொரு அடவுகேளு அப் பனே நேர் வர்மம் தலத்தின் கீளே சொன்னேன் பார் அங் குலம்தான் நாலின் கீளே சூட்சமடா உருமி என்ற கால மப்பா இன்னும் பார் கண்விளிக்கும் செவி கேளாது காது இரைந்து மேல் மூச்சிட்டு இருக்கும்பாரு உன்னும் பார் நாளிகைதானிருபத்தேளில் உத்தமனே இளக்குமுறை உரைக்கிறேன் கேள்.

**23.** உறைக்கவப்பா எடுத்திருத்தி கை பிணைத்து உந்தமனே உச்சியிலோரடியும்போடு கலக்கவே செவி ரெண்டும் சுக்காலூதி கால் மடக்கி முதுவருயில் கருத்தாய் தட்டி விரைக்கவே சரீரமெங்கும் தடவித் தூக்கி விட்டுவிடு அன்னப்பால் சுக்கும் சேர்த்து நிமைக்கவே எழுந்திருப்பான் நிச்சயம் சொன்னேன்.

**24.** நிற்ணயமாய் இன்னமொரு அடவுகேளு கேளடா முண்டெலும்பில் தாள்வாய் கெணிதமுடன் இருவிரலில் சுருக்கிக்காலம் பாளடா செய்யாதே உலகத்துள்ளே பாவ மடா வலி அத்திச் சுருக்கி என்பார் நாளடா காலமது கொண்டதானல் நாற்பது நாளைக்குள்ளே முளம் ஒன்று குருகிப்போகும்.

**25.** கேளடா உடல் முசும்பும் குளிர்ச்சை காணும் குறிப்பான நாளிகைதான் பதினெட்டாகும் ஆகுமப்பா இளக்குமுறை அறையக்கேளு அணைத்திருத்தி மறுபுரத்தில் புரங்கால்கொண்டு வேகமாய் தட்டொன்று தலைமேல் கை யும் விபரமுடன் அணைத்திடிக்க விசிதமாகும் போகுமப்பா முதுவரியில் புறங்காலாலே புத்தியுடன் தட்டிவிடு புதுமை யாக போகுமப்பா சேர்த்தணைத்து தடவும்போது எழுந் திருப்பான் இந்த வர்மம் எவரும் மெய்க்க.

**26.** மெய்ப்பதென்ன அன்னப்பால் கறியுப்பும் சேர்த்து மேவியே கொடுத்துவிட மாறும்தானே மெய்ப்ப தென்ன இளகாவிட்டால் இசைந்துசேர்த்து நீ குறி குணங் கள் கண்டு 'இளக்குவாயே இப்புவியோர்க் கிந்த வர்மம் செய்யவேண்டாம் இருக்கையிலே மண்டலத்தில் இறந்து போமே.

**27.** இறந்துபோம் முண்டெலும்பில் இரை மூன்றில் இயல்பான சிறிய அத்திச் சுருக்கிக் காலம் பரந்துபோம் வலிய அத்திச் சுருக்கி போலே பாலகனே குணமது தான் பகரக்கேளு சிறந்ததென்ன நாளிகைதா னிருபத்தேளில்

சேர்த்திருத்தி இருபுரமும் திரிச்சுத்தட்டி அணுவாக முது வரியில் புறங்கால் கொண்டு அணைத்து நீ தட்டொன்று அரைந்திடாயே.

28. அணைத்து நீ கைபிணைத்து தலைமேல் வைத்து ஆச்சரியம் உச்சியிலோரடியும் போடு சிறந்து நீ வெற்றிலைக் காம்பதுவும் சுக்கும் சேர்த்து இரண்டையுமே சிறக்கத்தான் செவியிலூதி தேர்ந்து நீ சேர்த்தெடுத்து உதரும்போது தெய்வத்தின் சக்தியினால் இளகும்பாரு கறந்துமே அரிசி யுறிபலமே சுக்கு கண்டுகொண்டு அன்னப்பால் கணக்காய் சேரே. சேர்த்தப்பா அன்னப்பால் கொடுக்கும்போது சித்திரமாய் இந்த வர்மம் இளகும்பாரு.

29. பாரப்பா கல்லிடையின் காலம் சொல்வேன் அப்பனே ஆச்சரியம் தீதாமையா ஊறப்பா மடையருக்குக் கொண்டு தானல் உத்தமனே விதை ரெண்டும் காணுதப்பா, ஓமப்பாமெய் எல்லாம் தளர்ச்சி காணும் உத்தமனே சத்தங் கள் மூச்சாடாது.

30. பக்கென்று நீர்பிடிக்கும் வயறு ஊதும் பொருந்தலே மூச்சாடாதுரங்கும்பாரு சார்ந்தென்ன ரத்தம் வந்து கட்டிக்கொள்ளும் சதைவளர்ந்து முடுகுமடா விரைந்தே. பார்த்தென்ன கலசம் மூன்றண்டை கூட்டி பத்திரமாய் ஆளொன்றைப் பிடிக்கச்சொல்லி காத்தென்ன நெற்றி தனில் விரலுங்கொண்டே ணுகை முறையாய் உச்சியிலோரடி யும் போடே.

31. போடப்பா முதுவரியில் புறங்கால்கொண்டு புத்தியுடன் தட்டிவிடு புதுமையாக ஆடப்பா கால்தூக்கி சேர்த்திருத்தி அப்பனே இடக்கரத்தால் பிடித்துக் கொண்டு இரங்கிய கல்லதுதான் மேல்போகாமல் வீடப்பா விதை பிடித்துத் துணியை சுற்றி வித்தகனே நீரெலிப் பாய் திரிநாள் மட்டும் நாடப்பா மந்திரத்தை சொல்லக் கேளு.

2

32. நங் மங் சிங் வங் ஸ்ரீம் நலமாம் நன்றே. நாயகனே நீநாடோறும் மறவா பாதம் ஓதவே ஓங்கார வசிவா வா வா உத்தமனே அடங்கென்று உருதியாக போதவே ஓதி விடு நாற்பத்தெட்டையாபுத்தியுடன் அச்சரத்தைப்புகலக் கேளு, வா துடனே சங்கோண்மேபாட் உம் வளமான சூல முடம் ஸ்ரீயைக் காட்டி ஓதவே ஐங்தெழுத்தை அதிமேல காட்டி அருமையாய் சேர்த்திடவே ஆரும்பாரே.

33. பாரப்பா படுவர்மம் பன்னிரெண்டும் பாலகனே இப்பாகம் முறையே சொன்னேன் ஊறப்பா அடக்க மென்ற காலம் தன்னை உத்தமனே உனக்கறிய உரைப்பே னையா ஆரப்பா ஆனாலும் காலம் கொண்டால் அப்பனே கொண்டதலம் குளிர்ந்து காணும் வேரப்பா சேர்ந்தணை யாய்ப் பார்த்துக்கொண்டு வித்தகனே திரைவளைந்து இளக்குவாயா.

34. வாரமென்ன இளகாத காலத்திற்கு மாத்திரை தான் இளக்குமுறை மாயோன் மாயமென்ன குருமுடிப்புக் காதிமூலி அப்பனே ஆரறிவார் தாளியாரும் ஞாயமாய் சார் பிளிந்து தாக்கும்போது நாயகனே வர்மமெல்லாம் இள கும்பாரே.

35. தாயென்ன தட்டுமுறை சாற்றக்கேளு சார்ந்து உடல் சேர்த்து இருதுடையும் கூட்டி கூட்டியே எடுத் திருத்தி உதரும்போது குணமாக உச்சியிலோரடியும் போடே காட்டியே செவிரெண்டும் சுக்காலூதி கால்மடக்கி முதுவரியில் கருத்தாய் தட்டி நலம்பெறவே கை காலும் தடவியப்பா பாட்டிலே சொன்னதொன்றும் விட்டிடா மல் பலன்பெறவே இவையடா அடக்கக் காலம் காட்டின தோர் செய்குறிகள் கருதிக்கேளு.

36. கடிமைப்டா காலமென்றகைபாகம் அறியவேண் டும் பாலமது போட்டாப்போல் நூறுக்குள்ளே பாடினேன் பன்னிரெண்டு தலமுமப்பா ஆலமுண்ட கண்டசிவன்

அருளினாலே அறஉணர்ந்து பூரணமாய் எவ்வுயிர்க்கும் கோலமென்னும் இன்பமடா குருவின் பாதம் கும்பிட்டால் அம்பிகையும் குறிசொல்வாளே.

37. குறிப்பான தட்டுவர்மம் எட்டேயாகும் குருவினடிபணிந்தாக்கால் இன்னூல் வாய்க்கும். அறிவுடைய பிள்ளைகளே! இந்தச்செய்தி ஆர்சொன்னாராலும் அசாத்தியம் தானே நெறியுடையோன் என்றாக்கால் இன்னூல் வாய்க்கும், நிச்சயமாய் காலமிச்சம் கொண்டுதானால் பிரிவுடனே நாளிகைதான் பார்க்கவேண்டாம் மெய் மயங்கி சிறமமிட்டால் உயிரும் போச்சே.

38. போச்சப்பா எண்ணையொடு குளிகை நெய்யும் பொருந்தவே கிருதமொடு கிளாயம் பொடிகள்தானும் ஆச்சப்பா கைமுறையும் செய்முறையும் சொன்னேன் ஆனதினால் குண முறைகள் குரு முறை என்று அடக்கம் சொன்னேன் போச்சப்பா இன்னூலின் பெருமை எல்லாம் பேர்கொண்ட சித்தர்களே சொல்லார் சொல்லார் மூச்சப்பா நாதவிந்து ஆதிபீடம் முறையறிந்தோர் வர்மாணி முழுதும் காண்பார்.

39. காணவே மூக்கு நடு மையந்தனில் கலங்கவே இடிகளடி கொண்டதானால் தோணவே விளி மயங்கி ஒளிதான் வீசும் சோர்புடனே தளர்ச்சையும் மேவி மூச்சாடாமல் துஷ்டா சாகும் தோணவே தொடுவர்மத் தருமை தன்னை சித்தர்களே சத்தியமாய் பேசக்கேளும், நாளவே உச்சிதன்னில் குளியோரத்தில் நன்றான இடிகளடி கொண்டதானால் நாசம் தானே.

40. நாசமாம் புறந்தலையில் நடுநேர்பற்றி நன்றான பெருநரம்பில் காலம் ஒன்று தோஷமாம் சுளியாடி வர்மத்தின்கீழ் சொல்லுகிறேன் காலமொன்று சூட்சமாக பேசக்கேள் சிரசு வட்டம் ஓட்டை மூன்றில் புறமண்டையானதொரு மூளைதன்னில் வீசக்கேள் மரணம் வரும்பிழையாதென்று விசித்திரமாய் என் குருவும் விளம்பக்கற்றேன்,

41. கற்றேறனே கண்டத்தின் மேலேயுள்ள கொடி தன்னை காலமது மூன்றும்போக உரையான இதற்கு எண்ணே ஒற்றல் பூச்சு ஓமோகாமோ இவையறிந்து செய்யாமல் விட்டால் கற்ற நூல் அத்தனையும் பாளாய்ப் போச்சே கருத்துடனே மருந்து செய்தால் சாணுதொன்றும் பெற்ற பேருள்ளவர்க்கு இன்னூல் கிட்டும் பேசுகிறேன் தொடு வர்மம் பேர்சொல்வேனே.

42. பேரென்ன முதுவரியில் பிட்டிக்குமேல் பேர் கொண்ட வர்மமெல்லாம் பேசக்கேளு ஆரென்ன கைப் புட்டி எல்லுக்குமேல் அருகுபற்றி இடியடிகள் கொண்ட, தானுல் ஆறுநாளில் கைவிளங்காதி நமல் தோன்றும் சீரென்ன திருமேனி எண்ணெயினுல் தீரும் கண்டாய்.

43. கண்டாயோ சுளியாடி வர்மத்தின் கீழ் கைப் பூட்டு எலும்பின் கமுக்குழியில் தானே தூண்டுபிடி கொண்டால் அடிக்கும் தேகம் சோமைமயமிருமலிலே துவறும் கண்டாய் விண்டது கேள் இது மருந்தாய் சொன் ேனுமிந்த மேலான எண்ணையினுல் விட்டுப்போகும் அண்டர்களும் அறிவார்களோ விண்டதுண்டோ.

44. ஆச்சரியம் தொடுவர்மத்தருமைதன்னை தானே பார் புட்டியின்மேல் சுளியின் கீளாய் தாக்கடா நடுவரியில் இடியே கொண்டால் பின்னையப்பா யாரறிவார் உலகத் துள்ளே பேசரிய சயரோயும் சுரமுமுண்டாம் முன்னே தான் முதுவரியில் கீள்பிட்டி பற்றி மூர்க்கமுடன் இடி கொண்டால் முடவனுவான் என்னதான் இதற்கெல்லாம் எண்ணெவைக்க இயம்புகிறேன் பின்னுலே இதற்கு மைந்தா.

45. ஆக்கமுள்ள தொண்டையின்கீள் கூம்பின் மேலாய் அடி இடிகள் கொண்டதென்றல் ஆறுநாளில் வாய்குளரி கபம் தொந்த சுரமும் தோன்றி மயங்கிவிடும் பின்தலே சுற்றி வாந்தியுண்டாம் பார்க்குமுன்னே நாக் குளரி மரணமுண்டாம் பண்டிதரும் கைவிடுவார் பாரு

மென்பார் வாக்குடனே நாக்குளரி இருந்ததானால் மருந்து செய்தும் எவ்வுயிரும் மாண்டுபோமே.

46. ஆகாத மாத்திரைதான் கடந்ததென்றால் மைந்தனே கண்டறி நீ மருந்தியாதே தாளாதே துஷ்டருக் காய் என்று இந்தசத்தியமாய் வர்மாணி சாற்றினேம் யாம் பாழான சொல் ஒன்றும் சொல்லவில்லை பரீக்ஷையாய் என்று சொல்லிப் படித்திட்டேன் நான் கேளடா எட்டு முகவர்மம் தன்னைகூர்ந்துபார் தலங்குணமும்கூறுவேனே.

47. கூறக்கேள் மார்பிலிருவிபலின் மேலாய் கூனெ லும்பின் இடைபற்றி கொண்டவர்மம் மார்க்கம் கொள் வெள்ளிபல் சோரைபற்றி மதியான ரவிமீரி அழலாய் நாமறிய மேலிளகி ஒன்பதில் அக்கினியாய் சுரமும் தோன் றும் மந்தமுடல் மல்லாந்திருக்கவெட்டாது வேறுகளிப் படியே திசைஎட்டிற்கும் மேவியே வர்மமெட்டும் வளியே சொல்வேன்.

48. மெய் என்று சொல்லிவைத்த நூல்கள் மெத்த வீணாகப்போச்சுதிந்த வித்தை எல்லாம் கை என்றும் காலென்றும் அறியா மூடர் கற்றவர்போல் வர்மமெல்லாம் கைக்குள் என்பார் பொய் சொல்லி வயிறு பிழைக்கும் புலையர் கூட்டம் பொறியரிந்தோமென்று சொல்லிப் பொருள் தாவென்பார் ஐயையோ கருவி தொண்ணூற் றாறுக்குள்ளே அடங்குகின்ற தலமறியார் அசடர்தாமே.

49. தானென்ற தட்டுமுறை தடவுமார்க்கம் தலங் குணங்கள் கண்டிருந்தும்முறை சமாதானங்கள்வானென்ற அடி ஒடிகள் இடிகள் கொண்டால் வகை வகையாய் கைபாகம் அறியவேண்டும் கோவென்ற என் குருவினடி பணிந்து கூறுவேன் அடக்கத்தில் குறியைநாடி ஏனென்ற தட்டுவர்மம் மார்பிலேயே இடைகள் இரண்டு விரல் சுற்றி எதுவானாலும்.

50. ஆனாலும் மார்பிலெட்டு வர்மங்கொண்டால் அடவான விசைநரம்பு குளிர்ந்து காணும் மானே கேள்

உருப்பெல்லாம் உளைச்சல் சோம்பல் மகத்தான மரணம் நின்ற நிலைகளெல்லாம் துடிதுடிக்கும் அன்னமது செல் லொட்டாது அன்று முதல் தேகமெல்லாம் மெலிந்து போகும் நாளாக க்ஷயரோகம் வந்துசேரும் நாநாறு நாள திலே தேகமேது?

51. ஏதுவான புஷ்டிக்குமேல் இடை நடுவில்தானே குரல் வளையின் மேலப்பா ஏகனொரு சங்குதிரி அங்குண் டுண்டு பொதுவான சங்குதிரி கொண்ட பேர்க்கு பொங் கமுடன் நீர் பிடிக்கும் மலம்போகாது ஏதுவான கால் முடங்கள் உளைச்சல் சோம்பல் கெணிதமுடன் திமிராகி, அறிவும் மாறும் சதுவான திருமேனி எண்ணை வைத்துத் தாக்கடா இந்த வர்மம் தீர்ந்து போகும்.

52. போகுமடா சுருக்கியுன் மேல் மூவிரலுக் குள்ளே பொரி கலங்கும் முண்டெலும்பில் வர்மம் கொண் டால் ஆகுமடா அகங்கலங்கி பேதி தள்ளும் அப்பனே குளிர் சுரமும் மயக்கமும் ஏகுமடா அடக்கத்தைத்தடவி மெள்ள எழுந்திருந்தால் செந்தெங்கின் கசாயம் தாக்கே ஆகுமடா சுவராதி எண்ணை தாக்க அப்பனே இந்தவர்மம் அடக்கம் தீரும்.

53. தீரவென்றால் உந்திதனில் தொப்புளின்கீள் திரமான நால்விரலில் மூத்திரக்காலம் சேரவென்றால் காலமது கொண்டபேருக்கு ஜன்னிவந்து உடல் மயங்கும் மூத்திரம்பாயும் நீரானநீரெல்லாம் இறங்குமிந்த நிறமான் தேகமெல்லாம் திமிர்போலாகும் ஆருனபின்புறத்தில் கீழ் பிட்டிக்குமேல் அறிவாகக் கால் மடக்கி அறிந்துதட்டி.

54. தட்டியே முதுகு நெஞ்சில் தடவித்தாழ்த்து சரியான அடக்கமென்ற பச்சிலையை அறிந்து தாக்க முட் டிய கிரிச்சன்னமும் அடங்கிப்பின்னை முறையான நீர வும் தீர்ந்துபோகும் போகுமடா கையடக்க காலத்தின்கீழ் கருத்தான தண்டில் இருவிரலின் கீழே விந்துவர்மம்

வெளியான காலமது கொண்ட பேர்க்கு போக்கென்ன தண்டடியில் நீர்தான் கெட்டும் பேதகமே நீர் தரித்து துள்ளிபோடும்.

55. போக்கென்ன இந்த வர்மம் கொண்ட பேர்க்கு அடவாக ஏலாதிக்கஷாயம் அப்பனே போட்டு உள்ளில் கொடுத்திடாயே போக்கென்ன இந்த வர்மம் போகும் சொன்னேன் புண்ணியனே தவறாமல்பொருந்திச்செய்யே.

56. செய்யவென்றால் வித்து இரண்டும் பதிந்த சார்பில் செயலுடனே அதின் நடுவில் அண்டைக்காலம் நையவென்றால் நல் துவாரம் அருகில் கொண்டால் அகம் உளையும் நீர் தரிக்கும் அபானம் விம்மும் பையவென்றால் மலம் கழிந்து ரத்தம் காணும் இருபுறமும் நயனமது தள்ளிக்காணும் தய்யமே இந்த வர்மம் கண்டபேருக்கு சுக்காலே கஷாயத்தை சுருக்காய் தாக்கே.

57. தாக்கடா தூக்கிவிட்டு உதரும்போது நாக்கடா சபைதனிலே நீட்டிப்பேசி நலமான கோர்வை எல்லாம் கைக்குள் என்பார் போக்கடா மூடர்கள்தான் சொன்ன வார்த்தை புதல்வனே பிடரிதனில் பெருநரம்பில் மயக்கமாகும் அதுவேதான் சுளியாடி வர்மமாகும். ஆகும் இந்த சுளியாடிக்கொண்ட பேர்க்கு அடவான பனி சுரங்கள் பைத்தியரோகம் போகுமிந்த சுவராதி எண்ணை வைத்து புகழ்பெறவே கிரிசாத்து கஷாயம் செய்யே.

58. ஏகுமிந்த சுளியாடி தீர்ந்துபோகும் ஏப்பமிட்டு இந்த வர்மம் இருக்குமாகில் வாகுபெற வர்மமணிக் குளிகை தானும் வளம்பெறவே கிஷாயத்தில் உரைத்து மாட்டை மாட்டியே உச்சியின் அருகுபற்றி மகத்தான பூட்டெலும்பு வர்மம் இரண்டேயாகும் நாட்டிகமாய் இடிகளடி கொண்டதானால் சாதகமாய் தலைபிடிகள் மூலரோகம் வாட்டிடவே பீனிசமும் வரட்சை மேகம் வகையான உள்நாக்கில் கெந்த நாற்றம் போட்டியங்கள் இல்லை

யப்பா சொன்னேனிதை புகழ்பெறவே சுக்கெண்ணை
னாசிக்கேற்றே.

**59.** ஊற்றியே இப்படி நீ மூன்று நாள் செய்ய்
உண்மையடா வல்லாரை அரைத்துத்தாக்கே சாஸ்திரத்
தில் சொன்னதொன்றும் விட்டிடாதே தகமைபெரும்
உள்வர்மம் மூன்றுண்டாச்சே மாத்திரையாய் செவி
தனிலே குருந்துக்குற்றி மகத்தான வர்மமது கொண்டதா
னால் நேத்திரமாய் சன்னி வரும் கடமும் தோன்றும் நிர்ண
யமாய் திங்களதில் மரணமாகும்.

**60.** மரணமென்ற திரித்தைலம் செவியில் ஊற்றி
மாற்றமில்லை உள்கொடுத்து மேலும்பூசே மரணமென்ற
மூலைக்காம்பின் தாள்வாக நலம் பெரிய காரீரல் வர்மம்
காணே நயம்பெறவே வெள்ளீரல் சமீபம்தானே விரண
மென்ற விசைநரம்பு தாழ்ந்து மொத்த வில்லுபோல் நிமிர்ந்
திருக்கும் மேனியெல்லாம் அரண்மனையில் பிரியக்கால
மாகும் அப்பனே அசாத்தியமென்றுரைக்கலாமே.

**61.** ஆமென்ற அலவதுதான் முடிந்த மூட்டில்
அலவாடி என்றதற்கு நாமமாமே நாமமென்ற வர்மமது
கொண்டதானால் நாள் ஒன்றில் வாய் சோணும் வெட்டி
வாங்கும் ஓமென்ற வாய் பிளக்கும் அண்ணார்ந்தேதான்
ஒப்பரிய நரம்பெல்லாம் சிலிர்த்து நிற்கும் நாமென்ற மூக்
கூட்டு விட்டுத்தேய்த்து வளமான நாசிக்கு நசியம்செய்யே
அழகான திருமேனியதனால் தீரும்.

**62.** செய்யாவிட்டால் இதற்கெல்லாம் ஒற்றல்
போட்டு திறமான கழுத்தடியில் காரைக்குள்ளே நையப்பா
இலங்கு வர்மம்என்று பேராம் நலமான குத்திடிகள் நசுங்
கல் கொண்டால் நேராக கை உயரமாட்டாது என்று ஏங்
காமல் மாருப்பு போட்டால் போதும் ஐயப்பா குருக்
கோடே கொளுத்திக்கொள்ளும் அழகான திருமேனி
யதனால் தீரும்.

**63.** திருமடா காரையதின் முன்பில்தானே திற
மான குசல் வர்மம் அதற்கு பேறு ஆறடா கையதிலே

வீக்கமுண்டாம் நேரடா கையதனை உயர்த்தவிடாமல் நிர்ணயமாய் நித்திரைதான் காணுதப்பா சேருமடா திருமேனி எண்ணைவிட்டு செயலாக மூன்றுநாள் தடவத்தீரும்.

64. தடவுகின்ற முடிச்சியதின் மத்திபத்தில் தயவான குளி நரம்பில் சுருக்கு வர்மம் அடவியிலே இந்த வர்மம் கொண்டதானால் அடவாக நடுவிரலைச்சுருக்கிக் கொள்ளும் வளமான முக்கூட்டுக்கொடுத்து மைந்தா பத்திரமாய் தடவி மெள்ள நெட்டி வாங்கே.

65. தடவுகின்ற தோளிடையின் மத்திபத்தில் வாங்கியந்தகரமதிலே முட்டுவர்மம் மகத்தான அடியிடி கள் கொண்டுதானால் தாங்கியந்தகரமதிலே கோச்சுமாகில் தயவாக விருவிருத்து நொந்துவீங்கும் மாமிசத்தில் ரத்தம் மாறிவிடும் மகத்தான வல்லாரை பிளிந்து தேய்க்க நீங்குமடா தடவி மெள்ள நெட்டிவாங்கி திறமையாய் உள்ளுக்குக் கொடுத்திடாயே.

66. கொடுத்திடுவாய் கோச்சல் பிடிவிட்டுப்போகும் குணமான முட்டிடையில் மொளியின்வர்மம் அடுத்திடவே மொளிவர்மம் கொண்டதானால் அடவான அசைவதிலே வீக்கமாகிக்கொடுத்திடவே வர்மத்தில் விரணமாகி தேமென்ன முன்னெலும்பு முறிந்ததென்றால் படுத்திடுவான் பிணியாளி பலரும்மெய்க்க பரமனுடகிருபையினால் இளகும்பாரு.

67. பரமெனவே பழந்துணியில் வளப்பஞ்சுத்தி பத்திரமாய் முறிவதிலே எலும்பைத்தள்ளி ஆமெனவே வளயமதை அதிலேசாக்க அடவானவல்லாரை பிளிந்து தாக்கு சேமெனவே முறிவெண்ணை மெத்தவாங்கி செயலான கைவிரலின் மீதில்போடு நீரானநீரெல்லாம் வற்றிப்போகும் நிசமாக புண் முதிர்ந்து வளையம் வீழும்.

68. விழுமந்த முன்கையில் மணியைப்பற்றி விழுமந்த மணிபந்தவர்மமாகும் தாழுமிந்த மணிநடுவிலடிமுறிந்த தானால் தயவான அடியெலும்பு முறிந்துவீங்கும் வாகுமிந்த

வர்மமது முறிவுண்டானால் வளமென்ன பன்னிரெண்டில் மரணமாகும் நாளதுதான் கழிந்ததென்றால் நவிலக்கேளு நன்மையுள்ள புடில்லாச்தாளிச்சாற்றில் நல்லுளுந்து விதைத் தன்னை அரைத்து மைந்தா அளவான துணிதனிலே வாரிக் கொட்டிசெதற்றே.

69. சுற்றுகின்ற துணியதிலே நாலுகிளி சுருக்காய் கட்டி முறிவில் சமமாய் வைத்து முன் சொன்ன துணிதனைச் சுற்றிமேலே முன்றுகின்ற முறிவெண்ணை தாரைகோறி நய மான வல்லாரை பிளிந்து உள்ளே கரண்டியிடை சுகமாகத் தாக்கிப்போடு பற்றுகின்றவர்மமது தீரும் சொன்னேன் பரமனருள் கிருபையினால் தீர்ந்தாலாச்சு பெரியவரும் எட்டு விரல் முன்னே தள்ளி வெகுவான மணிக்கட்டில் உள்ளே தானே.

70. கொண்டுதானால் கண்மயங்கி மணிநடுவில் இரைக் கும்தேகம் மணி என்றால் வெள்ளைதனில் அருகுபற்றி மத்தி பத்தில் வளைவதில் துதிக்கைவர்மம் கணீரென்று ஓசைபோல் கொண்டுதானால் கண்பிசையும் மணிக்கட்டு விரைக்கும் தேகம் தானெனவே வளபமாய் நீரும் கெட்டி அகமெல்லாம் தளர் சையினால் வியர்க்கும் தேகம் தானெனவே வல்லாரை தாக்கி மைந்தா நயவான நெட்டியும்தான்வாங்கிவிடு தீர்ந்துபோகும்.

71. போகுமடாவெள்ளையது உள்ளங்கையில் பூரண தெச்சணையின் காலம்கொண்டால் ஆருபடா இந்தவர்மம் கொண்டபேர்க்கு அடவான சிதம்வரும் சன்னிதோன்றும் போகுமடா உயிர்பிரியும் நோயுங்கொல்லும் புண்ணியனே கபம் தோன்றும் மரணமாகும் ஏகுமடா மூன்றரைநாள் கழிந்ததானால் எழுந்திருப்பான் இந்தவர்மமெல்லாரும் மெய்க்க.

72. மெய்யப்படிதென்ன இளநீரும் கசாயம்செய்து வேணபடி கொடுத்திடுவாய் வர்மந்தீரும் கர்ப்பமென்ன கை யிடையில் கனமான கவளிக்காலம் கனமான மூன்று வர்ம

மதுவேயாச்சு இப்படியே பெருவிரல் இடையில் இடுக்கு வர்மம் பேதகமே இல்லையடா குணம் ஒன்றாகும் முற்கோப மில்லார்க்கு கிடைக்குமின்னால் மூடரைப்போல் திரிவார்க்கு கிடையாதென்றே.

73. ஏனென்ற இந்த வர்மம் கொண்டபேர்க்கு இருக் கையிலே ஒரின் நடி கிளிந்தபின்பு நன்றெனவே கையில் வெள்ளைக்குள்ளே எல்லாம் நலமான வெப்புருதி வெடிப்புண் டாகும் குன்றுமல் தீர்க்க அப்பனே சொன்னேன் இப்போது மருந்து குறையாமல் இளஞ்சீரகத்தைவாங்கி நன்றாக சீர கத்தை பொடித்து மைந்தா மயமான சிவனார் வேம்புத் தயிலம் சேர்த்துடனே மண்டலமும் கொண்டாயானால் தீர்ந்து போம் இந்தவர்மம் திடம்கண்டீரே.

74. பார்த்தோமே பக்கத்தில் சொன்னேன் மைந்தா பகருவேன் மறுபுறத்தில் இதுபோலாமே நேத்திரமாய் துடையடியில் பதைக்காலவர்மம் நேரான வர்மமது கொண் டதானால் சத்தியமாய் காலதனை பின்னிழுக்கும் தயவான பக்கவாதம் தானுண்டாகும்.

75. ஆகுமடா துடைநடுவில் துண்டு வர்மம் அடவான துண்டிடையில் நடுவில் பர்நொடி வர்மம் ஏகுமடா துடை முதுகில் ஆமைக்காலம் எழுகின்ற மூன்று வர்மங்களும் குணம் ஒன்றாகும் போகுமடா இந்த வர்மம் கொண்டதானால் பொருத்தசைந்து கால் நடக்கமாட்டாதென்றே.

76. என்றெனவே கால்தனில் முட்டுவர்மம்எழுகின்ற மூவிரலில் பக்கவர்மம் நன்றான இருவிரலில் நைந்த வர்மம் நலமான அசவுதிரிகால வர்மம் குன்றான பெருநரம்பில் குளிர்ச்சி வர்மம் குறை வருமே இந்த வர்மம் ஆறும் கொண் டால் கூடுவிட்டுப்பிரியும்வரை முடவனாவான் நன்றான இதற் கெல்லாம் மருந்தேயில்லை மகத்தான விஷமுட்டி தைலமிட் டால் தீரும்தானே.

77. திருமடா முழங்காலில் வர்மங்கேளு திறமான மையமதில் குதிரைமுக வர்மந்தான் ஆகுமடா காலமது கொண்டபேருக்கு அடவான அஸ்தியதில் விஷமே பொங்கி நேருமடா அத்தலத்தில் விதனமாகி நிர்ணயமாய் புண்பெருகி மாறுதென்றே பாரடா பரத்தின் கிருபையாலே பார்தனிலே விஷப்பச்சை எண்ணையாலே தீரும் கண்டாய் கண்டாயோ அங்குலந்தான் நாலின்கீழே கடுமையடா கோம்பேரிக்காலமாகும் மண்டலத்தில் எவரறிவார் இந்தச்செய்திவிண்டாயோ வியர்த்துமெள்ள விம்மலேலும் வீசியதோர் சன்னி வரும் விசையதாகும் மகத்தான திரித்தைலமதுவால் தீரும் நன்றான இஞ்சியொடு கஷாயம் செய்யே.

78. செய்யப்பா மூவிரலின் கீழேதானே திரமான முன்கரர்ப்பில் முடிச்சிவர்மம் ஐயப்பா அதின்நடுவில் கோணச் சன்னி வர்மம் அதிதிரமாக செய்குணத்தை விளம்பக்கேளு மையப்பா ஜன்னிவரும் முகத்தைக்கோணும் நயம்பெறவே சரீரமெல்லாம் முருகிக்காணும் மையப்பா விசைநரம்பில் தளர்சை காணும் பாங்கான மரணம் வரும் மூன்றில் கொல்லும் குருக்கோடே கொளுத்திக்கொள்ளும்.

79. கொல்லுமடா நன்றாகப் பார்த்துப் பார்த்து கோணமல் குருபக்தி மனதில் வைத்து வெல்லுமடா இதின் விபரம் நன்றாய் சொல்வேன் வெற்றி எனற மூலிகையை நீ தான் தாக்கே நல்லுயிரிருந்துதானால் தீத்தைலம் நலம் பெறவே சேகரித்துத் தேய்த்துவாயே நல்லுயிரில்லாவிட்டால் மறவான பன்னிரெண்டு கழிந்ததென்றால் பகைத்திடாதே.

80. மறிப்பதற்கு மூவிரலில் பாதச்சக்கரம்மதியான வர்மம் கொண்டபேருக்கு இருபதுக்குள் கண் குளியும் இருமல் தோன்றும் இசையாத கபம் தோன்றும் இருக்கொட்டாது நயப்பெறவே சரீரமெல்லாம் முருகிக்காணும் கையப்பா விசை நரம்பு தளர்சை காணும் பாங்கான மரணம் வரும் மூன்றில் கொல்லும் கொல்லுமடா கூசாமல் நடையைப்

பார்த்துக்கோணுமல் குருபக்தி மனதில் வைத்து இசைந்த தோர் நாள் கழிந்ததாஞல் கழிந்தானதாறமெனத்தெளிந்து கொண்டு வெற்றி என்ற பச்சிலேயை உள்ளே தாக்கே வனம் பெரிய வர்மமது தீர்ந்து போகும் வசைவதற்கு வசை வெண்ணே மேலும்பூசே வல்லுயிரும் கடினமாய் இருந்துதா ஞல் மறைவான விதையிரண்டும் கனேத்து நிற்கும் மறை வில்லே மரணம் வரும் அறிந்துகொள்ளே.

81. கொள்ளவே அங்குலம்தான் நாலின்கீழே செய லான பெருவிரலிடையில்தானே பையவே அதனிடையில் அருதிக்காலம் பாங்காக ரத்தம் வந்திருந்து கொள்ளும் உய் யவே உளச்சலும் அதிகங்காணும் சாந்தமாய் திருமேனி எண்ணே மூழ்கே நையவே இந்த வர்மம் தீர்ந்து போகும் நலமான பெருங்கண்ணில் பூமிக்காலம்.

82 காலமது செய்கின்ற கருத்தைக்கேளு கடிமைடா நரம்பிளுக்கும் குன்னிப்போகும் உலாவுகின்ற நோயாளியை நீ இருத்திக்கொண்டு உடன்தானே கரமிரண்டும் கெட்டி வாங்கி நாலு நாளேக்குள் எண்ணே போட்டு நன்றான நரம்பு களில் தடவச்சொன்னேன்.

83 சொன்னேனே அடங்கலத்தின் காலம் ஒன்று சொன்னேன் காண் இந்த வர்மம் ஏகமாய் போகும் சூட்ச மடா வெள்ளேயதின் வலதுபுறம் மையத்தில் அடக்கக்காலம் மன்றான அடங்கலத்தில் கொண்டுதாஞல் மயங்கிவிடும் மரண மது வந்தே தீரும் நன்னயமாய் இந்த வர்மம் தலமே சொன் னேன் நலம்பெறவே வர்மமெல்லாம் தீருவதற்கு அடக்க மாகும் மெய்தீண்டாக்காலம் மானிடரே மெய்தீண்டா காலம் சொல்வேன் மகத்தான வெற்றி என்ற பச்சிலேயுமறியச் சொல்வேன்.

84 பச்சிலேயறியாத படையமெல்லாம் படைக்காகக் கச்சைகட்டிப்பாவம் செய்வார் இச்சையுறும் ஆசாஞய் பேரும் பெற்று இருதயத்திலென்னேப்போல் இல்லே என்றும்

அச்சுதனும் அறநாரும் அறியா மூடர் அகஸ்தியருர் அறிந்துரைத்த வெற்றி நூலே அட்சரமாம் ஆவிதன்னைப்பெற்ரு ரல்லால் ஆரறிவாருலகைத்திலருமைதானே.

85 தானுன வெற்றி என்ற பச்சிலேயை சாற்றக்கேளு சார்ந்த தண்ணீர் தயவுதன்னில் தனித்து நிற்கும் வானுன வயதுக்கு நூறுபத்து வகை தெரிந்தால் சுவாசம் வீசும் வல்லாரை என்பார் கோனுன சித்தருக்குக்கொடிய மூலிகோகாணும் செய்காணும் குருமுடிப்புக்காதிமூலி நானுன காலத்துக்கெல்லாமாகும் நல்லோராக உருப்புகளில் வசவுக்காகும்

86 ஆகுமிந்த மெய் தீண்டாக்காலமேது அடவான செவடுமுறை அறிவதேது போகுமிந்தச்செவடதிலே பெருக்கமேது போக்குடனே குன்றுதாங்கி மூலி ஏதுமக்கு மானிடரே இந்த மூலி எவ்வுலகும் கொளிஞ்சிபோல எங்குமுண்டு காதுனக்குத்தெரிவதற்குக் கருத்தைக் கேளு கனத்ததொரு கல்ஏற்ற தெரித்துப்போகும் ஆதுமக்கு வேர் பிடுங்க முறையைக்கேளும் அடவாக மூலியுட மூட்டில் சென்று ஓம் ஜல ஜலவென்று உத்தமனே ஒருநூறு ஓதியந்த வேரை வாங்கே.

87 வாங்கியே மணி வாங்கி வாயில்கொண்டு வாகானது படையதுபோல் வந்திட்டாலும் ஏங்கியே எவ்வளவு ஜனங்கள் மாளும் ஏகாந்த இந்த மூலிக்கு மெய் தீண்டாக் காலங்களாகும் தாங்கியே முன்னனந்தம் பின்னனந்தமாக தயவாக ஒன்பது சுவடு வைத்து நீங்கியே முகம் நோக்கித் தாண்டும்போது நிசமாக மயங்குமே பின் மரணமாகும்.

88 மரணமதுபிடிச் சிரமமிதுக்கெல்லாம் மகத்தான மந்திரமும் தந்திரமும் இதற்கொவ்வாது நாணமென்றதொடு மர்மத்தடக்கக்காலம் நவிலவே வல்லாரையாகும் சொன்னேன் காணுமென்ற படுவர்மத்தடக்கக் காலம் கருத்தாக வேலியுடபருத்திதானே தானமது இம்மூலி இரண்டும் கொண்டு கருத்தாக வர்மத்தில் தாக்கிப்போடே,

89 தாக்குகின்ற பொய் கை எல்லுத்துண்டு நாலும் தயவான காரெலும்புத்துண்டு நாலு ஆக்குகின்ற உறும்பு சந்தி முப்பத்திரண்டு அடவான குருக்கெல்லு அறுபத்தி ரண்டு தாக்குகின்ற வரி எலும்பு பதினாறும் தயவான சிர சதிலே துண்டு மூன்று நாக்கின்மேல் மடிப்பிதனில் துண்டு நாலு நலம்பெறவே கழுத்திலே கண்டம் ஆறுகண்டமென்ற சொக்கிதன்னில் உறுப்பு நூறு கனத்த சோதியாம்.

90 நரம்பு எழுபத்தீராயிரம்தான் துண்டமென்ற படு வர்மம் பன்னிரண்டு தொடுப்பான தொடு வர்மம் தோண் ணூற்றாறும் அண்டமென்ற மெய் தீண்டாக்காலமுதல் ஆதர வாய் மகத்தான வர்மம் அஸ்தி நரம்படவாகச்சொன்னேன் சொன்னேனையா மண்டலத்தில் யாரறிவார் இந்தச்செய்தி சொன்னேன்.

91 கஞ்சி முதல் கிஷாயம் தானும் மண்டை ஒற்ற லொடு பொடியும் பூச்சும் வகையான தைலமொடு முக்கூட் டெண்ணை தானும் நன்மையாய் ஓடி முறிவு வசவு கெட்டும் நலம்பெறவே பத்தியமும் நடத்தல் செய்கை பின்னியதோர் நரம்புகளை இழுக்கச் சொல்வேன் பிரியமதாய் கைமுறையும் செய்முறையும் சொல்லுவேன் கேளாய்.

92 கேளப்பா திரிகடுகு திப்பிலி மூலம் கெட்டியான உளிஞெயொடு சித்தாமுட்டி நாளப்பா பழந்துணியில் கிளி யாய்க்கட்டி நலமான அரிசியுரி அதன்மேல்போட்டு ஆளப்பா கஞ்சியதாய் பத்து நேரம் வளமாகக் குடித்திடுவாய் வர்மம் தீரும் பாழுப்பாபோமே கேள் பேசாமலருந்தும்போது பனி சுரங் களதில்சுரம் பறந்துபோமே.

93 போமப்பா திரிகடுகு அதிமதுரம் திர்ப்பிலி பொருந்த நற்சீரகம் ஈருள்ளி வாமப்பா இதுவெல்லாம் அருகன்வேரும் சேர்த்து வாங்கி நலமாக அரிசியிட்டு கஞ்சி யாக தாமப்பா மருந்தையெல்லாம் கிளியாய் கட்டி தன்மை யுள்ள கஞ்சி வயிற்றிற்கு குடிக்கும்போது உளிஞை சுடலாடி

சேர்க்கவும் பொதுவாய் புளியுப்பு நீக்கச்செய்து புத்தியுடன் பத்து நாள் குடிப்பாயானல் ஏதுவான ஈளையொடு இருமல் தோஷம் எப்பிளைப்பு பிடிப்பு வலிப்பு இருமல் நீங்கும ஏது வான காலமெல்லாம் நின்றுபோகும் என் குருவும் சொல்ல மொழியாலும் கேட்டேனே சதுவான தாகமெல்லாந்தீர்ந்து போகும் சத்தியமாய் இந்தமொழி சாற்றினேமே.

94 சாற்றுகிறேன் வர்மமணிக்குளிகை யொன்று ஒப் பரிய திரிகடுகு மதுரம் ஏலம் தயவான வெந்தயமும் ஓமம் கற்பூரம் ஆற்றினேம் சிங்கியொடு கொட்டம் தானும் அழ கானமேதையொடு புனுகும் சேர்த்து சாற்றினேம் தென் னம்பூ முருங்கைப்பூவும் வளமான சங்குதூதுவளையின் பூவும் பத்திரமாய் பூநாகத்துடனே அத்திப்பிஞ்சு புதுமையுடன் ஆடாதோடை ஆலம்பூவும் செஞ்சட்டி வில்லைப்பூவும் பாங் கான மாதளம்பூவும் கோரோசனை களஞ்சி இரண்டாம் ஐந் தும் கூட்டே.

95 கூட்டவே வகை வகைக்குக் களஞ்சி ஒன்றும் குங் குப்பூ கோரோசனை களஞ்சி இரண்டாம் வாட்டியே இது வெல்லாம் இடித்துத்தூளாய் வகையான குழியம்மிதன்னில் வைத்து ஆட்டியே சொம்பரக்கு கஷாயத்தில் அழகான ஒரு சாமம் பசுவின் பாலில் சுகமான பொன்னுவரை சாற்று லாட்டே.

96 ஆட்டியே குளிகையது துவரையாக அழகான கஷாயத்தில் உறைத்துத்தாக்கே வாட்டிடுமே வர்மமெல்லாம் மாண்டு போகும் வகையான ஈளையொடு மந்தாரகாசம் சுட்டி டவே சுட்டிடவே அஸ்திசுரம் மந்தாரகாசம் திறமான உள்ளு வர்மம் தாட்டிடுமே தாட்டிடுமே இக்குளிகை தாக்கும்போது தயவான வர்மமெல்லாம் தீர்ந்துபோமே.

97 குளிகை அத்தி இத்தி ஆல் அரசு ஆமநல்பால் மரத்தின் பிஞ்சி கூட்டிட அழகான நாயுருவி வித்துநாமே நீ வகைக்குக் களஞ்சியாக நன்மையுள்ள பொரிகாரம் லிங்கம்

பூரம் போமே நீ மதுரமொடு திரிசாதி திப்பிலி பொங்கமுடன் வகை வகைக்கு களஞ்சி அரையாய் வாங்கே இதுவெல்லாம் இடித்து நன்றாய் மைந்தனே குளியம்மி தன்னில் போடே.

98. போடப்பா கதலியுடமாணச்சாற்றில் பொருந்த நீ அரைத்துவிடு சாமம் மூன்று ஆடப்பா ஒரு சாமம் குமறிச் சாற்றில் அடவான ஒரு சாமம் வெற்றிலைச்சாற்றில் வாடப்பா மைபோலே அரைத்து வாங்கி நலமான குளிகையது பயறு போலே நாடப்பா இக்குளிகை தாக்கும்போது நிசமான சீதம் வலி சன்னி போகும்.

99. வர்மத்தின் கசாயம் ஒன்று சொல்லக்கேளு பொருந்திடவே சுண்டைவேராடாதோடை ஆகவே பண்பிலு தருவேரும் அடவான செந்தட்டி இசங்கின் வேரும் ஏகவே தூதுவளை கண்டங்கத்திரி எழுந்தமொரு ஓரிலை மூலியுமாக வாகுபெறவே இடித்துச் சேர்த்து அரிசிகளைநீர் குருணிநீர் தன்னில் போட.

100. போடடா அதிமதுரம் பலம்தான் வாங்கி புத்தியுடன் அதில் பாதி சுக்கும் சேறு ஆடடா கொம்பரக்குப் பலம் தான் ரெண்டு அடவாக இதுவெல்லாம் சதைத்துச் சேறு சேரடா கசாயமது அணலேமூட்டி வைத்துக்கொண்டு பாதியாகும்போது பாரடா கசாயத்தில் நாளிவாங்கி மறுசட்டிவைத்துக் கொண்டு கொட்டிடுவாய் கோழிரத்தம்விட்டு மைந்தா குணமான திற்பிலிமேல் பொடியும்போடே இரண்டுநேரம் அருந்திடவே அஸ்திசுரம் சுவாசகாசம் சுகமான உள்வர்மம் ஈடு ரோகம் தாட்டிகமாய் இக்கசாயம் தாக்கும்போது தயவான வர்மமெல்லாம் தீர்ந்துபோமே.

வர்மசூஸ்திரம் முற்றிற்று.

குருவே துணை.





## வர்ம பீரங்கி.

---

1. திருமுகன்தன்பாதம் சென்னியிலேந்திக்கொண்டு கருவொருநூலையானும் காசிதனிலேவிள்ள பெருகநூல்சொல்ல வில்லை. பேணியே இந்தநூலை பருகிய சித்தரெல்லாம் பார்த் தென்னை மகிழ்ந்தாரையா.

2. மகிழ்ந்தென்னைப் புகழ்ந்தபோது மாமலைதன்னிற் சென்று அகமகிழ்புவியின்கண்ணே யாருக்கும் அறியவென்று புகழ்ந்துயான் இந்தநூலை பூதலமெல்லாம்மெய்க்க சுகம்தமாம் பீரங்கியென்று சொல்லுவார் கும்பையோனே.

3. கும்பையோன் சொன்னபோது குணமுள்ள குமர வேலும் அம்பரர்க்கல்லால்இங்கு யாருக்கும் ஆகாதென்று தன் பெருபீரங்கிநூலை தான்வைத்துக்கண்டெடுத்து என்பெருமா னுக்கென்று இணங்கிநூல் எடுத்துவைத்தார்பாரு.

4. வைத்ததோர் நூலைத்தானும் மாதேவன் பார்த்த போது இத்திசையொருவன்காண இந்த நூல் கொடுக்கமாட் டார் சித்தர்க்கும் நமக்குமல்லால் சொல்லஓர் சுருதிமார்க்கம் பக்தருக்காகுமென்றால் பாவியோர்க்காகாதென்றே.

5. என்றதோர் நூலைத்தானும் இவரெல்லாம் ஒன்றாகூடி மன்றினில் மனிதர்தன்மேல் வருவருமங்கள்தீர்க்க தென்றி னல்சுவாமிமேற் கலங்கள்தான் கண்சென்றவர் இளகுமார்க்கம் செய்கையும் செப்புவேனே.

6. செப்புவேன் பீரங்கிநூலை ஜெகதலமெல்லாம் மெய்க்க தப்புகள்வராவண்ணம் சத்தியமாகச்சொல்வேன் இப்புவியோர் கட்கெல்லாம் இணக்கமாய் ஈய்ந்தநூலை அப்படியானநூலை யாருக்கும் ஆகாதென்றே.

7. ஆகுமேவர்மத்தின்மேல் வர்மம்ஒரு நூற்று எட்டிற்கும் தகைமைதனைப் பிரித்துரைக்கும் சார்புகேளு ஏகுமே கண்டத்தின் மேலதாக எளுந்தவர்மம் இருபத்தைந்தும் போகுமேஉலகத்தில் பெரியோரென்று புகலுவார் பொருளறியாப்புல்லர்தாமே.

8. ஆமென்றசிரசின்நடு கொண்டைக்கொல்லி அதின் பின்னே ஓட்டையன்கீழ் சீறுங்கொல்லி ஓமென்ற அங்குலம் நாலின்கீழ் பிடரி வர்மம் உச்சியில் எண்விரலின்கீழ் சுருதி வர்மம் தேமென்ற இருவிரலின்கீழ் பொற்சைக்காலம் காமென்ற கிளிரைகுத்திக்காலம் செவிசிறு தண்டருகில் செவிக்குத்திக்காலமாமே.

9. காலம் கடைவிளியின் கீழ் நட்சேத்திரகாலம் காலம் கீழ் இரெண்டரையில் காம்பூதிக்காலம் கனமான இறை மூன்றில் மூர்த்தி காலம் காலமரை இறையின் கீழ் திலர்தக்காலம் கிளறுகின்ற மின்வெட்டிக்காலம் இரபுரமும் ஆகுமதுகண்டு பாரே காலமாம் கருவிளியின் அருகில்தானே கருதிய மந்தாரக்காலமாகும் காலமிது பிரமமிது கண்டுபாரே.

10. பாரப்பா பட்சி நடு நேருவர்மம் பகரும் அரை யிரையின் கீழ் பச்சி வர்மம் காரப்பா நாசி நடு கண்ணாடிக்காலம் கண்டு அதின் மேல் பால வர்மம் தூதூண்டிக்காலம் கூரப்பா கோண வர்மம் செவியின் கீழ் குத்திவர்மம் நாலங்குலத்தில் உதிரக்காலம் கூரலாகும் ஆமப்பா கீழ்நாடி ஓட்டு வர்மம் அருகே உறக்கக்காலமாமே.

11. ஆமப்பா குரல்வளையில் சங்குதிரிக்காலம் அதின் கீழ் அங்குலம் நாலில் சுமை வர்மம் கண்டத்தின் மேனதான இடத்திலுள்ள உச்சிமுடி எல்கை முதல் ஒடுக்கம் கண்டு தேமப்பா வர்மமது இருபத்தைந்தும் தேர்ந்துரைத்தோம் முந்தி தொட்டுக் தண்டிடத்தான் தூண்டிடவே வர்மமது நாற்பத்தைந்தும் வகை விபரம் தான் துகையாய் வளுத்தக் கேளே,

**12.** வளுவிலாதொளில் இரண்டங்குலம் நீங்க மருவு காக்கொட்டக்காலம் தொண்டையின் கீழ் இழிவில்லா அங் குலம் நாலில் கதிர்வர்மங்கீழ் இரைரெண்டிற்க்கதிர்காமம் மிரைகீழ்பற்றி கயலில்லா தலமிரைகீழ் சத்திக்காரையின் கீழ் இரைரண்டில் திவளக்காலம் களிவில்லாதோரிரையின் வலமே ஏந்திக்காலமெனெ இருபுரமும் கண்டு கூரே.

**13.** கூறியதோர் தொண்டை முகக்கூட்டின் மீதே கொடிய புரதாரையின் கீழ் குருந்து வர்மம் ஆறுமுலேகண்டன் தூசிகன் இரையின் கீழ் அனுமார் வர்மம் முடிப்பிரை கூம்பு வர்மம் அதின் கீழ் நாலிரையில் பன்றி வர்மம் முண்டெலும் பின் மேல் நாலங்குலம் அடப்பக்காலம் தேறுமுண்டெல்வர் மம் கீழ் இருவிரலில் பெரிய அத்தி சுருக்கி, பாரப்பா காலிரை கீழ் சிறிய அத்திச்சுருக்கி.

**14.** சுருக்கியின் மேல் நால்விரலில் முன் சுருதி வர் மம் துன்னுபள்ளை தனில் பள்ளை வர்வமாகும் உருதியிரை எட்டின் கீழ் உடல் சுளுக்கி வர்மம் நேரான வர்மத்தின் நேர் தும்மிக்காலம் கருதிய தும்மியின்மேல் நாலிரையில் கை குட்டிக்காலம் மேலிரெண்டிரையில் சடப்பிரக்காலம் மருதர்க் கோர் இரை மீதின்கீழ் பிரம்ம வர்மம் இரெண்டிரை மேல் குளிமேக வர்மம் காணே.

**15.** காணரிய திவளையொடு நேர் முதுகில் பூணூல் காலம் இருபுரமும் அது கருதல் வேண்டும் நாணு முறு மூலம்தட்டில் நட்டெல்வர்மம் நணுகியதின்கீழ் கச்சைக் காலம் கோணுமடப்பின் மேல் கைகுன்றிக்காலம் குறுக்கே எட்டெல்முளையும் வாசுக்காலம் சார்ந்துரவே வர்மமது நாற்பத்தைந்தும் தலம் தன்னை பிரித்துரைத்தோம் தகமை காணே.

**16.** தகையாத நாபி முதல் மூலம்மட்டும் சார்ந்ததுகை ஒன்பதுக்கும் தகைமை கேளும் அகலு தொப்புளின் கீழ் விரல் நாலில் மூத்திரக்காலம் அதிர்பிடைக்காலம் கண்டத்தின்

வலமோரிரையின் கீழ் மகிழும் வலம்புரி இடம்புரி வெல்லும் நேர் குத்திக்காலம் தான் மிகு நாலங்குலம் மீதே அனுதி வர்மம் மீது தொந்தி வர்மமென விளம்புவாரே.

17. வரி முருகரமதிலேளங்குலமதில் மொழிப்பிரகை தெச்சணை காலமதில் ஓரிரை சுண்டோதரி வர்மம் பெரு விரலுக்கிடையில் சுண்டோதரியாமங்கே வெள்ளை வர்மம் மணிக்கட்டில் மாரியந்தம் காணீராந்தை வர்மம் முட்டுக்குளி மடக்கில் முடக்கு வர்மம் பூரணக்கை தவளை நடு முண்டகத் தோள் புஜமதில் தச வர்மம் எனப் புகலலாமே.

18. ஆமென்ற பாதமதில் நடு உள்ளங்கால் வெள்ளை வர்மம் வேமென்ற உப்புக்குத்திக்காலம் பாதம் விரல் மொழி குண்டிகைக் காலம் எனக்கூறும் காமென்ற பெருவிரலி ரெண்டிரையின் மேல் விர்த்திகாலம் இரெண்டங்குலத்தின் மீது பரமென்ற சுண்டோதரி வர்மம் மீது படை வர்மம் கண்ணு புகைக்காலமாமே.

19. காலமாம் விசை நரம்பு குதிரை வர்மம் கார் குதிரை முழங்கால் முட்டு வர்மம் சாலமாம் துடையின் நடு உருமிக் காலம் தவருமல் நூற்றெட்டுத்தலமும் கண்டு கோலமுடன் வகுத்துரைத்த பீரங்கி நூரில் கூறுமதின் காலத்தின் குணங் கள் தன்னை தாலமதில் உரைத்திடு நற்பொருளதாக தயவாக சார்ந்து நிற்கும் தலத்தில் நின்றே.

20. கோண்டைக்கோல்லி தானுக தலை முடிந்த கொண்டைக்கொல்லி சபை கேடு வந்திடுகில் குணத்தைக் கேளு சீராடும் கொண்டையது தளர்ந்து போகும் செய்யும் திரிபோகமது விழுந்தேபோகும். பாராடும் ஜன்னி சிலேற் பனந்தான் வந்து பகர்ந்திட்டேன் முன்னுரையால் பனி தானப்பா இக்காராடும் வர்மமது கொண்டுதானுல் கை கடந்த உயிரெனவே கண்டு கொள்ளே.

21. சீறுங்கோல்லி கொள்ளவே இன்னும் ஒரு சீறுங் கொல்லி கொண்ட உடன் தலையுருட்டும் குறிகேடாக தள்ளும்

னாய் முறைதள்ளும் குருக்குக்கூனும்தாக்குமப்பா நாக்கையுமே உள் இழுக்கும் தள்ளுமப்பா பிடரி வர்மம் குணத்தைக்கேளு கொண்டவுடன் கண் சிவக்கும் நாக்குத்தள்ளும் பள்ளமிவை அடங்கலிலே அடக்கம் சொன்னேன் பாங்கான நாளிகை தான் இருபத்தேளே.

22. தானான சுருதி வர்மம் குணமேதென்னில் தலை யுருட்டிபனி குளிர்ந்து தடிக்கும் தேகம் பானான கடிகையது பதினெட்டாகும் பார்த்திடவே சாத்தியமாம் பதனமாக பூருன பொற்ச்சை என்ற காலம் தானும் புகையுமடா கண்ணுரெண்டும் புகைச்சல் காய்ச்சல் தானான பொய்கை குத்திபதைக்கும் சீறும் கடிகை பத்து சென்றதென்றால் சாத்தியம் சொல்லே.

23. சொல்லும் குதிரைக்காலமது கொண்டுதானால் சுழலுமே சரீரமது துடிக்கும்பாரு பல்லில் இருமணிகருத் திருக்கும் பத்தொன்பதிர்க்குள் முறை பார்த்து நோக்கு கோலமது செவிக்குத்திக்காலம் சுண்டு கோணும் வாய் மூக் கில் ரெத்தம் கொப்பளிக்கும் முலையுடன் மயங்கும் இருபத் தொன்பதார்க்குள்ளாக இளக்குமந்த முறையைப்பாரே.

24. பாரப்பா இன்னமொரு பொய்கைக்காலம் பட்ட உடன் மயங்கிவிடும்பதனமாக சேரப்பா நாளிகை தான் ஐம்பத் தொன்று சென்றால் பிணி தீர்ந்து சும்மாதிரிவான் பாரு காரப்பா நட்சேட்திரக் காலம் கொண்டால் கண்ணு ரெண்டும் சிவந்து முகம் கோணும் பாரு வாடப்பா உடல் துடிக்கும் வாய் நீரோடும் பகரு முறை பதினெட்டிற்குள் வகுத்துக் காணே.

25. காணின்னும் காம்பூதிக்காலம் கொண்டால் கடி விஷம் கொண்டதுபோல் கண்காணது வீணவே அம்மூலி மத்திப்பிட்டால் விட்டு விடும் கண் புகைச்சல் கடிகை எட் டில் வாணவே வலமூர்த்தி குணமேதென்னில் மண்டையிலே உளைவு குத்துமயக்கமாகும் பூணவே அரத்தை சிறுபுள்ளடி விட்டறைத்துப் பூசிடவே குத்துவலி உளைச்சல் போமே,

26. வலுவாக அண்ணுக்காலம் கொண்டால் கன்னல் வரும் பதினெட்டிற்குள் மயக்கமாகும் கதிப்பாக மயங்கிரம லிருந்ததானால் கலங்காதே கைமுறையாய் செய்து நோக்கே அலையாமலே திலர்தக்காலம் கொண்டால் ஆள் நிமிர்ந்து அண்ணார்ந்து வாய்பிளக்கும் விலகாகமல் கடிகையது மூன்றே முக்கால் விட்டு விட்டாலசாத்தியமாய் மீளாதென்றே.

27. மீளவே மின்வெட்டிக்காலம் கொண்டால் மேகத்தைப் பார்க்கும் மலம் பிடித்துக்கொள்ளும் தள்ளவே இழுக்குமது புஜத்தோடேதான் பிடிக்கும் சத்தியமாய் இன்னமுமே இயம்பக்கேளு கோளில்லாமறுபுரமும் கொண்டால் குத்து கொளுத்துவலி கண்கூச்ச மயக்கமாகும் காக்க முறு தயிலமது சிரசில் போட்டு கடிகை இரு நாலுக்குள் இளக்கிக்கொள்ளே.

28. கருதியே மந்தாரக்காலம் தன்னைக்கேளு கருதும் உடல் மயங்கியே முகமும் சிறும் குறுகியே கண் விளித்துக் கொட்டாவி போடும் கூறும் கன்னல் ஐந்திற்குள் எழுந்து பேசும் மருகவே நேர் வர்மம் கொண்டால் கேளு விம்மி சிரி மூச்சடைக்கும் தலையுருட்டும் சரீரம் சிறும் பருதியென்ன சன்னி சிலேற்பனந்தான் வந்து பளிகேடு செய்துவிடும் பதனம் பரே.

29. பதனமாய் பட்சி வர்மம் கொண்டுதானால் பண்பான அலகுரெண்டும் ஒதுக்கிப்போடும் வலமான வாயதுதான் பூண்டு காணும் அலகொதிக்கி வலித்திடும் வாய் அகலும் பாரே மதமான கண்ணுடிக்காலம் கொண்டால் மயங்கிவிடும் தேகமது தளர்ச்சை மெத்த இதமான இருசெவியோடும் இரு நாசியோடும் ரெத்தம் வரும் கண்ணடைக்கும் நிலைமைபாரே.

30. பாரப்பா பாலவர்மம் உதிரச்சன்னி பாராட்டும் குணங்கள் வலி கொழுத்துக்குத்து வேரப்பா குறிகுணங்கள் பிணைத்ததானால் மீளாது வெகு கடிமை மெய்தான் சொன்

னேன் சொன்னேனே கோண வர்மம் கொண்டதானல் உதடு ஒருபக்கம் கோணி முகம் வேர்க்கும் தளர்ச்சையுண்டாம் சுக்கோடு வெந்நீர்தான் சுகமாய்த்தாக்கே.

31. தானென்ற மூத்திரக்காலத்தைக் கேளு ஜன்னி தான் எழும்பிவிடும் நாடி சாயும் வேமென்ற தலைவலிக்கும் வேமென்ற கடிகை பத்தின்மேலொன்பதற்குள் வர்மம் மீளும் ஓமென்ற ஒட்டு வர்மம் கொண்டதானல் ஓமென்ற நாழிகை ஒரெட்டுச்சென்றால் சாத்தியமென்றதன் குணத்தை அறிந்துநோக்கே ஓகோகோ நாடியது பூண்டுகொள்ளும்.

32. அறிவான உரக்கத்தின் காலம் கொண்டால் அப்பனே விழிமயங்கும் அலகும்பூட்டும் தானன கடிகை தொண்ணூற்றூறு சென்றால் தான்தானே எழுந்திருப்பான் சடவில்லாமல் பொறியான சங்குதிரி காலங்கொண்டால் பொருத்துவிடும் முகம் தன்னை திருப்பி வைக்கும் கரியான அடிவயிறு கனமுஞ் சொன்னேன் கையுடனே செய்யுமுறை கண்டுநில்லே.

33. கண்டிடவே சுமைவர்மம்கொண்டதானல் கருதிய வாயதுவில் நுரையேதள்ளும் வண்டரவே கண்டத்தின்மேலாலப்பா வர்மத்தில் தலங்கள்தன்னை நீ வகுத்துணர்த்து விண்டரவே இளக்குமுறை அடங்கல் தன்னை விபரமுடன் உலகறிய விள்ளுவேனே.

34. ஓமென்ற உச்சிதன்னில் முடியைத்தாழ்த்து உள்தாரை பிரதாரை தடவித்தாழ்த்து ஆமென்ற நாடிதனை ஏந்திக்கொண்டு அப்பனே பிடரியிலோர் சாந்திசெய்தால் ஓமென்ற இருசெவியும் ஊதிக்கொண்டு உள்ளிரண்டும் விரலிட்டு அசவுகெட்டி தாமென்ற எல்லையது தொட்டு சற்றே தடவிவிட சீவனது தயங்கும் பாரே.

35. பார்க்கவே தைலமொன்று சொல்லக்கேளு பதிவான நல்லெண்ணெ நல்வேப்பெண்ணெ ஏற்கவே சமனுக மிளகு சுக்கு வெள்ளுள்ளி வசம்பு கஸ்தூரிமஞ்கள் கர்க்கவே

கருஞ்சீரகம் தேவதாரம் கச்சோலம் ஜாதிக்காய் சமனதாக விற்கவே எண்ணை தன்னில் பொடித்துப்போட்டு வெந்துவடித் ததனை விதம்போல் செய்யே.

36. விதமான கண்டத்தின் மேலேநின்ற மேல்வர்மம் ஐந்தின் விபரம் சொன்னேன் திரும்பவே இளக்குமதின் அடக்கம் சொன்னேன் பதமான தைலத்தின் பாகம் சொன்னேன் பாக்கியமே உள்ளவருக்குப்பலிதமாகும் அதமான உந்திவர்மம் நாற்பத்தைந்தும் முறைமுறையே குணமதனை அறிந்துதேரே.

37. பாரப்பா காக்கொட்டக்காலம்தானும்பட்டவுடன் ஆள் நிமிரும் கொழுத்தும் கைகால் வாரப்பா கடிகை ஈருறாக் குள்ளே மறுவு குணம் அறிந்து மறுகாலம் நோக்கு காரப்பா கதிர்வர்மம் கொண்டபோது கண்ணிரண்டும் தள்ளுமடா கக்கல் விக்கல் கடிகை மூன்று செல்லாது அசாத்தியம் அறிந்துகொள்ளே.

38. தெளிவான கதிர்காம வர்மம் கொண்டால் செய் குணமே தேகமது குளிர்ந்துபோகும் ஜன்னிகூடும் தெளி யாத வலியுடனே சீதமுண்டாம் முரட்டையிடும் கடிகை ஏழு முடிகிடாது எளிதான அத்திவர்மம் மூலமுதல் வாயில் ரெத் தம் வீளும் மூத்திரத்தில் ரெத்தம் காட்டும் வழியாக முன் னும் பின்னும் அடைத்து முட்டி வயறு ஊதும் பதினெட் டிற்குள் அசாத்தியமென்றறிந்துகொள்ளே.

39. சத்தியமாய் சத்திவர்மம் கொண்டதானால் தனது குணம் உடலதிக தளர்ச்சையாகும் பார்த்திடவே ஜன்னி வரும் சுவாசம் நேரேபோகாது சலித்துமே விம்மிப்பதைக்கு மப்பா மாறிடவே விழிகளிரண்டும் மயங்குமப்பா மரமுட சுளியதுபோல் வாடுமென்னதேரியதோர் குறிகுணங்கள் தன்னை ஆய்ந்து திடமறிந்து உட்பொருளை தெளிந்துபாரே.

40. பாரடா திலவர்மம் கொண்டதானால் வாயிலே பதையும் தள்ளி மூக்கிலே நீரும்பாயும் பாரே வாரடா மயங்கி விட்டால் கடிகை பத்துமயங்காமலிருந்தாக்கால் வரிசை கேளு

ஊரடா செருக்கிருமல் கூடிக்கூடி உண்டாகும் இருபுறமும் ஒருப்போல் கொள்ளில்காரடா நோய் தீரமாட்டாது சொன்னேம் சயமுதிர்ந்து சடுதியிலே சாவான் சொன்னேன்.

**41.** காணுமே ஏந்திக்காலம் சன்னிசீதம் கை களைப்பு காந்தியுண்டாம் செவி கேளாது அல்லலில்லை எழுகடிகைக் குள்ளே பாரு ஆனதொருவலக்கரத்தில் கொண்டால் கேளு ஜன்னி மாறாது வீக்கம் சொன்னேன் புறதாரை கண்டம் கால்கள் கழுத்து நெட்டைதானும் பதைப்பில் வலிக்கும் வேணுமென்றே அறிவளியும் சீக்கிரத்தில் விளங்கும் மறு முறைகள் விதியாக நோக்கே.

**42** ஆகவே எருத்து வர்மம் கொண்டதானால் அதி சாரம் இடுகிடுத்தாடும் தேகம் நாகமதுபோல் சீறும் பத்து நாளைக்குள் தீராவிட்டால் நம்பவேண்டாம் நம்பவே தூசிக வர்மம் கொண்டதானால் சோரை விழும் மலஜலமும் பிடித் துக்கொள்ளும் சாகமுறவே கழுத்துவீங்கும் தண்ணீர் தாக முண்டாம் பதினொன்று தப்பாதென்றே சொன்னேம்.

**43.** அனுமார் வர்மம் கொண்டதானால் இருதலங் கால்களும் தன்சுவட்டில் உன்னும்போது அல்லவே கைகா லும் குறும் சொன்னேம் மதிபோல தேகமது வளைவதாகும் பன்னவே இருபுறமும் ஒத்துக்கூட்டி பார்த்தேரில் கிராணி நோய் பதனம்பாரு இன்னும் இக்குறிகளறிந்து நீ செய்தாயா னால் எழுந்த பிணி தீர்ந்துவிடும் இயல்புதானே.

**44.** இயல்பான கூம்புவர்மம் கொண்டதானால் கேளு ஈரலது மூன்றேமுக்கால் கடிகைநேரம் கனல்போல் துடிக்கு மடா வீங்கும் ஈரல் கனமாகப்பொதுமிவிடும் முடிப்புத் தானும் அடலான செவியடைத்து மூடிப்போகும் அப்பனே பலபல குணமுண்டாகும் வெய்பிலான காலமதுகடிமையப்பா மீளாது கைமுறைகள் விரைந்துபாரே.

**45.** பாரப்பா நெஞ்சிநேருவர்மங்கொண்டால் பதறியே பயங்குமுடல் குளிர்ந்து போகும் ஊரப்பா நாளிகைதான் இருபத்தொன்பதற்குள் இளக்கிவிடு உயிர்தான்மீளும் பாரப்பா காலம் மிச்சங்கொண்டால் பகரக்கேளு பலநோய்கள்

கொழுத்து வலிவாய்வு கூரப்பா மந்திக்கும் ஊண் செல்லாது குறி குணத்தை ஆராய்து மருந்து செய்யே.

46. செய்யவே பன்றிவர்மம்கொண்டதானால் சிறுபன்றி போலுறுமி அலறும் சொன்னேன் துய்யவே கடிகையது இரு பத்தெட்டில் அடங்கல் பார்த்திளக்கவே அசாத்தியமில்லை பொய்யப்பாகாலுடலும் வியர்த்துத்தண்ணீர்போல் குளிரும் கைகால் உதிரம் கன்னல் பையவே இருபத்தேனில் மிச்சம் கொள்ளில் பலநோய்கள் கைகால் குத்து உளைவுண்டாமே.

47. உண்டான முன்டெலும்பு வர்மம் கொண்டால் உணர்ச்சைகெட்டு மயங்கிவிடும் உண்மையாக தண்டான சீதமொடு தளர்ச்சையுண்டாம் தவறுது இன்னமொரு குறி யைக்கேளு முண்டாமல் சுமத்திடுகில் ரெத்தம் காணும் முக் கியமாய் காலமது உச்சங்கொள்ளில் வண்டாடும் பல பிணி நோய் உண்டாமென்று வகுத்திடுவேன் முன்னோருரைத்த வழமைதானே.

48. வண்மையாய் பெரிய அத்திச்சுருக்கி கொண்டால் மைந்தனே உடல் குறுகிக்கூனிப்போகும் அம்மை என அறி விழந்து செய்யாதே நீ அஷ்டமத்தில் இரண்டிலும் விஷமுண் டாகும் துன்மை என கடிகை பதினாறுக்குள்ளே துஞ்சுமுயிர் துஞ்சுமே சிறிய அத்திச்சுருக்கி கொண்டால் உண்மையே வர்மம் இரண்டும் குணம் ஒன்றுகும் இளகிடினும் மண்டலத் திலசாத்தியமாமே.

49. ஆமென்ற சுருதிவர்மம் கொண்டால் கேளு அடி வயறு கொழுத்து வலிஉளைவு சன்னி ஓமென்ற பாதாதிகேச மெண்சாண் உடம்பெல்லாம் வீக்கமுண்டாம் ஒன்றுபோலே காமென்ற சாகாதமூலியப்பா காசினியில் அமுதுவள்ளி என்று பேருமேவமென்று பரித்துவந்து கசக்கி தேகமீதில்விட ஓடிப்போகும் விள்ளொண்ணுதே.

50. விள்ளாதே இன்னமும்தான் காலம் கொண்டால் மெய்கவரும் புறமொதுக்கி வலிக்கும்பாரு விள்ளாதே முள்

ளாக்கரங்காலதுவும் பெருக்கலேறும் முதிர்ந்து போகும் சன்னிவரும் சாத்தியமாகும் முள்ளவே பள்ளவர்மம் கொண் டதானல் உடல் குன்னும் வயறு குன்னிப்பிடிக்கும்பாரு கொள்ளுமிதல்லால் முதுகுதாரை நீளம் கொழுத்து வலித் திடும் காலம் கொண்டாலென்றே.

51. கொண்டதொரு உடல் சுழுக்கி வர்மம் கொண் டால் கொண்டவுடன் வயறாதும் வாய்வு விம்மும் விண்ட உடன் உள்ளுக்கு நோயும் காட்டும் வெகுநாளாய் குறிகுணங் கள் காட்டிடாமல் கண்ணடைக்கும் பணியசைக்கும் நடக்கவும் கூசும் கைகாலும் அசர்ந்து விளும் கடிதாய் மீளும் வள்ள முருங்கபாலமதில் நீரிளைப்பு வருத்தும்தான் தனிக்குணத்தை வகுத்துப்பாரே.

52. குத்தும் தும்மிக்காலமதின் குணத்தை கேளு, கொண்டவுடன் வலம்பிடிக்கும் தேகம் கூனும் பத்தியுடன் இளக்கிவிடு இளக்காவிட்டால் பதினெட்டு நாளிகைக்குள் பதைக்கும் சீவன் அற்றமே சாத்தியமானலும் கேளு ஆனந்த வாய்வுடனே அதிகாரமுண்டாம் புத்தியுடன் பின் சொல்வேன் இதற்குப் பின்னல் பெருநோயும் சயநோயும் இளகும்பாரே.

53. இளக்கவே கைக்காலம் கொண்டதானல் புசம் விழுந்து மதிமயங்கும் போதக்கேடாம் உளைக்கவே சட்டப் பிரக் காலம்கொண்டால் உடல் மயங்கும் கண் விளித்திருக்கும் கன்னல் வளைந்த பதினெட்டிற்குள் இளக்காவிட்டால் மாறும் மேலில்வலி குடலில் வாய்வுண்டாகும் விள்ளவே முன் கூட் டிக் கூரைப்பார்த்து மெய்யானகிருதமுடன் தைலம்கொள்ளே.

54. கொள்ளவே குளிப்பிரக்காலம் கொண்டால் கோணி ஒரு சிரிசிரிக்கும் வாய்பேசாது மெள்ளவே கொண்டவுடன் மயங்கிடாது மைந்தனே கடிகை பதினெட்டாம் பாரு குண மாம் குளிமேகவர்மந்தானும் கொண்டவுடன் கூவென்றுகூவும் விள்ளவே மதிமயங்கும் கடிகை நாலில் வெறிவிட்டுப் பதினெட் டில் இளகும் பாரே.

55. கூமம்பா பூணூல்காலம் குணமேதன்னில் கொண்டு வுடன் மதிமயங்கும் தீரும் நன்றல்லா குற்றமது செய்யும் சொன்னேம் நாள் சென்றால் வண்டு ஒண்ணன் வம்பிலே விழுந் ததுபோல் நரம்புகூடி வலுவாகி இருந்தயர்ந்து புயமும் வீழ்ந்து தம்பவே சன்னியொடு கைகால் கோச்சு சரீரமதை ஒருபக்கம் திருப்பும்தானே.

56. தானன வரலாறு அறிந்துணர்ந்து தவறுமல் மருந்துசெய்தால் பிணிகள் நீங்கும் கூரான இருபுறமும் ஒரு போல் கொள்ளில் கூறு தசவாய்வதுவும் அடைத்துப்போகும் கோனன சீதமுண்டாம் கொழுத்தவலியுடனே சயமுங்காணும் காணவே குறிகுணத்தைக் கூர்ந்து நீயும் மேலான மருந்து பல செய்தாலும்தான் மீளாதென்றே உலகில் விளம்பலாமே.

57. ஆமப்பா நட்டெல்லுவர்மம் சொண்டால் குறுக்குக் கூனும் நடப்பதுவே கக்ஷியாகும் வேமப்பா கீல் வாதத்தில் கொண்டுவிடும் எண்ணெகள் தைலமது விரைந்தே பார்த்து ஏமப்பா பலவிதமாய் சிகிச்சை செய்து எண்ணெயிலிட்டே சவட்டுவாயே. கச்சைவர்மம் கொண்டால் தாமப்பா உந்தி தனில் உளைச்சலுண்டாம் தம்பிக்கும் மலஜலமும் தளர்சை யுண்டாமே.

58. கைக்கூட்டுக்காலம் தளைத்துமே கைப்புஜம்விழுந்து தாழும் மதிமயங்கும் பன்னிரெண்டு சென்றால் விளைந்திடவே சாத்தியத்தின் குணம்போல் மேவும் வேண்டியதோர் பரிபாகம் செய்துபாரு, அளைத்தவண்ணம் காலமெட்டில் முளமீயாதே அடித்திட்டால் காச்சல் குளிர்பனியுண்டாமே. இளைத்திடவே வாய்வு குணம் பிரந்தாலாகும் இருபுரமும் ஒரு குணமாய் இசைத்துப்பாரே.

59. பாரப்பா அடங்கல்தன்னைச் சொல்லக்கேளு பரன் கிருபை அனுதினமும் பரிந்துபோற்றி பேரப்பா தடவுமுறை பேணிச்செய்து புறமிருந்து எல்லுமுறை பேணிச்செய்து வாரப்பா நரம்பெல்லாம் இழுத்துப் பின்னிவாங்கு தைலம்

நடவிவிட்டு முன்னும் பின்னும் மூரப்பா செவிக்குழியில் ஊனி ஏந்தி உள்தாரை புறநாரை தவிக்கோரே.

**60.** தடவியே வலது கையை அகத்தேகட்டி வாங்கியே சட்டமதில் சவட்டிக்கொண்டு உலாவியே இளுத்துவிட்டு முன் துடங்கி திருச்சுக்கட்டி ஓங்கியே உதரிவிடத் திருமப்பா சடம் தன்னில் விடுவதற்குத் தைலம் சொன்னேன் சிறிதென்று எண்ணுதே ஜெகத்தில் செய்யே.

**61.** சிறப்பான நல்லெண்ணை படிதானென்று எய்யவே பசுவின் நெய்படி காலாக நிம்பன் எண்ணையுடன் இசங்கின் நீர் படிதானென்று உய்யவே அதிமதிரம் கிரும்பிளேடு உசி பனமாய் முத்தம் ஜாதிக்காய் தாளிசபத்திரி வெய்யவே அரைப் பலமாய் அரைத்துக் காச்சி வருத்தமண் பருவத்தில் வரிசை யாமே.

**62.** வரிசையாய் கண்டமுதல் நாபிமட்டும் வகுத்ததோர் வர்மமது நாற்பத்தைந்து வரிசையாய் தலமதுதான் வெவ்வே ராக படுதலமும் குறிகுணமும் பகர்த்ததெல்லாம் கரிசனையாய் இளக்குமந்த அடங்கலோடு கைமுறையும்செய்முறையுங்கண்டு கூறி பிரியமாய் தைலமது பிரித்துச் சொன்னேம் பொய் என்று எண்ணுதே புரிந்து செய்யே.

**63.** எண்ணறிய மூத்திரக்காலம் கொண்டால் எண் ணுதே மூத்திரம் நீர் கழிந்துபோகும் மண்ணில் வறண்டு சுறு சுறு என்று மோளும் துள்ளிப்போகும் ஈரெட்டு நாளிகைக்குள் கொன்றுபோடும் கல்லிடைக்காலம் உடம்பு வேர்த்து குளிர்ந்து தான் பார்க்கும் முன்னே தளர்ச்சையாகும் திண்ணமுடன் புரிகடிகை எழுமூன்றிர்க்குள் திடமுடனே மறுகாலம் நோக்கிக் கொள்ளே.

**64.** மருகிய வலம்புரிக்காலம் கொண்டால் மறுவு சிறு நீர் பேதிகழியாதப்பா நெருவியே வயளுதும் கால்கள் இரெண்டும் நிமிர்ந்துபோய் கைக்கடங்கி நின்றிடாது தருகியே இடம்புரிக்காலம் கொண்டால் தண்டுவலி உளைச்சல் குத்துச்

சரீரம் சிறும் அருகுநீர் ஒழுகும்படி பேதிபோக அடுத்தடங்கல் பார்த்து நீ இளங்கிக்கொள்ளே.

65. அடவாக வெல்லுருமி அன்னரம்பில் அசவுகொண்டால் குணத்தைக் கேளு, அடிவயற்றில் நோவுகொண்டு சன்னிதம் அடவாக மண்டையிலே மயக்கமுண்டாம் பொடியதுபோல் அமிர்தமது கலங்கும் மெத்த போதக்கேடு பித்தனைபோல் ஆட்டம் பாதிடமாக நரம்பதுவின் கூறுதன்னை தெளிவாகச் சொல்லிவிட்டோம் தெளிந்து பாரே.

66. விட்டிடவே நரங்கு குந்திக்காலம் கொண்டால் வீங்குமடா சரீரமெங்கும் மூச்சாடாது காட்டிடவே முறைக்குமுறை செய்யாதே நீ சாத்தியமென்றெண்ணாதே அசாத்தியமாகும் கட்டிடவே அணில் வர்மம் கொண்டதானால் கைமுறிந்து செத்தம்பாய்ந்து இறந்துபோகும் தொட்டிடவே வேண்டாங்காண் அசாத்தியமாகும் சொற்பிரமன் வந்தாலும் மீளாதென்றே.

67. எண்ணவே ஆந்தைவர்மம் கொண்டதானால் இயல்பாக செய்குணத்தை இயம்பக்கேளு அன்னமே தளர்ச்சையுண்டாம் உணர்வுண்டாகும் அடுத்தடுத்து மூச்சடங்கும் போதக்கேடாம் மிள்ளவே சாந்தம் வரும் ஏழாம் நாளில் புத்தியுண்டாம் மயங்கினாலும் புகழ்ந்துகேளு உன்னவே வர்மமது ஒன்பதிற்கும் உத்தமனே அடங்கல்தன்னை உற்றுக்கேளே.

68. உற்றுநீ அடங்கல்தன்னைச்சொல்லக்கேளு உறுபடவே கீழ்நோக்கி தடவிக்கொண்டு அற்றுமே சவட்டுமுறை ஆட்டிச்செய்து அதன்மேலே நரம்பிளக்கி வலித்துப்பின்னி ஒத்ததோர் காலுரெண்டும் திரிச்சுக்கூட்டி உள்த்தாரை குருக்கடக்கி உகந்துசெய்து ஏற்கவே கைநோக்கி இருக்கிச்செய்ய இயல்பாக கீழ்நோக்கி தடவிக்கூட்டே.

69. கூட்டியே இருபுறமும் அசைத்துக்கொண்டு கனமாக வேலவனே இருக்கச்செய்து திட்டமுடன் நீரடங்கல்

தூன்னில் ஊன்றிசேர் ஜென்னி அடங்கலும் திடமாய் செய் தால் கட்டமதாய் இந்த உயிர் மீளுமப்பா கைமுறைகள் தவ றுமல் கருதிப்பாரே வட்டமுடன் குருவருளே மனதிலுன்னி வர்மத்தின் அடங்கலிலே வகையாய் செய்யே.

70. செய்யவே எண்ணெயதின் விபரந்தன்னை செப்பு கிறேன் நல்லெண்ணை படிதான் ஒன்று பொய்கை என்னும் பேர்கொண்ட எண்ணை பாதி (பேரண்டத்தெண்ணை) புளியம் பழச்சாறுவிட்டு மத்தித்து நெய்கையுறும் சூரியனில் வற்றக் காய்ச்சி நீர் சுண்டத்தானெடுத்து குப்பிக்கேற்று பொய்கை யுறும் நிறப்பறிந்து இதம்போல் செய்யே எடுத்தபிணி சுகமா கும் இயல்புதானே.

71. கண்டாயோ பேர்தலமும் குணமும் பேரும் குறி யாக அடங்கல்தன்னை நாபி முதல் மூலம் மட்டும் கலந்தவர்மம் ஒன்பதையும் கருதிப்பார்த்து கொண்டிடவே காலங்களின் குணமும் பேரும் குறியான அடங்கல்முறை இழக்கும் பாகம் விண்டிடவே தைலத்தின் விபரந்தானும் விரித்துரைத்தேன் என் காதில் கேட்டமட்டும் மன்றி நிறை குணமதனை இதன் மேலாக வழுத்துகிறேன் மாணுக்கா மகிழ்ந்து கேளு.

72. மகிழ்வான மொழியதனில் காலம் கொள்ளில் மைந்தனே மொழிகளன்று களைப்புண்டாகும் திகளவேதரிப் பிளைப்பும் உளைச்சல் வீக்கமுண்டாம் தெச்சனைக்காலமது செப்பக்கேளு கவுளவே அசாத்தியம் களைப்புநோவு கண் புகைச்சல் ஜன்னியொடு சீதமுண்டாம் துகளவே தினம்நாலில் மரணமாகும் தெளிவாக செய்குணங்கள் சூட்சப்பாரே.

73. சூட்சமாம் சுண்டோதரிகுணமே தன்னில் துடிக்கு மப்பா சரீரமொடு வீக்கமுண்டாம் வீச்சப்பா சொல்லுகிறேன் விரும்பிக்கேளு விஷம்கொண்டு கொல்லுமப்பா பதினோராம் நாள் காச்சப்பா சுண்டோதரி குளிர்வெதும்பி பனியிளகி கைகால் வீங்கும் தடித்துமே இக்குறிகள் தன்னைக்கண்டால் கைமுறையாய் தைலமிட்டு இளக்கிக்கொள்ளே.

74. தடவுகின்ற கரம்தனிலே வெள்ளை வர்மங்கொண்டால் தவறாது களைப்புடனே நரம்புளைச்சல் வடவியே கபமுமேனே புகைச்சலுண்டாம் மாறிவிடும நோய்களெல்லாம் மணிக்கட்டில் மணிபந்தவர்மங்கொண்டால் கைகளைத்து வீக்கமுண்டாம் குளிரும் தேகம் அடவியே தைலம்விட்டுத்தடவிக் கொண்டு அடவாக இளக்குமுறை செய்துகொள்ளே.

75. கொள்ளவே ஆந்தை வர்மம் கொண்டதானால் கொண்டவுடன் களைப்பிளகி வீங்கிப்போகும் விள்ளவே முன் சொன்ன தைலம்விட்டு முறையாகத்தடவுமுறைசெய்துபாரு கள்ளவே முடக்குவர்மம் வீக்கமுண்டாம் களைப்பிளகி சாத்தியமாமே.

76. சாற்றியதோர் முட்டுக்குள் முறிந்துபோனால் சாகாமல் கடுப்புடனே நோவுண்டாகும் போதிப்பாய் ஜன்னியொடு சீதமுண்டாம் பெரு நரம்பு இளகியொருவர்மம் வலிக்கும் மாற்றியதோர் நசவுவர்மம் குணமேதன்னில் வந்ததோர் புஜம் வீறும் களைப்புண்டாகும் விதியென்றே வீக்கமுண்டாம் விதனம் காணும் வீரிருகரமிரண்டும் குணமொன்றாமே.

77. ஆமப்பா அடங்கலது சொல்லக்கேளு அப்பனே தடவுமுறை தடவிக்கொண்டு தாமப்பா வலித்திருக்கித்தடவிக்கொண்டு தறுகாமல் கையதனை நீட்டியே கைக்குறியில் நரம்பிளக்கி இசைவாகவேதான் விரலெல்லாம் இழுத்துவிட்டு ஓமப்பா உள்ளடங்கல் முறையும் செய்து உதறிவிடு தண்ணீரில் மூன்று நாளே.

78. மூன்றான எண்ணையது சொல்லக்கேளு முக்கியமாய் நல்லெண்ணைபடிதான் ஒன்று தோணடா சம்பளச்சாறுளக்குடனே துலக்கமென்றமுத்தரைத்துப்போட்டு குன்றாத அடுப்பேற்றி அனலைமூட்டி உறவான பதம்பார்த்து இருத்து வாங்கு குன்றாமல் நரம்பிளக வேண்டுமென்றால் நுணுக்கமாய் எண்ணையிட்டுத்தடவிப்பாரே.

79. பார்த்திடவே ஈரேழுகாலமப்பா பகர்ந்தபடிசெய் குணங்கள் பேர்தலங்களோடு தீர்த்திடவே அடங்கல் முறை யானதெல்லாம் செப்பிவிட்டோம் தைலமது தீரும் சொன் னேம் வார்த்திடவே பாதமதிலே மூன்றானவர்மத்தின் உயிர் தலமும் உரைத்தோமிங்கேகோத்திடவே செய்குணமும் மீட் சைதானும் கூறுவேன் நாள்முறையும் கூர்ந்துகேளு.

80. நாளான கால்வெள்ளைவர்மம் கொண்டால் நரம்பு வலி இடுப்புவலி மண்டைக்குத்து பாழான தேகமது நிமிர வொட்டாது பாதமது களைப்புளைவு பனிக்கும் மேதகம் கோளான உப்புக்குத்திக்காலம் தானும் கொண்டவுடனே மயங்கும் அசாத்தியமாகும் ஆளானகாலமது லகுவாய்க்கொண் டால் அடிபொத்தி வைத்திடுவதரிதுதானே.

81. அடவான குண்டிவர்மங்கேளு அப்பனே மொளி பிசகும் களைப்புண்டாகும் பாழான விஷம்போலே குத்தல் வீக்கம் பாங்கான தைலமதை விட்டுப்பாரு விரிவான விர்தி வர்மம் கொண்டதானால் மைந்தனே களைப்புடனே ஜன்னி சீதம் பெரிதான தளர்ச்சையுண்டாம் மயங்கும் மேதகம் பேணியே காலமுறை பிரித்துப்பாரே.

82. பார்க்கவே சுண்டோதரி குணத்தைக்கேளு பட் டவுடன் களைப்பிளகி வீக்கமுண்டாம் நேரான மூன்றுக்குள் அசாத்தியம் காட்டி நிச்சயமே எழுந்திருக்கும் நிஜமே சொன் னேன் சொன்னேனே கீழ்ப்படவர்மம் கொண்டால் சிந்தை கெடும் நரம்புவலி உளைச்சல் வீக்கம் ஆறுத அத்தலத்தில் புறிந்ததானால் அப்பனே காயமது ஆறுதென்றே.

83. ஆறுத கண்ணுப்புகைக்காலம் கொண்டால் அப் பனே சீதம் வரும் வீங்கும் கைகால் சாறுகத்தடவிவிட்டு முன்னே சொன்ன தைலமது விட்டிட சாந்தமாகும் தாளுக தண்ணீரில் மூன்றுநாள்தான் தடவிவிட மாறிவிடும் தகமை தானே வீருக்குத்திவர்மம் கொண்டதானால் உடன்தானே மயங்கிவிழும் விதனம் மெத்த உண்டாகும் விரைந்து பாரே.

84. விரைவாகக்குதிரைமுகக்காலம் கொண்டால் மிக்கதோர் களைப்பிளகி வீங்கும் தாளைமீது ஜன்னி கொழுத்தலைவு காய்ச்சல் தணுப்புடனே சூலைநீர் பயங்கள் மெத்த உவப்பான பொருள்களை விரைந்து சொன்னோம் உத்தமனே பார்த்தறிந்து உகந்து செய்யே.

85. உகந்திடவே முட்டுவர்மம் கொண்டதானால் உத்தமனே சிரட்டையது கழன்றுபோகும் புகைந்திடவே வித னமது பொறுக்கொண்ணாது போதமது கெட்டுவிடும் தளர்ச்சையாகும் மகிழ்ந்திடவே சிரட்டையதை இழுத்துநேரே அதின்மேலே வசைமெழுகு பற்றுப்போட்டு இளக்கிடவே கெட்டு முறைசெய்து பின்னே எண்ணையிட்டுப்பாகம் இத மாய் செய்யே.

86. கையான உருமிவர்மங் கொண்டதானால் கதறிடவே கால் களைப்பு நோவுண்டாகும் துய்யவே ஏழாம்நாள் அசாத்தியமாகும் தூக்குமுறை காலம் மூவஞ்சுமாச்சு வையகத்தில் பிணிநோக்கித்தடவினுக்கால் மைந்தனே தீராப்பிணிகளெல்லாம் மையவே தைலமது வடித்துப்போட்டால் பற்றியதோர் நோய்களெல்லாம் பறக்குந்தானே.

87. பறந்திடவே தைலமது சொல்லக்கேளு பறிவான நல்லெண்ணை படிதானென்று தேர்ந்ததொரு நிம்ப விளக்கெண்ணை கால்கால்படியே சமுதாளைச்சாறும் கூட்டிச்சிறந்திடவே ஜாதிக்காய் வசம்பு ஓமம் சீரகம் ரெண்டேலமொடு தேவதாரம் நிறைந்திடவே வகையொன்று களஞ்சிரெண்டு சேர்த்தரைத்து பதம்பார்த்து வடித்துக்கொள்ளு

88. வடித்ததொரு தைலமாதல் வசவுண்டாகும் வலு நரம்புரைவொடு முடமும் தீரும் படித்திந்த நூல்முறையைக் கண்டு பகர்ந்தபடி தைலமதைப்பதனம்பார்த்து பிடித்த இந்த நோய் கண்டு தைலம்கொண்டு பிசகாமல் இடமதுவின் பேதங் கண்டு அடித்ததொருமூலம் கைகால் ஐந்துவகைப்பிரிவைநீ அறிந்துபாரே.

89. பாரப்பா பாதாதிகேசமுதல் பற்றிநின்ற வர்மத்தைப்பகுதிசெய்து சீரப்பா பிரங்கி பிரித்துச்சொன்னேன் சீர்குணமும் திருப்புமுறை தைலம் வைக்கும் சிறப்பானை முறையும் செய்முறையும் கூட்டிச்செப்பினேன் இன்னமொரு சூஸ்திரம்தான் வர்மத்தின் நரம்பினிற்குணங்கள் கண்டு குறிகுணத்தை கூறுவேனே.

90. கூறுவேன் பிலமானதல்லல் கொண்டால் குணமுடனே தட்டியுண்டாகும் வீருடன் சுமைபங்கம் விக்கலும் அஸ்திதாகம் தேறிடவொட்டாதப்பா சுரமுடனே சன்னி தோன்றும் நீரிவிடும் தேகமெல்லாம் நிமிரவும் குனியவுமொட்டாதே.

91. ஒட்டவே ஓர்வர்மம் உண்மையாய் தீரவென்றால் பட்டிச நினைவுசொன்ன பரிந்தநெய் எள்ளின் எண்ணை கட்டிடும் தேங்காய் எண்ணைகொண்டு வகைக்கு நாளிவிட்டு குன்றிதொட்டால் வாடியும் விருவிச்சாரே செப்பிடும் மணிதக்காளி சிறந்திடும் கண்டங்கத்திரி பார்த்திடும் தாளியொடு பகர்ந்திடும் சாறு நாளி ஏறிடும் வகையாய்ச்சேர்த்து.

92. இணங்கிடும் கற்கம் சுக்குமாறிடும் அரத்தை இங்கிவளர் சீரம் மதுரமாமே.

93. ஆமென்னும் மிளகுரெண்டும் அக்கருவலத்தோடு தாமதமில்லாமூலம் தனிப்பலம் ரெண்டதாமே வாமெனும் தூணிநீரில் வகை நாளியாகவற்றி நீமென்னும் கற்கமொன்று களஞ்சியாய் அரைத்துச்சேரே.

94. சேர்த்திடு தாளியொன்றில் திறமுடன் கலந்து காய்ச்சி பார்த்திடு வெம்பருவம் பதமுடன் வடித்து மைந்தா யேற்றியே நோயைக்கண்டு இணங்கியே கரண்டி நெய்யை நீத்திடும் சிறுகயிட்டு தீர்த்திடும் நோயை எல்லாம் நிமலனாணை சொன்னேன்.

95. சொல்லுவேன் மூடங்கள் எல்லாம் துரிதமாய் தீர்வதற்கு வசவெண்ணெ வெல்லவே இலுமிச்சம் சாறு வீரளிய கூவளத்தின் சாறும் நில்லுமே உண்டதேங்காய் ரெண்டோடப்பா அல்லவே பாதாளமூலி அரையிசை நாக வேந்தன்.

96. வெந்தயமொடு ஒக்கச்சேர்த்து விரவித்து களித்த பின்பு போட்டுடன் பதமாய்க்காய்ச்சி முறிவுதன்னிலிட்டால் கயிந்தரி நல்மனம்தானே கருதினல் தீருமென்று உந்தனுக்கு உரைத்தேனப்பா உகந்துநீ அறிந்துசெய்யே.

97. வாய்த்திடுமோர் கஷாயம் வளுத்துவேன் மாது சொல்லுள் நீத்திடும் மாட்பொடம்நீர் பலம் நாறுமூலம் செய்திடும் பானியிம் நூறு சேர்த்திடு கஷாயம் வற்றியே பொய்த்திடா சோபமங்கள் புலனது இருக்கக்கண்டோம்.

98. கண்டத்தில் கருக்குவெள்ளம் கருதிடும் சோடயம்தான் நீக்கவே கூட்டியொன்றாய்சேர்த்து விண்டிடவே குலாவிடு பசப்பியேதான் வாரிவிட்டுமே வியந்து கண்டு கொள்ளே.

99. கொள்ளடா பத்தியம்தான் கூர்மையாக மகத்தான தொண்ணூறுவர்மமதில் கொண்டகாலம் ஏமம் ஈடு விலக விள்ளவே வேண்டாமிந்த விதமுள்ள வித்தையப்பா கள்ளமொன்றுமில்லையட்டா கார்முகில் வர்ணனே.

100. ஆணை சொல் வசனம்தான் அறிந்துநீ செய்தாக்கால் பிசகாமல் பலிக்கும்நீ நிலம் தன்னில் பேணிநீ செய்ததெல்லாம் பிசகாமல் பலிக்கும் சொன்னேன், நீ நிலம் தன்னில் சொன்ன நிச்சய நூலிதென்று பேணியே வந்திச் சொன்னேன் பிசகில்லை நூலும் முற்றே.

பீரங்கி வர்ம சூஸ்திரம் முற்றே.

குருவே துணை.

## வர்மகண்டி.

1. காப்பான ஜனனத்தில் மனுவோர்க்கெல்லாம் கை கண்ட தலம் குறிகள் கருத்தாய் சொல்வோம் தாப்பான கஷாயமொடு கிருதம் எண்ணை தயவான தடவுதட்டு அமர்த் தலோடு குணக்கேடு அகக்குறியும் பிறக்குறியும் கூர்மையாக ஆப்பான ஆணியைப்போல் அறைவேனப்பா ஆயுள்பாதம் சீர்பாதம் நெற்றிக்காப்பே

2. பாரப்பா கணபதியும் கந்தன் பாதம் பரிவான சந்திரரை தலைமேல் கொண்டேன் சீர்பாதம் மறவாமல் வர்ம கண்டி சிறப்பிடனே அறுபதையும் குறுக்கிப்பாட நேரப்பா இருதயம் கலங்காமல் தான் நீங்காமலே இருந்து குடி கொண்டேதான் சீர்பாதம் குருமுனிக்குப்புத்தி சொன்ன சிறந்த மயில் வாகனனே காப்புத்தானே

3. நெற்றி நடுப் புருவத்திலிருந்து தானே நேராக நெல்லிடைக்குத்தாள்வதாக உற்றதொரு திலர்தவர்மம் கொண்டால் கேளு ஆரப்பா அடி கொண்ட ஆளுதானே அண்ணார்ந்து நிமிர்ந்திருக்கும் அறிந்துபாருமுற்றுமே நாளிகைதான் மூன்றே முக்கால் என்று முனி மொழிந்தார் தானே

4. தானான நாழிகைதான் கழிக்குமுன்னே தய வுடனே இளக்கு முறை தன்னைக்கேளு கானான சிரசில் ஓர் அடியடித்து கண்டமுடன் தடவிக்கருணை கூர்ந்து ஈனான நெஞ்சியிலோரடியடிக்க எழுந்திருக்கும் என்று முனி இயம்பினாரே.

5. செப்பினேன் இன்னமொரு செய்திகேளு செயலான கடைக்கண்ணின் இரைக்குக்கீழே நயம் பெறவே அதில் தானே நட்சேத்திரக்காலம் நன்மையுடன் அடிபட்டால்

குணத்தைக்கேளு ஜெயம் பெறவே கண்ணிரெண்டும் சிவந்து கொண்டு சோக நாசியில் நீர் ஒழுகும் பாரு நயம் பெறவே நாழிகைதான் பதினெட்டிற்குள் பார்த்து நீயறியவென்று பாடினேமே

6. பாடினமேதோர் நாழிகைக்கு முன்னதாக பண்பாக இளக்குமுறை பகரக்கேளு நாடியே மறுபுரத்தில் கைவிரித்து நன்றாகவேயடிக்க மாத்திரை கேளு ஓங்கியே ஒரு சாண் அளவில் தானும் அடித்திருத்தி எடுத்துக்கொண்டு தேடியே சுக்கு வைத்து காதுமெண்டும் திரமாக ஊத உயிர் திரும்பும் பாரே

7. பாரப்பா காது சிறு தண்டில் தானே பண்பாக அருகுபத்தி செவிக்குத்திக்காலம் காரப்பா குத்திடிகள் அடிகள் கொண்டால் கண்ணிரெண்டும் தள்ளியே சோரைகாணும் தீரவப்பா இதற்கு நாழிகை கேளு திறமாக நாலைந்துமூன்றே யாகும் ஏறப்பா மறுபுறத்தில் விரல் மடக்கி ஏந்தியே குத்தி நீ இளக்கிக்கொள்ளே.

8. கொள்ளவே பிடரியதின் குழியில்தானே குணமாக முடிமுகுந்த தலத்திலப்பா மெள்ளவேயதில் பிடரிக்காலமென்றே விசையாக இடியடிகள் பட்டால் கேளு விள்ளவே முகம்சிறி முகமும் கோணும் விசையான நாழிகைதான் பதினெட்டிற்குள் முன்னப்பா உச்சியிலோர் அடியடித்து உதறியே விட்டுவிட உறைத்தார்தாமே.

9. உறைத்தபடி கழுத்தின்மேல் சீழ்நாடிதன்னில் உத்தமனே அருகுபற்றி உரக்கக்காலம் உறைத்திடுவோம் அதில்பட்டால் குணத்தைக்கேளு வாய்பிளந்து நாக்குத் தள்ளி முரட்டையிட்டு உறங்குமப்பா தனக்கடங்கா நாளிகை தான் தப்பாது தொண்ணூறு கழிக்குமுன்னே கைமுறையாய் சொல்லுகிறேன் கண்டுபாரே.

10. கண்டுகொண்டு இளக்குதற்கு முறையைக்கேளு கை மடக்கிப்பிடரியிலே அடித்துக்கொண்டு திண்டுமுன்

டாய் செய்யாதே அதற்குத்தானே திறபானகைமுறைதான் சொல்லக்கேளு விண்டுகொண்டு இருசாண் நீளத்தில் தானும் விதமாகவே தடவி இளக்கிக்கொள்ள உண்டுமடா இன்னே மொருசெய்திகேளு உச்சியிலோரடியடித்து உதறித்தூக்கே.

11. தூக்கிவிட்டு இன்னமொரு அடவிகேளு சுகமான காரை எலும்பருகுபற்றி தாளமேவ திவளக்குளி என்றுபேரு தயவாக இதில் திவளக்காலமாகும் பார்த்துமே அதை யிளக் குமுறையைக்கேளு பண்பாக உச்சியிலோரடியடித்துமுளமேவ முதுவரியில் புறங்கால்கொண்டு முறையுடனே தட்டிவிடு சத்தியம் தானே.

12. சத்தியமாய் இன்னமொரு அடவுகேளு தயவான நெஞ்சின் கூம்பெலும்பில்தானே நேர்த்தியாய் இருவிரலின் கீழே நேருவர்மமிதில்கொண்டால் குணத்தைக்கேளு வெற்றி யுடன் உடல் குன்னும் உடல் விசர்க்கும் வெதுவான வாயில் நீர் ஒலிக்கும்பாரு பத்தியமாய் நாளிகைதான் பதினைந்திற்குள் பழமையுடனிருக்குமென்று பகர்ந்து சொல்லே.

13. சொல்லவே இளக்குமுறை சொல்லக்கேளு சுக மாக முதுவரியில் புறங்கால் கொண்டு அல்லையுடன் ஒரு தட்டும் தட்டிக்கொண்டு அப்பனே நெஞ்சியிலோரடியும் போடே வலுவாக உச்சியிலோர் தட்டும் தட்டி வாங்கியே உதரிவிட பிடிகள் போச்சே.

14. போச்சப்பா நேரு வர்மத்தின் குணம் குருக் கெலும்பில் நால் விரல் கீழ் அடப்பக்காலம் ஆச்சப்பா அதில் வர்மம் கொண்டால்கேளு வாயினில் பல்லதுவே பூண்டு போகும் ஓச்சப்பா ஒரு தலமே தான் துடிக்கும் உரப்பாக கண் பொடுபொடுப்பாய் அடைக்கும் திறக்கும் காச்சப்பா இதனுடைய குணத்தைக்கண்டு கனமாக நாழிகைதான் கண்டு கொள்ளே

15. கண்டுகொள்ள நாழிகை முப்பதுவேயாகும் கரு
தாக அதற்குள்தான் இளகும் காலம் உண்டு கொண்டு ஒரு
முளத்தில் புறங்கால் கொண்டு உத்தமனே மறுபுறத்தில்
தட்டொன்று தட்டி கால் முட்டுக்கொண்டு முதுவரியில் தடவி
தாழ்த்து உத்தமனே உச்சியிலோரடியும் போடு கொண்டை
முடி தூக்கியே உதரிவிட்டால் குணமாக எழுந்திருந்து
நடப்பான் பாரு.

16. நடத்தவே கொப்புள் நால்விரலின் மேலாய் நன்
றாகவே உருமிக்காலமாகும் அடக்கமாய் அதில் கொண்டால்
குணத்தைக் கேளு, ஆள் அழைத்தால் கேளாது மதிமயக்கம்
அடக்கமாய் உறுமியே அமரல் காணும் மானிடனே விளித்
திருக்கும் பாரு கிடக்கவே நாளிகைதான் அதற்குக் கேளு
கிள்ளவே ஆறுடனே பத்துமாச்சு.

17. ஆச்சப்பா ஒருமுளத்தின் சிரேதானே அடவாக
தட்டொன்று உள்ளங்காலில் பேச்சப்பா முதுவரியில் பேசா
மல் ஓமப்பா ஒருதட்டு தட்டியேதான் இடது நாசியிலேயும்
இதமாகவே இறக்கி ஊதிக்கொண்டால் மூச்சப்பா போகு
மடா மூர்க்கமுடனே இருந்து திரும்புந்தானே.

18. போகவே விலாவில் முண்டெலும்பின் கீழே
புகழாக இருவிரலின் கீழேதானே ஏகவே வலிய அத்திச்
சுருக்கிக் காலம் ஏக்கமுடன் இதில் கண்டால் குணத்தைக்
கேளு, சாணவே பிடித்து ஒரு முளத்தில்தானும் தயவாகவே
துருக்கி மூலம் தள்ளும் ஆகவே நாளிகைதான் பதினெட்டாகும்
அப்பனே இதற்குமுன் இளக்கிக்கொள்ளே.

19. கொள்ளப்பா எடுத்திருத்தி விலாவில் தானும்
குணமாக மறுபுறத்தில் புறங்கால்கொண்டு சூடப்பா ஒரு
தட்டு தட்டியேதான் சுகமாக உச்சியின்மேல் கைபிணைத்து
வாளப்பா ஓரடிதான் அடித்துக்கொண்டு மைந்தனே கைகால்
கள் தடவியேதான் கேளப்பா உதரிவிட எழுந்திருந்து கெர்வ
முடன் போவானென்றறிந்துகொள்ளே.

20. அறிந்துகொள்ள அதில் ஓரிரையின் முன்னே அப்பனே சிறிய அத்திச்சுருக்கிக்காலம் முறிந்துகொண்டால் காலம் இரண்டும் குணம் ஒன்றாகும் முறையுடனே நாளிகையும் அதுபோலப்பா தேர்ந்து நீ மறுபுறத்தில் புறங்கால்கொண்டு தீர்க்க உரைதேர்ந்துகொண்டு பதறி நீ போகாமல் இளக்கிக் கொண்டு பாலகனே நீயதனே உதறிப்போடே.

21 உதரவே கொப்புளின் நால்விரலின் கீழே உத்த மனே மூத்திரத்தின் காலமாகும் சிதரவே அதுகொண்டால் குணத்தைக்கேளு, சுறுசுறுப்பாய் மூத்திரம் விடும் துள்ளி போலே சிதரவே கண்விளித்துப் பார்க்கும்பாரு சிறப்பாகவே செவியும் கேளாதப்பா இதம்பெருகும் நாளிகைதான் இருபத் தொன்பதாகும் இயலுடனே இருந்ததென்று இயம்புவீரே.

22. இயம்பவே இளக்குமுறை தன்னைக்கேளு இயல் பாக அச்சவ்வில் மறுபுறத்தில்நயம்பெறவே நாய்க்கால்பொருத் துதன்னில் புறங்கால்கொண்டு பயம்பெறவே சமட்டியே இரக் கிக்கொண்டு பண்பான உச்சியிலோரடியும் போடே.

23. போடவே கல்லிடையின் காலம்கொண்டால் வித்து மேலேறித்தான் இருந்துதானால் சாடவே குணமதுதான் சொல்லக்கேளு, சணத்திலே வித்துரெண்டும் தலம்காணாது தேடவே செத்ததுபோல் கிடக்கும் பாரு, திரமாக வாயில் நுரைதள்ளிக்காணும் ஆடவே அசையாமல் உயரமாக அண்டை கூட்டியே மேலே நீ எடுத்துவையே வையப்பா உச்சியின்மேல் கைபிணைத்து வலுவாக அடித்துவிட்டால் வித்து தாழும் செய்யவே உடன் இடதுகையைக்கொண்டு சிறப்பாகவே பிடித்து தண்ணீர்கொண்டு வையப்பா மூன்றுவிரல்வீதியுள்ள பழந்துணியைத் துவைத்ததிலே சுற்றிப்போடு மெய்யப்பா விதையதுவும் அடியில் நிற்கும் விதமாக சுக்கிட்டுக் கஞ்சி கொள்ளே.

24. கொள்ளப்பா எந்த வர்மம் கொண்டாலும்தான் குணக்கேடாய் அடிகள்பட்டு மயங்கினாலும் தெள்ளவே பயங் கொண்டு கிடந்தாலும்தான் திடீரென்று சென்றிளக்க உபாயம்

கேளு, விள்ளவே இதற்கெல்லாம் அடக்ககாலம் விபரமுடன் தானெடுத்துச் செய்துகொள்ள விள்ளவே எடுத்திருத்தி விலா வுரெண்டும் விதமாக பிடித்திருத்தித் தூக்குவாயே.

25 இருத்தியே பிலத்தில் ஒரு இடி இடித்து இதமாக கைமேலே கைபிணைத்து வருத்தியே உச்சியில் ரெண்டடி யடித்து வாகுடனே பிடரிக்கும் மூலத்திற்கும் வரியிலேதான் புறங்கால் மடக்கியடித்து நிறுத்தியே நெஞ்சுதனில் கை கொடுத்து நினைவாக உறங்க ஓர் அடியும்போடே.

26. போடவே காதுரெண்டும் சுக்காலூதி பொட் டெனவே உடம்பெல்லாம் தடவிக்கொண்டு தேடவே காலு ரெண்டும் கீழே நோக்கி திடமாகத் தூக்கியே உதரிவிட்டால் அப்பனே சற்குருவைப் போற்றிக்கொண்டு அன்பாகும் பிரம னுட கடாக்ஷத்தாலே திடமான காலமெல்லாம் இளகுமென்று செப்பினர் தெரிந்துகொண்டு சிரைப்பாரே பாரப்பா இந்த முறை ஒருவருக்கும் பண்புடனே கொடுக்காதே பாவம் பாவம்.

27. ஆமப்பா கொடுப்பதற்கு வருஷம் பன்னிரெண்டு அடைக்கலமென்றுன் பாதம்பணிவாராகில் சீர்பாதம் மறவாமல் அவனுக்கீந்து சிறப்புடனே அவனை நீ சிஷனுக்கி காரப்பா வித்தையெல்லாம் அவனுக்கீந்து களிப்புடனே இளக்குமுறை அவனுக்கீயே.

28. இளக்கவே யாருக்கென்றால் செப்பக்கேளு, இன்ப முள்ள மனிதருக்கும் பொருள் தந்தோர்க்கும் பழக்கம் உற வுள்ளோர்க்கும் பகையுள்ளோர்க்கும் பண்பான சண்டாளர்க் கும் இளக்கவேணும் இளக்கமுள்ளான் பொருள் தந்து சரண மென்றால் மெலிவகற்றி அவன்தனையும் விளிக்கிக்கொண்டு களங்கமில்லா மனதாக இருந்துகொண்டு கையடங்கல்தனை யறிந்து அறிந்துதேறே.

29. தேறப்பா குருவினுட பாதம் போற்றி தினதோறும் சிவபதத்தை மறந்திடாமல் தேரப்பா பாலமது போட்டாற் போல சிறப்புடனே சொல்லிவிட்டேன் தலங்களப்பா வீரப்பா



செய்யாமல் அடக்கிக்கொண்டு விதமுடனே சாத்திய மசாத்தி யம் பார்த்து நிறம்போலே வெண்மையாய் சொல்லிவிட்டேன் நினைவுகெட்ட மானிடனே உற்றுக்கேளே.

**30.** காணவே சொன்னதெல்லாம் மெய்யென்றெண்ணி கருத்தாக வர்மமதுகொண்டபேர்க்கு தோணவே பிழைகுறியும் சாகுறியும் பார்த்து சுருக்காகவே நமசிவாயவென்று வேணவே ஜலமேந்தி முகந்தெளித்து வெற்றிபெற அன்னப்பால் அடுப்பி லேற்றி ஏணவே திறை வளைந்து அகத்திலாக்கி ஈசன் பதந்தனை நினைத்து இளக்கிக்கொள்ளே.

**31.** கொள்ளவே கருங்கோழி இடித்தசாறும் குண முடனே மதுசேர்த்து மத்தித்தேதான் விள்ளாதே உள்ளுக்குக் கொடுத்துப்போடு விதம் விதமாய் அகன்றுவிடும் மாறிப் போகும் கள்ளமில்லை இதுபோலே சூட்சம் பாரு கரைகண்ட முனியோர்கள் சொல்லமாட்டார் சுள்ளையிலே தீயது பிடித் தாப்போலே எண்ணையொன்று சொல்லுகிறேன் சூட்சம்பாரே.

**32.** சூட்சமாய் பசுவின் நெய் சென்னைக்காய் எண்ணை துணையுடன் இலுப்பை எண்ணை வீட்டையில்லா நல்லெண்ணை விருப்பமுடன் தேங்காய் எண்ணை இதமுடன் மேல்மருந்து இயம்பக்கேளு, பட்சமுடன் தொட்டால்வாடி பாதமுட்டில்லா தாளி அச்சதுரநாதுவளை வேலிச்சார் வகையது படிகாலாமே.

**33.** ஆமே கேள் கிரும்பு சிங்கி சீரம் ஏலம் அன்பான மதுரமொடு அரத்தை சுக்கு நாமே கேள் திப்பிலியும் கோரோ சனை நலமுடனே குங்குலியம் வகைகளஞ்சாய்தாமே கேள் முன்சாறும் எண்ணையோடும் தபவாக பொடி தூவி அடுப்பி லேற்றி பேரமேகேள் குவளத்தின் சாறும் சேர்த்து புகழாகவே யதனை புகட்டிக் காச்சே.

**34.** காச்சியே மணப்பருவந்தனில் வடித்து கருத் துடனே வடிகலசம் தன்னில் கேளு இயல்புடனே வெள்ளை குங்குலியம் சேர்த்து இரக்கியே கரண்டியிடை உள்ளே கொண் டால் போச்சுதடா சயமொடு இருமல் கக்கல் பொல்லாத

வர்மமொடு ஈளை ஈடுவரட்சையொடு உள்கொளுத்தும் விரைத்தும் வாதம் விள்ளாதே உடம்பு பொன்னும் விளக்கம்மாமே.

35. கொள்ளப்பா கூடாரத்தைலம் ஒன்று விளம்புகிறேன் சகல ஈடும் தானகல ததும்பியதோர் கருங்கோழி கொண்டுவந்து தலை முடி கால் நீக்கியே எண்நாளி தண்ணீர் விட்டு நழுகாமல் எட்டொன்றாய் வற்றக்காச்சி நலமுடனே இருத்ததின்மேல் கசாயம் கேளு, அருந்தவே நாயுருவி உளிஞ வேரும் மயமான குருந்தொட்டி பலம் பத்தாமே ஆமே கேள் முத்தூாணி நீரைவிட்டு அடவாக எட்டொன்றாய் இருத்து விருங்கே.

36. வாங்கியே தோன்றிய கசாயம் ரெண்டும் ஒன்றாய் சேர்த்து தக்க கடைமருந்துதனை சாற்றக்கேளு, கேளப்பா திரிசாதிவிடையம் சீரம் திரமான அரத்தையொடு ஏலம் மல்லி பூணவே மதுரமொடு வெந்தயமாம் புகழாகவே களஞ்சாய் இடித்துக்கூட்டே.

37. கூட்டுவாய் ஆவின் நெய் படிதானென்று குணமான நல்லெண்ணை படி அரைதான் கூட்டுவாய் சித்தெண்ணை படி அரைதான் புகழாகமுன் சாறும் எண்ணைசேர்த்து ஆட்டுவாய் கற்கவகைமேலே தூவி அடவாக அடுப்பேற்றி மெழுகதானால் நாட்டுவாய் வடித்திருத்துக் கரண்டி வீதம் நாயகனே பிணிதனக்கு உள்ளேகொண்டால்.

38. கொள்ளவே மூன்றுநாலாறு நேரம் குணமாக முறுங்கைபிலைசாறுமல்லால் எச்சாமல் எண்ணையதைக்குடித்துக் காத்தால் ஏகுகின்ற பிணியதனை இயம்பக்கேளு மூச்சுவிடாதிருந்தகொரு கொழுத்தக் காலம் முறைகேடாய் வந்த சயம் இருமல் சத்தல் போச்சுதடா பழைய ஈடனைத்துமப்பா.

39. இயல்பாகவே இன்னமொரு சகாயம் கேளு, போகவே கொழுத்து முதல் வரட்சை தீரப்புகலுகிறேன் குருந்தொட்டி இரங்குவில்லை ஆக்கமுடனருகன்வேராடா

தோடை அடபதியின் கிழங்கு நன்னாரி உளிஞெ வெள்ளைக் குன்றி வேகமுடன் சூரிசிறுநெருஞ்சி கடலாடிவேர் சமூலம் வகையொன்று பலம் ஒன்றாக பாகமுடன் கடைமருந்து திரி சாதி சுக்கு மிளகு கற்கடகசிங்கி ஏலமடா கடைமருந்துகளஞ்சி யொன்று இடித்துவிடு இருநாளி எட்டொன்றாக்கி வேறேயடி சீனிமேல் பொடியும் போட்டு வெல்லுகின்ற கசாயமது திரி நாள் மட்டும் ஜாலமதுசெய்யாமல் குடித்துக் காத்தால் சார் புடனே சயரோகம் கக்கல் விக்கல் வேதாந்த பொதிகை முனிக்குரைத்தவிதி விதமாகக் கசாயமது விளம்பினேன்காண்.

40. காணவே அருகுசங்கு உளிஞெவில்லை கைக்களவாய் குருந்தொட்டி தூதுவேளைவேர் வேணவே பலம் பத்து கை யொன்றுக்கு விட்டுவிட சலம்தூணி இளநீர் வெள்ளம் தோணவே ஒக்க ஒன்றாய் அடுப்பிலேற்றி அனலை மூட்டி காணவே மூவிரெண்டுபடியாய் வற்றிக்கட்டி வடிகசாயமதை இருத்துவையே.

41. வைத்ததொரு கசாயமதில் நாளிவாங்கி வள்ளநீர் வெள்ளமது நாளிசேர்த்து செய்திடவே கொம்பரக்கு களஞ்சி சேர்த்து சீருடனே கிழிக்கட்டி கசாயத்திலிட்டு கைதிடமாய் திரும்ப எட்டொன்றாய் வற்றக்காச்சி கண்டுகொண்டு சீனி சேர்த்து பொய்த்திடா தந்திசந்தியிருவேளை திரிநாள் கொள்ளே.

42. உண்மையிலே புகையிலை புளியுப்பும் தள்ளு உத்த மனே பச்சை ஜலம் தொட்டிடாதே கண்ணுன கசாயமது குடித்துவந்தால் காணுது தலைச்சுற்றல் கக்கல் விக்கல் ஈளை புண்ணுன உடம்பெல்லாம் பொன்போலாகும் மெய்கொடுக்கும் பலம்கொடுக்கும் வலுவுண்டாகும் சண்ணுமடா உடல் கொழுத்து புறக்கொழுத்து சதிகேடாய் வந்த ஈடும் அகன்று போமே.

43. போகுமே இன்னமொரு கசாயம் கேளு புகழாக மதுரம் நற்சிரகம் மாஞ்சில் தேடவே களஞ்சதுதான் ரெண்

டாய் வாங்கி திடமான உளிஞெ வேரும் ஆடவே செந்தட்டு சாறணைவேர் அடவாக இருநாளி எட்டொன்றுக்கி ஆட்டமாய் தூடித்திட நல் ஈளை விக்கல் நடுநடுங்கி ஓடி விடும் நவிலக்கேளு.

**44.** நவிலுகிறேன் கண்டங்கத்திரி நொச்சிதோடை நயமாக சார்வகைக்குப் படிகாலாக கோவின் நெய் உளக் கதுவே தேங்காய் எண்ணை குணமான நிலவேறும் களஞ்சி பத்து நவிலுகிறேன் முசர்முட்டை களஞ்சி ஐந்து நண்பனே கடைச்சரக்கு ஏலம் சிரம் நவிலுகிறேன் பத்திரிமாஞ்சி நணுகாமல் வகைகளஞ்சி மூன்றதாமே.

**45.** மூன்றான சாறுடனே எண்ணை நெய்யும் முறையுடனே மருந்தெல்லாம் சேர்த்துப்போட்டு நன்றான மெழுகு பதம் தன்னில் காய்ச்சி நலமுடனே எண்ணைவடி கலசந்தன்னில் குன்றாத கோமேதகம் புனுகு சட்டம் குணமான குந்திரிக்கம் கொட்டம் வைத்து நன்றான நெய்யதுதான் கரண்டி வீதம் நாளாறு பொழுதாக உண்டபேர்க்கு.

**46.** பேர்கந்த வயர்காந்தல் உளைவுகுத்து பலமான கைகால்கள் உளைவுநோவு பேர்கென்ன உடல் வரட்சை தலைநோய் வேர்வை பொல்லாத இருமலுடன் நெஞ்சிளைப்பு தாக்கென்ன நரம்புப்பிடி உள்முறிவு தகர்ந்துவிடும் எண்ணையுட புதுமையாமே யார்க்குமே சொல்லாதே எண்ணையப்பா அறிவான பத்தியமும் அறிந்துசேரே.

**47.** தேரவே முருங்கைவேர் தோடைவேரும் திகள் உளிஞெ பேய்புடலம் அருகன்வேரும் மீரவே வெண்குன்றி தக்காளி சூரிமிளகாறு சிற்றுமுட்டியுடன் திரிகடுகு ஏறவே சிறுநாகம் அமுக்குராதிரிபலைசிங்கிகூட ஒன்றான் மூலமது பலம் ஒன்றாக வகைவகைக்கு களஞ்சி மூன்றாய் வாங்கே.

**48.** வாங்கியதோர் மருந்தையெல்லாம் தரித்துப்போட்டு வரைபுனல் இருநாளில் எட்டொன்றுக்கி தாக்கியே இருத்து வைத்து சீனிபோட்டு தளமாக அருந்திடுவாய் பத்தியமாக ஏங்கியே குடித்துவர சயம் வரட்சை ஏற்றதொரு நெஞ்சிலிடி

வலியும் தீரும் தேங்கியதோர் வலச்சிக்கல் தொகுப்போடே தான் தீருமென்று இதுவகையை அணுக்காய் செய்யே.

49. செய்யவே தோடைவேரு கசாயமொன்று சொல் லுகிறேன் தோடைவேர் பலம் நாரப்பா பையவே இரு துணி அத்திப்பூவும் பாங்காகப் போட்டதிலே அனலே மூட்டி நையவே முவிரு நாளியாக்கி நாயகனே இருத்சுதிலே வைத்துக்கொண்டு கையோடே கொம்பரக்குக்களஞ்சி ஏழு கட்டளகி இருநாளி எட்டொன்றுக்கே.

50. ஆக்கியே இருத்ததனை நாளொன்றுக்கு இருபோ தாக மூன்று நாளுண்ணு பத்தியமும் முருங்கையிலே கருவா டாகும் தப்பாது வேறொன்றுமாகாதப்பா நீங்குமடா கம்புப் பிடி இளுப்பு குத்துவேதனையும் குடலதிலே நோயும் தீரும் போக்கிவிடும் சயநோயும் வரட்சை தீரும் பொல்லாத மூடம் தீரும் பேணிப்பாரே

51. பேணிப்பார் கோவின் பால் படிதான் ரெண்டு பிசகாமல் புனல் இரண்டு அரிசி ஆறு வணிப்பார் சித்தமுட்டி பலம் இரண்டு எடுத்திடுவாய் அதனரிசி படிதான் காலு நாளுமேலே இதொக்க வாங்கிக்கொண்டு நலம் பெறவே குடித் திடுவாய் திரிநாள்மட்டும் வேணவே உளைச்சல் மதி கெட்டி டாது வெற்றியாம் எண்ணை வைத்துமெழுகுவாயே.

52. மெழுகிடவே வசவெண்ணை சொல்லக்கேளு முத் தெண்ணை ஆவின்நெய் பன்றிநெய்யே தளுகுவாய் பழச் சாறும் சரியாய் வாங்கி சங்கை பெற வெந்தயமும் களஞ்சி வீதம் நளுகாமல் வெந்தயத்தைக்குமறிச்சாற்றால் நாயகமே தானரைத்து ஒன்றாய் சேர்த்து வாங்காமல் குமறிச்சார் வற்றும்போது வார்த்தெடுத்து தைலமதை முறிவில் போடே

53. போடிவே தைலமது வற்றிடாமல் புண்ணியனே தினந்தோறும் தடவி வாங்கி நாட்டிலுள்ள மானிடர்கள் நாற்கால் ஜெந்து நாயகனே கோழி முதல் முறிவு கட்டே உள் முறிவு கொண்டதொரு எட்டுக்கெல்லாம் கூராடத்தைலம்

முன்னேபாடினேரோ செவென்று எண்ணியதோர் முறிவுத் தெல்லாம் பாலகனே எண்ணையது திடமாய் போடே.

54 அப்பனே மரமேறி முறிந்ததானல் திடமுடனே தன்னறிவால் வந்தாலும்தான் திட்டேறி திடுவேறிமுறிந்தாலுந்தான் பட்டணமே அண்ணார்ந்து ஓடிந்தாலும்தான் பனே ஏறிவிழுந்தொடிந்து சிதறினாலும் இடப்பிசகாய் வந்துவிட்ட முறிவுக்கெல்லாம்ஏற்றமாய் எண்ணெயொன்று கூறுவேனே.

55. கூறுவேன் ஆலம்பால் படிதான் ஒன்று, குருந் தொட்டி நன்னாரி தெற்றி வேநம் தேருவேன் காட்டுச்சி இறைச்சிநாளி தேன் படி கால் சிவதைவிளாம் பிசினுமாமே வேறு கையான் மீனைகளஞ்சியொன்று வாலுளுவை படி யரைக்கால் எண்ணைநாளி பிறகிந்த எண்ணையால் அலகு வைத்து பிசகாமல் கடித்திருத்து வைத்துக்கொள்ளே.

56. கொள்ளடா கூராடக்கஷாயம் ஒன்று குருந் தொட்டி அருகன் வேர் அமுதவல்லி விள்ளடா வில்லேவேர் செந்தட்டி வேரும் விதமான கொத்தான் வேர் ஆமணக்கும் நாளடா வகை பலம் தான் தரித்துப்போட்டு நாயகமே கற்க வகை திரிகடுகு சொல்லடா திரிசாதி யரிசியாறு சுகமான களஞ்சிவகை கூடப்போடே.

57. போடப்பா முத்தூணி புனலிலப்பா புதுமையாய் அருநாளியாகவற்றி நாட்டப்பா முட்டையிடப்பருவமுள்ள நல்கோழி முடி குடல் கால் களைந்துபோட்டு ஆடாமல் கஷா யமதில் நொறுக்கிப்போட்டு அடுப்பேற்றி உளக்காக்கி இரு நேரம்தான் தேடியே கொடுத்துவரத்தீரும் நோய்களே.

58. தீராத நரம்புப்பிடி இடுப்புக்குத்து துடிதுடித் தல் ஆயாசம் மயக்கம் வீக்கம் குணமான ஈளை சயம் மாந்த தோஷம் சத்தியுடன் சயம் வரட்டிசை நெஞ்சிக்காந்தல் தளர்ந்த விந்து பலத்துடனே சோரைவூநும் வித்தான தேக மது வலுவுண்டாகும்.

59. விள்ளுகிறேன் இன்னமொரு கஷாயம் கேளு சாறான அவுரிவேர் வெந்தயமும் சுகமான திப்பிலியும் மிளகு மாச்சே ஆச்சப்பா முப்பலேசிங்கிகோடை கீர்புடலம் வெண் குன்றி அருகு கொத்தான் ஆளப்பா அமுக்குரா அரத்தை கொட்டம் ஆனதொரு உள்ளி சிறுநெருஞ்சிவேரும்

60. கேரப்பா கருஞ்சுண்டை சூரிவேரும் நினைவாக வகையொன்று பலமொன்றாக பாரப்பா முப்பத்திரண்டெட் டொன்றாக்கி பாங்காக சீனியிட்டு திரிநாளூட்டே ஊட்டுவாய் பத்தியமாய் கொண்டபோது உள்சுரமோடறுபத்துமூன்றும் போமே போகுமப்பா குறிகுணங்கள் தடவுதட்டல் அமுந்த் தல் கட்டல் கைபாகம் செய்பாகம் கண்டுதேறி ஆசானை அடுத்து வைத்து அறிந்துகொள்ள குறுக்கியே சொன்ன கலைடிகனி அறுபதுவும் முற்றே.

குருவே துணை.

## நாலு கை மாத்திரை உரை.

1

1. கணிதமுடன் ஆணும் பெண்ணும் கலந்து போகம் செய்யும்போது விந்ததுவும் நாதமாகி விர்த்தாதி என்ற விமலக்குழியில் விழுந்து உந்தி முக்கோணிற்கு மேலே நாற்கோணில் ஒரு இதழின் மேல்வசமாய் துடர்ந்துகூடி கீழே எறி கலையென்ற இரு பைகளாகும்.

2. என்ற எறிகலையில் நின்று பிரிந்ததுதான் ரசகலை என்பதாகும் சொன்னதொரு கலையில்தான் இதழ் நூற்றெட்டு பைகளையே சுற்றியேதான் வளைந்திருக்கும் இருக்குமப்பா இதுகூடே இதழ் ஐந்துண்டு.

3. ஐந்தான இதழதுவில் பிராணவாயுவும் கூடியே பூலவாயுவும் முக்கோணல் மத்தியில் யோனிவாயில் உள்ளான எட்டு விரலுக்குமேலே என்றறிந்து கொள்ளே.

4. அறிந்ததொரு யோனிவாய் எட்டு விரலின் மேலே இரண்டு சமபாகம் ஒரு குழி நீரூற்றும் அதே குழிக்கு நாலு விரல் மேலதாக இருப்பதுவே ரசகலை என்று சொல்வோம் ரசகலையில்நின்று இதளதுவின் மத்திபத்தில் கீழ்நோக்கி வருவதுவே கூசேநாளம் நாளமது குழியினும் ஒருவிரல் வரை வழியாகவே தானிருக்கும் வசதியாக.

5. இந்த ஒரு விரலளவின் மேலேதானே உள்வட்டம் இதழ்கள் எல்லாம் வளைந்திருக்கும் இதில்தானே சரசசுகமேவும் தோற்றம் அதேகுழிக்கு பக்குவமுன்கால தோற்றவூதான ஜவ்வதுவும் காவலாமே.

6. ஆனதினால் அதனுள்பாகம் இரண்டு வாசல் தளம் இதனருகில்தானே சலாசயமும் அதுவழியே வந்துதானே இன்பமென்ற இடப்பாகம் கிழிந்து தோன்றும் சொன்னதொரு குழியதுவின் இருவிரல்மேல் நாகாளபடி என்றதொரு தளமுண்டப்பா உண்டான முக்கோண ஒருகோணத்தில் வலப்பாகம் தனஞ்செயனின் வாசமப்பா சொன்னதொரு

தனஞ்செயன்தான் கவர் ஆருக முழுப்பாகம் முக்கோணில் எழுந்துநின்று அழிபிரிக்கும் சலாசயத்தின் வசதிபோல வசதி என்ன கொப்புளின் வலதுபாகம் எரிகலையில் நின்று சுருண்டு சிங்குழலின் இதழ்போல்வந்து குண்டலி ஸ்தானத்தில்கூடி முக்கோணில் பிரிந்த சங்கு முகக்குழியில் நிற்கிறது.

7. பிச்சதுவின் மலர் இதழ்போல் முக்கோண் வாயில் ஒட்டியிருக்கிறது என்ருல் எரிகலையில் நின்றுசுற்றியசைந்து நாபியின் உள்ளரையில் கூடி சங்கமுக குழியின்பிலனுல் மலாசயம் என்னப்பட்டது வெளியாகிறது.

8. இப்படி மாதாவின் உந்தியில் பூவட்டமாய் பொரியசார்ந்து சாவானந்தம் பெலக்கின்றது விந்துநாதமானது கதிர்போலே சென்று சுரோணிதப்படி என்ற கருக்குழியில் விழும்போது உதானனின் பலத்தால் சுரோணிதம் சேர்ந்து விந்துமணியாகி இதழில் ஒட்டி அரைமாப்போல் கரு அமைகிறது.

9. விந்துசென்ருல் ஏழுநாளும் முப்பத்தாறு நாழிகையும் சென்ருல் பின்தான் மணியாகிறது ஆகி வாழையுடைய கூம்புபோலேயும் இதழ் போலேயுமிருக்கும் இருந்து அபான வாய்வு நின்று உருவாக்கி இதழ்மூடி வளருகிறது.

10. அதே சமயத்தில் மூன்று மாதத்தில் வாழையுடைய பொதி வருவதுபோலே வளர்ந்து தணல் உண்டாகிறது பின்னீடு உடலும் பறந்து பஞ்சேந்திரியங்களும் கைகாலும் பஞ்சபூதங்களும் உண்டாகிறது என்ருல் தலை உண்டானதன்பின் அங்கே ஒரு வட்டம் உண்டாகிறது.

11. அந்த வட்டத்தன் கீழே குமிழும் பூவின் இதழ் போலே தணல் மூடுகிறது அதுகட்டியாகி சுரோணிதம் சேருகிறது அப்போது சுரோணிதத்திலும் அபானனே நின்று சிரசிலும் ரசகலையிலும் சேர்ந்து இதழ்களின் வட்டங்கள் மூடுகிறது.

12. அவை கண் செவி வாய் கீழ்நாடி கன்னம் உதடு நாக்கே இவைகள் வட்டத்தின் உள்ளேதானே அச்ச பிராணலை என்ற உபவாய்வினாலும் அபானனதில் பலனும் கூடி அச்சதிவின் பதிவுபோலே அங்கங்கள் அமைகிறது.

13. ஆகையால்தான் இதழ் ஒதுங்கி சூடுபிடித்து பிறை என்னப்பட்ட ஒருநாளம் கீழ்நாடியின்கீழே அருகில் பதிகிறது அதுவே தலையில் நாலுதுண்டும் ஐந்துகாலங்களும் ஒன்பது தொடுவர்மங்களும் உண்டாக காரணமானது.

14. பிறகு எட்டு துண்டெலும்பும் ஆறு பொய்கையும் மூன்று சுழியும் காதில் அறுபத்திலு அரையும் பின்னே புறகாதில் ஒன்றரை விரலுக்குக்கீழே அரைவிரல் சதுரம் இரண்டினும் இரண்டு சுழியும் உண்டு.

15. காதில் மோடெலும்பிலிருந்து மூளையின் அருகில் வந்து பிறே என்னப்பட்டநாளமே உச்சியில் வெளி உண்டாக்குகிறது புறகாதில் இருபுறமும் முன்னும் பின்னும் அரை விரல் ஆளப்பதிந்து நாலுசுழியாகி இருக்கின்றது.

16. அதே குழியில் ஒருவிரலிற்குள் இரண்டு பக்கமும் இரண்டு சுழியும் உண்டு அந்தச்சுழியில்தான் சப்த வந்திரம் விசிறிபோலே உள்காதறையில் தட்டுகிறது அதனால் சுழி யசைந்து தொனியுண்டாகிறது.

17. முகத்தின் முன்னே மூக்குவாய் நாடி உள்நாக்கு புற அருகில் தொண்டையின் அலகும் மண்டை சோற்றில் உள்ள பிச்சுவின் மத்தியிலிருந்து இரண்டு பொடி எலும்பும் மூன்று அடுக்கும் ஒரு சுழியும் மூக்கில்மேல் ஒரு துவாரமும் கீழ் இரு துவாரமும் மேல்பாலமும் உண்டென்று அறியவும்.

18. அதில் இரண்டு வர்மங்களும் முகத்தில் ஐந்து காலங்களும் மூன்று வர்மங்களும் நாலு துண்டெலும்பும்

இரண்டு மோடெலும்பும் ஆறுமொளியும் நாலு சீப்பெலும்பும் உண்ணுக்கில் இரண்டு துண்டும் அதில் இரண்டு சுழியும் உண்டு.

19. அதில் இரண்டு வர்மங்களும் முப்பத்தாறு சிறு நரம்பும் நாடியில் கீழும்மேலுமாக காதினுடைய அருகு சென்னியில் வந்து சுற்றுகிறது இதில் அதிக நரம்புகள் புஜத்திலும் சங்கிலும் பிடரியிலும் மார்பிலும் கீழ்நொக்கி சிசுவினுடைய சர்வாட்சிதட்வவை உண்டாகின்றது பிரையில் கழுத்துண்டாகி முப்பத்தாறு நொருக்கெலும்பும் ஆறு சுழியும்.

20. மூன்று இசைவும் ஆறு கண்டமும் நூறு உருப்பும் கொக்கியின்கீழ் அரைவியல் சவுக்கம் ஒருகுழியும் நாளமும் சங்கெலும்பில் தொண்டைக்குளியும்.

21. அதற்குமேல் உச்சந்தலைவரை தேன் குழலின் துவாரம்போலே மண்டையில்வந்து செவிரெண்டிலும் இரண்டாகப்பிரிகிறது தலையில் நடுவட்டத்தின்மேல் தலைப்பிச்சும் தவக்குழல் வெளியும் அதின்கீழ் சீப்பெலும்பு இரண்டும் நொருக்குத்துண்டு இரண்டும் சீப்பெலும்பிலேயே ஒட்டி அதிலிருந்துதான் முக்கோணின் துவாரங்கள் உண்டாகும் உற்பனமாகிறது.

22. முக்கோணில் இரண்டு அடுக்கும் ஒரு சுழியும் உண்டு இதின முன்வசமாக கண்ணினுடைய குழியும் இமைகளும் இருக்கிறது கண்ணினுடைய குழி இரண்டு விரல் ஆழும் உண்டு பின்னே சிமிளினுடைய சோணுய குழியிலும் மாமிசம் பொதிந்திருக்கும் இதில் சூட்சாதி யந்திரங்கள் ஒளியாகி தேயு சேர்ந்து ஒளி உண்டாகின்றன.

23. கண்ணினுடைய சதையிலிருந்து பதினேழு சிறு நரம்பும் சுண்டு ஜன்னி இரண்டிலும் காதுகளின் அருகிலும் வருகிறது.

24. நரம்பின் உள்ளறையில் முக்கோணின் துவார மென்ற குழியும் தொண்டைக்குழியும் உள்நாக்கும் சங்கே லும்பில்தான் ஒட்டி வருகின்றன என்றால் குருக்கினுடைய தாரை எலும்பில் புறக்கழுத்தில் பொன் நட்டெல் வளைவில் தான் இசைவும் அசையும் சுழியும் மூன்று துண்டும் உண்டு.

25. சரீரத்தினுடைய விபரம் தலைமுதல் நரம்புகளும் வர்மங்களும் எலும்புகளும் இசைவுகளும பிரிந்து முதுகில் ஐங்கோணத்தில் புஜங்களோடு கூடுகின்றன அங்கே, நக்கள் உருண்டை சிப்பிக்கு ஆறு எலும்பும் இருபத்தாறு பொடி எலும்பும் ஐந்து சுழியும் நாலு பொய்கையும் கழுத்தினுடைய அசை அடங்கல்களும் உண்டென்றறியவும்.

26. பின்னே புயத்தில் சிப்பியின் குறுக்கே வரியில் இரண்டு வர்மங்களிலும் நாலு பொய்கையுண்டு அதிலிரண்டு காலங்களும் ஆறுவர்மங்களும் உண்டாகி பொய்கை நாலி லும் நாலு சுழியும் அரை விரல் ஆழம் குழியும் உண்டு.

27. கைப்பூட்டு என்பதுவே அந்தச்சுழி யென்றறிய வும் அதே சுழியின் யந்திரங்கள் கொண்டுதான் கைகளுக்கு அசைவு உண்டாகின்றன அதற்குமுன் வசமாயிருக்கப்பட்ட ஐங்கோணில் அறுபது சிறுநாளமும் இருபது பொடி எலும் பும் தாரை எலும்பிலிருந்து பதினாறு வாரெலும்பும்.

28. கூம்பினுடைய கூட்டிலிருந்து பன்னிரெண்டு சிப்பிவாரும் எட்டெலும்பும் பாம்பின் படம் ஆடியது போல் குருநாடியும் அருகோணில் இருப்பு என்றறியவும்.

29. என்றால் அதின் மறைவு இரண்டிலும் இரண்டு பொய்கையும் கூம்பில் நடுமத்தியம் ஒரு குழியும் சுழியும் அதிலிருந்து இடம் வலம் ஒன்றரை விரல் நீக்கி இரண்டு பொய்கையும் சுழியும்பின் காரை எலும்பிற்குக்கீழ் இரெண்டு மார்பிலும் அகமாக இரண்டு பொய்கையும் உண்டு.

**30.** என்றால் அதில் உண்டாகும் துடிப்பு அறு கோணமார்பினுலும் அதினுடைய இருப்புஉந்தியினம் அதின் மேலே இரண்டு சுழியும் தொண்டைக் குழியிலிருந்து மூன்று விரலுக்குக்கீழ் ஒரு சுழியும் இருக்கின்றன.

**31.** பின்னே அருகோணில் மூலைக்காம்புகளைச் சுற்றி எட்டுச் சுழியும் மூன்றுபதரும் பன்னிரெண்டு சுற்று நரம்பும் ஊக்கெலும்பினுடைய குழலும் தொண்டையின் கீழ் நரம்பி னுடைய அருகும் மய்யத்தில் ஒரு தண்டும் உண்டு பின்னும் அதில் தானே புத்தியிருப்பிடமும் குரு நாடியில் சேர்ந்து அசைகிறது அறியலாம் அங்கேயிருந்தொன்றரை விரல்உயரத் தில் வலப்பாகம் அரைவிரலில் காரீரலில் ஒருகூடு தோன்றி கூம்பின் வலது வசம் பம்பரச்சுடரயந்திரத்தில் அமலாசயம் என்னப்பட்டது காரீரலிலிருந்து ஒட்டாயிருக்கிறது.

**32.** கூம்பிலிருந்து ஒரு சிறுகுழல் போலேவந்து சங்கி னுடைய குழலில பதிந்திருக்கிறது அதில் சம்பந்தப் பட்டு அன்னக்குழல் சங்கு தொண்டை குழாயினும் பிறயின் முகத்தி லும் சென்று முக்கோணிலும் ஐயங்கோணிலும் தாரையுண் டாகி கூடுபோன்று வாரெலும்பும் நொறுக்கெலும்பும் உண் டாகின்றன.

**33.** என்றால் அறுகோணில் மேல்நோக்கி குருநாடியை தொட்டு மேல்வசமாய் ஆறு பிராண வையுண்டாகி பிராண சுவாசத்திலும் வாயிலும் மூக்கிலும் தட்டுகின்றன அதிலி ருந்து அறுகோணில் மேல்நோக்கி குருநாடி தொட்டு மேல் பாகம் ஆறிலும் பிராண வையுண்டாகின்றன.

**34.** காரீரலின் வலது பாகம் கூடி நகர்வதுபோல முது கினுடைய தாரையொடும் நாற்கோணில் கொண்டையின் அருகில் பக்கவாசத்தின் இடது பாகத்தோடுகூடி குருநாடி பின்னலாகி வருகின்றன.

35. அந்த அறுகோணில் முன்சொன்ன சுளி எட்டிலும் எட்டு வர்மங்களும் உண்டென்றால் குருநாடியின் உள்ளரை யானது நேர்வர்மமாகும் இதிலும் இதன் இடது வலது பாகங்களிலும் வர்மங்கள் கொள்ளக்கூடாது.

36. என்றால் பக்கமிரண்டு வர்மங்களும் எட்டும்போக நாலுகாலங்களும் இதல்லாமல் காரை எலும்பின்கீழ் இரண்டு காலமும் இரண்டு மார்பிலும் இடத்தும் வலத்தும் கைக் குழிக்கு ஐந்து விரலின்கீழ் இரண்டு காலங்களும் உண்டு.

37. பிறகு குருக்கினுடைய தாரையில் பதிந்து பன்னி ரெண்டு சுளியும் கைரெண்டிலும் பன்னிரெண்டு வசையும் கைமுட்டில் இரண்டு பாரெலும்பும் ஆறு ஒட்டு நரம்பும் உண்டு.

38. இன்னும் கைமுட்டில் நாலுமோனெலும்பும் இரண்டு பொய்கையும் நாலு சுளியும் உண்டு அதன்கீழ் மொளியிலிருந்து இரண்டு கவறாக நாலு பொடியெலும்பும் கைக்கோட்டின் மொளியில் வருகிறது.

39. பின்னே கையின் மணியில் குன்றிமுத்துப்போலே நாலுமணியும் இரண்டு சுளியும் நாலுபொய்கையும் திருகும் உண்டு அதிலிருந்து இரண்டு கோரெலும்பும் பத்துசுளியும் நரம்பும் அந்த நரம்புகள் பத்துவிரலிலும் இருபத்தெட்டு மொளியிலும் கலந்திருக்கின்றன உள்ளங்கையில் ஆறு வர்மங் களும் அறுபது சிறுநரம்பும் கவளிவர்மங்கள் எட்டும் உண்டு.

40 அதில் தொடுகாலங்கள் எட்டும் எண்ணூற்றுப் பத்து சிறுநரம்பும் அதில் தடுக்குவர்மம் மத்தியிலும் இரண்டு கையிலும் படுகாயவர்மங்களும் தொடுகாலங்களும் உற்பவமாம் பின்னே கால் இரண்டிலும் துடையில் மூலவாச லின்பொறியில் வலுவாக ஆறு எலும்பும் அங்கே இரண்டு குழியும் சுளியும் உண்டு.

41. பின்னை முக்கோணினுடைய ஒருகோணத்தில் தண்டினருகில் எண்கோணமென்றறியவும் அதில் தளைஞ் செயன் பலம்கொண்டு தண்டை அசைக்கிறதும் அதன் இருப்புஸ்தானம் உருளைசிப்பி மத்தியில் கம்பின் முனைபோல் காண்பதிலாம்.

42. குருக்கின் தாரை எலும்பின் பொருத்தும் அதே இடந்தான். அது லிங்கத்தின் வித்தின் பைக்குள் விருச்சகத்தில் மூலம்போல இருக்கின்றது.

43. ஆதலால் உருளையும் சிப்பியும் இருக்கப்பட்ட மொளியிலிருந்து ஆறுசிப்பெலும்பும் இரண்டு பொடி எலும்பும் சிப்பியின் கீழ்கோணிலிருந்து எட்டு விசைநரம்பும் இரண்டு காலுக்கும் பலமாகிறது.

44. ஆதலால்தான் முட்டின் சிரட்டையில் பிடிக்க அசைய ஏதுவுண்டாகி கீழ் எலும்பும் முகடுபோல் உண்டை லட்சணம் காட்டுகின்றன.

45. அங்கே நாலுகரண்டையும் இரண்டு பொய்கையும் நாலுசுளியும் உண்டு முட்டில் மேல் சிரட்டையும் அதன்கீழ் வளைவாக இரண்டு சுளியும் முளங்காலின்கீழ் இரண்டு எலும்பும் கீழ்கரண்டை என்ற மொளிக்கண்ணும் இந்தவகை எலும்பிலிருந்தென்றறியவும்.

46. முட்டெலும்பு இரண்டிலும் நாலுகரண்டமும் இரண்டு பொய்கையும் இரண்டு சுளியும் உண்டு குதிங்காலினுடைய நரம்பு கரண்டைக்காலின் மொளியின்மேல் காணப்படுவுதாகும்.

47. அங்கொரு நறுக்கெலும்பும் பன்னிரண்டு சிறு எலும்பும் பாதத்தில் மொளியினுடைய கண்ணும் அதன் கீளருகில் மிதியடிபோல் இரண்டு வளையெலும்பும் உப்புக் குத்தியில் சுளியும் உண்டு இதில் கூடிய நரம்புகளும் அதிகம் உண்டு.

48. அதே இடத்தில் வலதுபாகமாக அந்தந்த இசைவுகளின் பிரிவு நரம்புகள் தோன்றி அதனதன் விரல்களையும் மோளிகளையும் அசையச்செய்கின்றன இதன் உற்பவம் காலெலும்பிலும் குதிங்காலிலுமிருந்து பத்து நரம்புகள் உண்டாகி விரல்கள் அசைகிறது.

49. அடங்கல்களுக்கு மார்பு தொண்டையில்இரண்டும் அமர்த்தும் அமர்த்தி பின்காலங்களின் குணம் குறி வயறூதி நாக்கு தள்ளி வாசனையறியாமல் கிடந்தால் தொப்புளின் கீழ் நோக்கிப்பிடித்தால் பேதிபோகும் நாக்கு உள்ளிழுங்கும் போதமுண்டாகும் மேல்போட்டு பிடித்தால் பேதி நிற்கும் அதன்பின் எட்டெலும்பினுடைய மூணாவது பொய்கையில் குத்தினால் சரீரம் சுருங்கும் கோச்சல் கொளுத்தல் குளிர் சுரம் உண்டாகும்.

50. நாலாவது எலும்பின் பொய்கையில் குருந்தில் குத்தினால் வெள்ளீரலில் குத்தும் வேதனையும் உண்டாகி ஈரல் சுருங்கி பல்லு நெருநெருப்பாய் கடிக்கும் வாய் பூண்டு கொள்ளும் ஐந்தாவது எலும்பின் பொய்கை குருத்தில் குத்தினால் தொண்டைக் குழியில் குத்தும் வேதனையும் கபமும் உண்டாகும் கால் அசைக்கமுடியாது ஆறாவது பொய்கை குருத்தில் குத்தினால் வலதுகால் அசையாது வித்து சுருங்கி கொட்டாளிபோடும் நெடுமூச்சுண்டாகும் வலது மூக்கில் நீர் ஒலிக்கும்.

51. ஏழாவது பொய்கை குருந்தில் குத்தினால் அபானம் திறந்து பேதிபோகும் சுவாசம் கீழ்வாங்கும் ஓர்மையில்லாமல் துடிக்கும் மூக்கை சுளிக்கும் கண்ணு மூடும் பதினெட்டாம்நாள் மரிக்கும் எட்டாவது பொய்கையில் குத்தினால் கைதுடித்துக் கைவிளங்காதிருக்கும் நாக்கு சுருங்கும் சென்னி நரம்புகள் துடிக்கும் கைகால் வெட்டும் விக்கல் வரும் வேர்வையுண்டாகும் ஏழில் மரிக்கும் செய்யாதே பாவம்.

52. கையசைக்கிற தூங்குசதைப் பொய்கையில் குத்தோ தல்லோ கொண்டால் கை விளங்காது கை குத்தி திமிரும் கோச்சலும் நரம்புவெட்டும் சிறு காச்சலும் குளிரும் உண்டாகும் இதற்கு நிதானம் கண்டு இளக்கவும்.

53. கைசிப்பெலும்பிலிருந்து இரண்டு விரல்கீழே கையேற்றிக் குத்தினல் கவிழ்ந்து விழுந்து மண்ணை நக்கும் அலறும் பைத்தியம் பேசும் இதற்கு கைமுட்டிற்குள்ளும் மூனும் பொய்கை சுளியிலும் கீழ்மணியினுடைய அசைவு சுளியிலும் பெருவிரலின் கவளியிலும் மாத்திரை கண்டு தடவிப்பிடிக்கத் தீரும்.

54. கைக்குழியினுடைய பூட்டில் காந்தாரியில் கொண்டால் கை அசர்ந்து சிப்பி நளுகி கைதாழ்ந்து காரீயலில் ரத்தம் உறைந்து குத்தும் வேதனையும் சரீரத்தில் தரிப்பும் முகமும் கோணி ஜன்னியும் உண்டாகி கண் மஞ்சள்போல் தோன்றி மரிக்கும்.

55. என்றால் கைப்புஜத்தில் வரி எலும்பில் மூணுவது பொய்கையில் வர்மங்கொண்டால் தலைசுற்றுண்டாகி வயறு மந்திக்கும் சரீரம் குன்னும் குளிர்சுரம் சுவாசமடைப்பு மூலாதாரத்தில் வேதனை கைகால் பலக்கேடு ரத்தம் கக்கி பதினெட்டில் மரிக்கும் இருபுறமும் இதுவர்மம் உண்டு.

56. உந்தியில் குத்தோ பிடியோ அடியோ கொண்டால் சரீரம் துடிக்கும் இதில் வர்மங்கொண்டால் தாரை எலும்பு வளைந்துகூனும் குரலை அடைக்கும் நாக்குத் துடிக்கும் கண்மூடி, ஜன்னியுண்டாகி பொறி அசர்ந்து சுவாசம் முட்டி மலஜலம் அடைத்து மூக்கில் சளிவந்து வித்து பதைத்து ஆந்திரத்தில் திமிர் தோன்றி இருபத்து எட்டில் மரிக்கும்.

57. காலின்பின் உநளை அடுக்கில் இடமும் வலமும் இரண்டு பொய்கையுள்ளதில் இரண்டு வர்மமுண்டு இதில் இடியோ குத்தோ தள்ளோ கொண்டால் அசைந்து நடக்க

முடியாமல் சரீரத்தில் குத்தும் வேதனையும் இடுப்பிற்கு பலக்கேடும் சலாசயம் விழுகிறதுபோல் இளத்தரிப்பும் உண்டாகி ரத்தம் குறைந்து ஜலத்தைக்கெட்டிப்பிடித்து தொண்ணூறில் மரிக்கும்.

58. பின்னை கண்ணுதிரி என்ற சிப்பெலும்பின் உள்ளே குதிங்காலின் சிறுநரம்பு இடையில் இரண்டு சுளியும் நாலுபொய்கையும் ஆறு பொடியெலும்பும் நாலு சிப்பெலும்பும் உண்டு பெருவிரலின் நரம்புதான் மேல்பிரயில் வந்து அங்கிருந்து பூவின் இதைகள்போல் நாலாயிரமாய் பிரிந்து கபாலத்திலும் சென்னிரெண்டிலும் சங்கெலும்பினுடைய ஸ்தானத்திலும் அடிநாக்கிலும் சுற்றுவது இந்த நரம்பினுடைய தொடர் என்றறியவும்.

59. அச்சுப்போல் உற்பவித்த எண்சாணில் பொருத்துகளிலும் செவியிலும் சுழிகளிலும் நளுவெலும்பு சேர்ந்ததுபோல பின்னலான சிறு நரம்புகள் உண்டாகி பாதத்தில் பதினெட்டு வர்மமும் உண்டாகி எழுபத்தீராயிரம் நாடியும் இருபத்திரண்டு சிப்பியும் அதில் நாற்பது வாரெலும்பும் பன்னிரெண்டு உருளையும் ஆறு பொய்கையும் உண்டாயிற்று.

60. ஆகிபத்து வாயுவும் பொருத்துகளில் சுவாசப் பெருக்கத்துவாரமும் அதித்தியசூரிய சந்திரமண்டலங்களும் குழிகளும் மூலஸ்தானங்களும் துருத்தியும் பஞ்சேந்திரியங்களும் இரும்பங்கங்களும் சாலோப சாரூப சாமீப சாயுட்சியமும் அழியாதகலையும் குடலினுடைய பையரைகளும் பஞ்சபூதங்களின் இருப்பிடங்களும் அறுபது நாழிகைக்கு இருபத்தோராயிரத்தறுநூறுசுவாசங்களும் இடபிங்கலை சுழிமுனை என்ற பேசங்களின் வளர்ச்சியும் வாதபித்த சிலேற்பனமாகி அதனுடைய உதாரணம் குருநாடியும் இடை ஏந்திரமும் நட்டெலும்பினுடைய சுழிபோக நூற்றெட்டு வர்மங்களும்.

61. ஐந்து கண்டங்களும் மூன்றரைக்கோடி ரோமங்களில் நாலாயிரம் வலுரோமங்களும் நற்சுழிகளும் தொண்ணூற்றாறு தத்துவாதிகளும் ஆறு ஆதாரமும் ஒன்பது துவா

ருங்களும் ஆறு கலையும் நாலுமடக்கும் பன்னிரெண்டு முடிச்சும் ஐம்பத்தோராச்சரங்களும் கூடி பாவைபோல உண்டாகி முதலில் ரத்தம் தோன்றி மாம்சமுண்டாகி பின்னே ரோமாதிகள் உண்டாகின்றன இப்படி உண்டாகி தொப்பிளின் துவாரத்தின் வழியாய் தாயினுடைய அன்னமயம்சென்று சிசுவை வளர்க்கின்றன பின்னே ரசகலை என்பதில் உருண்டு திரும்பி தலை கீழ்நோக்கி கொடிகள் தொடர்ந்து சிசுவினுடைய உச்சியில் ஜலம் கும்பம் போலே பையில் தங்கியிருக்கும் அதின் பக்கத்தில் இரைப்பையின் வலது பாகத்தில்தான் உதானனுடைய இருப்பு.

63. பிற்பாடு மாதாவின் சர்வாயுச்சிதம்பூரண வேதனையுண்டாகி உதானனில் பலத்தால் அசைந்து சிசுவினுடைய இருப்பிடம் படிதளர்ந்து பூமியில் பிரசவிக்கின்றன உற்பவத்தின் துடர்கிறமவயணமாகி வளர்ந்து நரம்பிலும் எலும்பிலும் ரத்தம் கலந்து சரீரம் பெருத்து தன்னுடைய அளவில் எட்டுச்சாண் நீளமும் நாலு சாண் பருமனும் ஏழுமறைவாசல்களும் உண்டாகின்றன மனுஷன் தலையில் சிறுங்கொல்லி ருத்திரக்காலம் சொர்ணக்காலம் துடிக்காலம் இப்படி ஐந்து காலங்கள் உண்டென்றறியவும் பின்னே உச்சியில் துடிக்காலமும் அதன்பின் ஒன்றரை விரலில் தலையோட்டின் நேர்பொய்கை வலதுபாகம் கொம்பேரிக்காலமும் இடது பாகம் சிறுங்கொல்லியும் இப்படி ஐந்து தொடு காலங்களும் மேல் ஒரு வர்மமும் உண்டு.

64. துடிக்காலம் கொண்டால் தலைக்கு போதக்கேடும் உளைவும் செவிக்குத்தும் வேதனையும் தலையில் பிசின்போல் கசிவும் கண்ணில் சதையும் படர்ந்து காணும் இதற்கு உப்பும் வெற்றிலையும் சுக்கும் சிதைத்து உச்சியிலிருந்து கழுத்து வரை பூசி காதினுடைய மேல்வசம் பொய்கைநோக்கி இரண்டு பக்கமும் விரல்கொண்டு ஊன்றி உச்சியில் பதினாறு தடவை தடவ போதம் உண்டாகி இளகும் பின்னால் சீனியும் குக்கிலும் கூகை நீரும் வெள்ளறத்தையும் கொம்பரக்கும் கடுகு

ரோகணியும் விரைக்கு களஞ்சி மூன்றுவீதம் மலைதாங்கிச் சாறுநாழி வேலிப்பருத்திச்சாறுநாழி உரிதேங்காய்எண்ணை நாழி மெழுகுபதம் வடித்து தேய்க்கவும் தொண்ணூற்றாறு தினம் ரோகிக்கு தேய்த்தால் சுகம் உண்டாகும் ருத்திரக்காலம் கொண்டால் கண்ணுருண்டு மூக்கிலிருந்து நுரையும் காதில் ரெத்தமும் கண்ணில் காயமும் புலம்பமும் தலையுருட்டி வேதனையும் புத்தி மந்தமும் உண்டாகும் இதற்குப்புறங் கழுத்தில் பேன் குழியில் விரல் ஊன்றிப்பிடித்து சுற்றிலும் வட்டம் முழுவதும் தடவ சுகமுண்டாகும் இதற்கு நாழிகை இருபது

65. இதற்கு வயதல் கிழங்கு சதாவேலி நன்னாரி கண்டங்கத்திரி வசம்புக்குச்சார் களஞ்சு வீதம் சேர்த்து சீனியும் சித்ரமூலக்கிழங்கும் களஞ்சி சேர்த்து எண்ணையில் காச்சி மெழுகுபதம் வடித்துத்தேய்க்கவும் சுகம் உண்டாகும் கொம்பேரிக்காலம்கொண்டால் மூக்கு சுளிப்பு ஜன்னியும் அரைலும் முகத்தில் வேர்வையும் தலைக்கு விரையலும் கிறு கிறுப்பும் காதினுடைய குழியில் துடிப்பும் உண்டாகும் இதற்கு முடிவொதாளி இடித்துப்பிளிந்து பழுக்காயை அரைத்துத் தலையில் போட்டு சென்னிவட்டம் தேய்த்து சுக்குத்தூள் காதில் ஊத தீரும்.

66. இளகிலும் இதற்கு நாளிகை பத்தொன்பது இதுகழிந்து மூன்றரை நாளிகைக்குப் பின்தான் இளக்க வேண்டும் வர்மம் இரண்டிற்கும் இப்பிரகாரமேயாகும் மூக்கினுடைய பாலமும் கண்களின் இமையும் இதுபோன்ற பொருத்துகளாகும் அதில் மேல்பொருத்தில்தான், திலர்தக் காலமென்னும் சுழிமுனை ஸ்தானம் அதில் முறிந்து ரெத்தம் கொட்டினால் வாய் பிளந்து கண்ணடைத்து ஜன்னியுண்டாகும் வாயில் நுரைபாயும் சென்னிநரப்புகள் துடிக்கும் புறந் தலையில் சூடு பிடித்து சுபம் உண்டாகும் பொறி தாழ்ந்திருக்கும் கழுத்து விறைக்கும் மூன்றே முக்கால் நாழிகையில் மரிக்கும் நிச்சயம்.

67. நட்சேத்திரக் காலம் என்றது கண்ணின் கடைப் பிரகம் குழியிலாகும் அதுகொண்டால் மூச்சு உண்டாகி உறக்கம்போலிருக்கும் கண்ணுருண்டு செவி இமைச்சலும் தலைக்கு போதக்கேடும்கழுத்தில் நரம்பு துடிப்பும்உண்டாகும் இதற்கு நாளிகை ஏழு கடந்து தடவி இளக்கவும் தடவு முறை நாடியை ஏந்திப்பிடித்து புறங்கழுத்தில்பேன் குழி யில் விரல் ஊன்றிப்பிடித்து சென்னி இருபுறமும் இப்படியே செய்து கீழ்நாடியை கீழ்நோக்கித் தடவ தீரும் அதிலும் தீராவிட்டால் தொண்டையில் கொக்கிக்கு அரைவிரல் உள்ளே வலதுகை பெருவிரல்கொண்டு ஊன்றவும் ஊன்றிய பின் மேல் அலகில் அசைவில் விரல் ஊன்றி அமர்த்தவும் இளகும் நிச்சயம்.

68. பின்னே இந்த வர்மத்திற்கு கழுத்தில் ஓர் நரம்பு அசைவுண்டாகும் அதற்கு சூரிவேர் தொட்டிசங்கு மலை தாங்கி மூடில்லாத்தாளி காட்டுநாரத்து இலைத்தரி கூவளம் வேரு கண்டங்கத்தரி குமரி வகைக்கு களஞ்சி மூன்று வீதம் சேர்த்து முன்னுளி ஜலம் வற்றவைத்து மூன்றுநாள் ஆறு நேரம் கொடுக்கவும்.

69. சென்னிக்காலம் கொண்டதானால் ஒருபக்கம் சரிந்து திமிர்த்துவிழும் அலறும் மூக்கில் நீர்வடியும் வாய் பூட்டி உணர்ச்சைகெட்டு கிடக்கும் இதை இளக்குவதற்கு தலையை ஏந்திப்பிடித்து கழுத்தை அசைத்து காதுப்பொய் கையில் விரல் ஊன்றி இளக்கவும் இளகும் உபதேசப்படி பொய்கை அறிந்து பிடிக்க வேண்டும் நெற்றியில் தடவி உச்சி யிலமர்த்தவும் பதைப்பின் அருகு பொய்கையில் ஊன்றிப் பிடிக்கவும் ஒன்றால் முழங்கை அடங்கலும் விரலினுடைய நிதான நிச்சயமும் கண்டு ஊக்கேசாமல் பிடிக்கவும்.

70. செவிக்குத்திக்காலம் என்பது காதின் கீழ்தானே சுழி என்ற பொய்கையிலாகும் அதிலிருந்து ஒன்றரை விர லுக்கு மேலே அலவாடி என்ற வர்மமாகும் அலவினுடைய களுவள எலும்பு வந்த பொய்கையில் சுளி ஒன்றரை விரல் ஆளமும் தொண்டை திறக்க அலவாடியும் அறியலாம்.

71. பின்னே காதினுடைய அருகில் தலையோடெலும்பும் நெற்றியும் வந்து சேரும் மொருத்தாகும் அதில் ஒரு மஞ்சாடி பதிய ஒரு குழியும் சுளியும் இருக்கும் உண்டு அதனருகில் அரைவிரலில் நாலு அடங்கல்கள் உண்டு அடிகளின் ஊக்கத்தால் கண்வெளியில் தள்ளினால் பொய்கைக்காலம் இரண்டிலும் விரல்கொண்டு மேல்நோக்கி அமர்த்த கண் உள்ளே போகும் கைமுட்டுக்கொண்டு முதுவரியில் ஊன்றவும் கண்மெட்டில் சரியாகும்.

72. இந்த வர்மங்கள் கண்ணு தாழ்ந்து விசையிடை ஏந்தி விழுந்து பொங்கினால் பொய்கையைப் பிடித்து புருவங்களைத், தடவவும் தடவ இருப்புக்கு சரிவந்துசேரும் பிறகு மூக்கு சுளித்து அலகு கோணி இழுக்கின்ற ஜன்னியாலும் கபம் உண்டாகி முகம் வியர்த்து விரைக்கிற ஜன்னியாலும் அதேசுளியில் விரலதின் வெள்ளைமேல் தெரிய மலத்தி இடது பாகத்தில் சுற்றினால் இக்குணங்கள் தீரும் பின்னே இதனுடைய லட்சணங்கள் கண்டு உறக்கக்காலத்தில் சுளியிலும் கழுத்தின் கீழ்க்கோணில் இருத்தி உச்சியில் அடிக்க இளகும் நிச்சயம்.

73. கழுத்திற்கு மேலுள்ள வர்மங்களுக்கு அடிபட்டுக் கிடக்கும் மனிதரின் அருகில் சென்று உண்டாகியிருக்கும் குறிகளைப்பார்த்து சாத்தியம் அசாத்தியம் கண்டு இளக்கவும் சுவாசம் அடைத்து கண்ணிலும் வாயிலும் நீர் ஒலித்து நாக்கு வரண்டு கண் மஞ்சள் போல் சிவந்தோ கண் இருண்டோ கறுப்பு வர்ணமாயோ இருந்தால் அசாத்தியம் என்று கண்டு கொள்ளவும்.

74. பின்னும் மற்ற லட்சணங்களுக்கு இடது கை கொண்டு கீழ்நாடி ஏந்திப்பிடித்து அடங்கல் கண்டு சுளியிலும் கோரி ஏந்திப்பிடித்து தன்னுடைய தேகத்தோடே அணைத்து மூக்கினுடைய சுவாசங்கண்டுபிடித்து அலகு கீழ்நாடியும் மேல்மூணிலும் புருவங்களிலும் தடவவும்.

10

**75.** பின்னே செய்யவேண்டிய மருந்துகள் சவுக்காரம் திருசு சுக்கு வெள்ளுள்ளி கொட்டம் சிறுசிரகம் முருங்கைப் பிசின் குன்னி பாலைச்சார் உளக்கு காட்டு நாரத்தின் இலைச் சார் உரிம்வலிப்பருத்தி தொட்டால்வாடி கொடும்வலி வெற்றிலை இலுமிச்சம்பழம் சார் வகைக்குளக்கு கொட்டம் ஜாதி லிங்கம் கசகசா செண்பகமொட்டு தாரம் கூகைநீர் தகரம்.

**76.** மீரை சன்னல் வகைக்குக்களஞ்சி ஒன்று வீதம் பொடித்து வேப்பெண்ணை தேங்காய் எண்ணை வகைக்கு உறி கலந்து சார்விட்டுக்காய்ச்சி மெழுகு பருவத்தில் வடித்து தலையில் மத்தித்து வெந்நீர் தாரையிடவும் மூன்று நாளைக்கொரு தடவை காலையில் தேய்த்துசாயங்காலம் வெந்நீர் முழுகவும்.

**77.** திருமேனி எண்ணை வைத்து மூக்கிலும் செவியிலும் ஊதவும் மண்டையில் உள்ள வர்மங்கள் தீரும் பின்னே முகவர்மங்களுக்கும் அதிலுள்ள பொருத்துகளுக்கும் இளநீர் விட்டுத்தடவ தீரும்.

**78.** காரீரல் அரையிலும் பிரையில் நின்றுள்ளேயுள்ள பிரிவுகளும் உள்வர்மங்களும் வித்தினுடைய இருப்புக்குழாயினுடைய நாளத்தில் ஒட்டு தொடர்ச்சியாயிருக்கின்றன கழுத்தில் மூன்று கண்டமும் இரண்டு தாரை எலும்பும் அதில் சேர்ந்து நாலு பொடி எலும்பும் இருப்பின் அபயத்தாயும் இருபது சிறு நரம்பும் இரண்டு கதிர்நரம்பும் பிரையில் இரண்டு சுழியும் அலகினுடைய கோணில் என்றறியவும்.

**79.** பின்னும் புஜவர்மமும் பிடரிக்காலமும் அந்தச்சுழியிலிருந்து பிரிந்த நரம்பிலே என்றாலும் பின்கழுத்தில் நெட்டியின் அகத்தில் ஒரு பொய்கைபுண்டாகி சுழியில் ஒட்டு நரம்பைப்பற்றியிருப்பதால் பொய்கை சுழியே பிரதானம் என்றறியவும் அந்த சுழியில் வர்மங்கொண்டால் பொரி அசர்ந்து கழுத்து விரைத்து சேகம் கோணும்கைதிரிக்கும் கண்ணு மூடி-சன்னிபுண்டாகும் அது அசாத்தியமுமாகும இளக்க வேணுமென்றால் இடதுகால் கொண்டு முதுகில் பொய்கை நோக்கி

சுழியில் ஊன்றி கையுடைய குழியிலும் பிரயுடைய சுழியிலும் விரலூன்றி அமர்த்திக்கொள்ளக் கண்திறந்து உடன் சுகம் கொடுத்து எழில் மரிக்கும்.

**80.** பின்னும் உள்ளுக்கு முறிந்தாலும் வர்மம் பன்னிரெண்டிலும் கொண்டாலும் அறியும் லட்சணம் குருநாடியிலிருந்து பிரிந்த பன்னிரெண்டு நாடிகளில் முக்கோணில் இரண்டும் பெட்டியில் ஒன்றும் தொப்புளினுடைய உள்ளரையில் ஒன்றும் இரப்பையில் ஒன்றும் சிறுகுடலில் ஒன்றும் ஐங்கோணில் இரண்டும் அருகோணில் நாலுமாய் ஒதுங்கியிருக்கின்றன.

**81.** இந்த வர்மங்கள் கொண்டவுடன் குரு நாடிக்கு குளிர்ச்சை உண்டாகி பதுங்கி அசைகின்றது அப்போது பன்னிரண்டு நரம்பும் யந்திரத்தினுடைய துடர்போலே சுற்றி அது கொண்டு பின்பாகம் துடித்து குருநாடியுடைய துடிப்பும் வாத பித்த சிலேற்பனங்களும் போகமற்றுப்போகின்றன.

**82.** என்றால் இருப்புக்காலமும் மூத்திர மண்டிக்காலமும் ஆறுதிரைக்காலம் பெரிய சடைக்காலம் சிறிய சடைக்காலம் யோகக்காலம் மதியடப்பன் பெரிய மட்டாக்கம் அடியரக் காலம் இவைகள் சுளியினுடையதாகும் இவைகளெல்லாம் என்னேக்கணுகி பரீட்சை நோக்கினுல் அசாத்தியம் செய்யாது.

**83.** இந்த வர்மங்களுக்கு பரீட்சை தீர்ந்து சாத்தியம் என்று கண்டால் அடங்கல்களில் பிடித்தால் இளகும் வேதனை நீங்கி சுகம் உண்டாகும் நிச்சயம், கைவிரல்களிலும் பின்னும் மஞ்சாடிக் குழிபோன்ற அடங்கல்களிலும் பிடித்து இளக்கயில் கைக்கும் பிடிகொள்ளாவிட்டால் பயறு நெல்லு காணம் இவைகளை சந்தர்ப்பம்போல் அந்தக்குழிகளில் வைத்துப் பிடிக்கவும் ஒவ்வொரு ஸ்தலத்திலும் மாத்திரை நாலுவிதமாகும் சங்கெலும்பினுடைய முகடு என்னும் இடத்தில் கையசைத்து குத்தினுல் குளிர் சுரம் கபம் ஜன்னி உண்டாகும் அதே வசத்தில் மஞ்சாடிக் குறுவைத்து மற்றடங்கல்களிலும் மேல்நோக்கி அமர்த்த தீரும்.



84 பின்னே சங்குதிரி என்பது கழுத்தின் முன்பாகம் மூன்றாவது எல்கையினுடைய பொய்கையிலாகும் அவ்விடத்தில் கையேற்றிக்குத்தினால் தேகத்தில் குத்தும் வேதனையும் கைக்கு துடிப்பும் புஜத்தில் வீக்கமும் உண்டாகும் கீழ்நோக்கி அசைத்து சுளிக்கும்.

85. வலது பாகத்தில் கொண்டால் புஜம் வீங்கி சுவாசம் முட்டி கண்ணு திறந்து குத்தும் அனலும் உண்டாகி கைக்கு கோச்சலும் கொளுத்தும் தாரையெலும்பிற்கு குளிர்ச்சையும் வெள்ளீரலில் வேதனையும் உண்டாகும்.

86. பின்னும் சிப்பெலும்பின் பொரி அசர்ந்து கை தளர்ந்து சக்தியிழந்து கை உன்னுசரீரத்தில் மாம்சமிழுத்து சிப்பிக்கு விதனம் உண்டாகுமென்றறியவும் இதற்கு மறுவசமாய் சிப்பியின் ஸ்தானம் நோக்கி மாத்திரை கண்டுபிடிக்கத் தீரும்.

87. கண்ணுதிரி என்பது கைமொளியினுடைய குளியிலாகும் அதில் வர்மங்கொண்டால் கைக்குழி மடக்கும் பொய்கையில் பையும் ஜலமும் உண்டு அதில் இடியோ தள்ளோ கொண்டால் ஜன்னியும் சரீரத்தை முருக்கவும் செய்யும் இதற்கு மாத்திரை அடங்கல்.

88. கைமுட்டினுடைய பொய்கையில் விரல்கொண்டு கீழ்நோக்கி அமர்த்தினால் மொளியானது தனது இருப்பில் வந்து சேரும் பின்னும் விரலினுடைய வெள்ளைமலத்தி கீழ்நோக்கி நெருக்கிப் பிடிக்கவும் புறமணிக்கெட்டில் கொண்டாலும் சுளிவிட்டு விலகி கைவிரைக்கும் சக்தியிழந்து திமிர் உண்டாகும் சரீரம் உள்வளைந்து சுரம் குளிர் கபம் ஜன்னியும் உண்டாகும்.

89. இதற்கு முதலில் அடங்களில் அமர்த்தி சிலேற்பன நாடியும் கண்டு அமர்த்தினால் பெருவிரல் அசைந்து குளிரும் கோச்சும் கொளுத்தும் குத்தும் கைசிப்பியின் வீக்கமும் உளைவும் தீர்ந்து கைக்கு சக்தியுண்டாகும்.

90. பின்னே சிறுவிரல் இடதுபாகம் சுளிந்து நகக்கண்ணில் ஊக்கேறி வளைந்துபோனால் ஊனனை ரோகம் ரத்தமூரட்சை உண்டாகும் இதிலுள்ள வர்மங்களெல்லாம் மேல்நோக்க ஏற்றால் சங்கை திருகி இளகி துடித்து சிப்பிதளர்ந்து உள்நாக்குணர்ந்து போஜனம் வெறுத்து.

91. கைக்கு வேதனையும் குத்தும் கோணலும் உள்ளங்கைக்கு ஊனமும் வீக்கமும் கைசரிவான தோற்றமும் உண்டாகும் இருகைகளிலும் இதுபோல் என்றறியவும் இவைகளுக்கெல்லாம் அடங்கலும் மாத்திரையும் வில்லும் விசையிலும் சொல்லப்பட்டிருக்கின்றன.

92. விரலின் இடப்பாகம் உள்ளங்கையில் சுளியில் கண்ணுந்திரியாகும் இவைகளெல்லாம் இளக்கும் மார்க்கம் இந்த நாலுகை மாத்திரை பிரமாணம் பார்த்து செய்துகொண்டால் தீராததொன்றுமில்லை பிடரியில் வலதுபாகம் பெருநரம்பில் விசையற்றுப்போனால் வித்து உள்ளிழுக்கும் அசதி கபம் அடைக்கும் அலரி பெருமூச்சுவிடும் மலந்து கிடக்கமாட்டாது ஒரு கண் அடைத்து மறுகண் திறந்திருக்கும் மாத்திரைப் பிரகாரம் இளக்கிக்கொள்ளவும் இளகும் பதிமூன்றில் மரிக்கும் இந்த நாலுகை மாத்திரை பிரமாணம் பரீசந்தம் கண்டு பரீட்சிக்கவேண்டும் இப்பிரமாணம் தன்னுடைய பிள்ளைகளுக்கல்லாமல் பிறருக்குக்கொடுத்தால் குடிபவனத்திற்குத் தோஷம் உண்டாகுமென்றறியவும்.

93. இப்பிரகாரம் சூட்சமாய் காலநிதான பிளைகுறி சாகுறி கண்டுகொண்டு இளக்கவேண்டும் மாத்திரை நாலு என்பது ஈடு ஏமம் காலம் வர்மம் என்று சொல்லப்படும் விசை சரியாய் ஏற்றுப்போனால் விசைநரம்பினுடைய குற்றம் தீர்ந்தாலும் ஆறுவருஷத்திற்குள் சயம் உண்டாகும் குருவிணை சத்தியம்.

94. பின்னே தன்தேகம் அளவிற்கு எண்சாணுள்ள மனிதசரீரம் அடங்கலும் பின்னலும் பொய்கையும் மாத்திரையும் வர்மங்களும் உள்வர்மங்களும் துண்டு சுளிப்பொருத்து

களும் இசைவும் சிப்பெலும்புகளும் சொல்லப்பட்டிருப்பது போல் நிச்சயம் அறியவேண்டும் வர்மங்களினுடைய லட்சணங் களும் பரிசை அறியக்கூடிய ஸ்தானங்களும் மருந்துகளும் ஒடி முறிவிற்கு செய்யவேண்டிய முறைகளும் அறியவேண்டும் இசைவில் எலும்பு ஒடிந்து எலும்புகளின் கிரலும் சிதரலும் உண்டானால் உள்விரையல் ஆதாரத்தில் குத்து ஜன்னி நடுக்கம் புலப்பம் ஆங்காரம் சுவாசபோதம் முகம் கோணி இழுக்குதல் இக்குறிகள் கண்டால் பன்னிரெண்டில் மரிக்கும் என்றாலும் ஆறமடக்கில் நீளத்தில் சீனிவைத்து எலும்பினுடைய உள்ளுக் கும் வைத்து சுற்றிக்கட்டவும் சதகுப்பையும் கரியபகழும் வேப்பன் பிசினும் குக்கிலும் செஞ்சந்தணமும் வகைக்குக் களஞ்சி மூன்றுவீதம் சேர்த்து நல்லெண்ணை நாளியில் காச்சி முறிவில் தாரயிடவும்.

95. பின்னே உச்சிக்கு அக்கரா சூரணம் சேர்த்து ஒற்றளம் போடவும் முட்டினுடைய கீழ் எலும்பில் இரண்டு வில்லிற்கும் மேல் எலும்பு ஒடிந்து விழுந்துபோனால் கண் ணயர்ந்து அறிவுகெட்டு பொறியசைந்து சரீரத்தில் உருமலும் கபஜன்னியும் வலியுமுண்டாகி தொண்ணூற்றொன்பதில் மரிக் கும் இதைத்தடவி எலும்பு சரிபட வைத்து கிளிகொண்டு பிடித்து துணியிட்டுக்கட்டி பச்சை நல்லெண்ணையில் பளுக் காயும் ஜாதிக்காயும் சதச்சிட்டு வேலிப்பருத்தியும் அறிந்து போட்டு ஊறவிட்டு தாரையிடவும் பின்னே சீனிபலம் ஒன்று கடுக்காய் சிவதை அமுக்குரா ஆசாளி திப்பிலி சிறுசிரகம் பூவத்துமீரை வெண்காரம் அரிசிதிப்பிலி கொம்பரக்கு மாஞ்சி இவை வகைக்குக் களஞ்சி ஒன்று வெள்ளைநொச்சி குப்பை மேனி தவளை இசங்குதோடை தூதுவளை சிறியானங்கை விராலி ஓரிலை பொன்னுவரை இந்தவகை சாறுளக்கு வீதம் சதைத்து வடிகொண்டு சாறும் சேர்த்து கோழிச்சாறும் சேர்த்து தேங்காய்நெய் உரிநல்லெண்ணை உரிமருந்தும் சாறும் எண்ணையில்கலந்துமெழுகுபதம் வடித்து கொடுக்கவும் கரண்டி வீதம் நாளிருபோதாக ஒன்பதுநாள் கொடுத்து லட்சணம் நோக்கவும் முட்டுகள் எல்லாம் இவ்விதமென்றறியவும்.

96. பின்னும் மணிக்கட்டிற்குமேல் சமீபம் பொய்கை யில் வர்மம் கொண்டால் கை திரிமிர்ந்து வீக்கமுண்டாகி கைக்கு வசைவில்லாமல் உளைவும் வேதனையும் குத்தும் ஜன்னி சரீரத்தை முறுக்குவதும் மலஜலம் விழுந்து உள் வேதனையும் மயக்கும் கோச்சலும் இப்பிரகாரம் எல்லாக்குறியும் உண் டாகும்.

97. பெருவிரல்நகவெள்ளைக்குமேல் ஒரு நெல்லைவைத்து அமர்த்திப்பிடிக்கவும் பிடித்தவுடன் கைக்குவசைவுண்டாகும் மறுபுறமும் சுழி இசைவில் அமர்த்தவும் உடன் வீக்கம் வற்றி கை உளைச்சலும் சலாசயத்தின் பரிவகங்களும் சரீரம் முறுகு தலும் ஜன்னிகளும் தீர்ந்து சுகம் உண்டாகும் இதற்கு குருந் தொட்டி அமுதவல்லி தாருவேர் குடங்கல் அவரி சரியாநங்கை நஞ்சறுத்தான் விஷ்ணுகிராந்தி வகைக்குச்சார் உளக்கு ஜாதிக் காய் ஜாதிப்பத்திரி ஏலம் சந்தனம் மாஞ்சி தேவதாரம் அமுக் குருவும் கொம்பரக்கு ஆசாளி ஆமணக்கெண்ணெ வகைக் குளக்கு கடைமருந்து வகை களஞ்சி மூன்று யாவும் சேர்த்து மெழுகு பருவம் வடித்து இருவேளை ஆறுநாள் உள்ளுக்கும் வெளியிலும் தேய்க்கவும் பின்னை முறிவெண்ணெ சாறணை வேர் எழுத்தாணிப் பச்செலை ஆடுதீண்டாப்பாளை கையாந் தகரை பொடுதலை ஓரிலை ஈரிலை மலைதாங்கி மூடில்லாத்தாளி தும்பை வேலிப்பருத்தி வகைக்குச்சாறுளக்கு திப்பிலி கரிய பகழம் கண்டங்கத்தரி இலவங்கம் சன்னம் கிரும்பு கவயம் அதி மதுரம் யாளியரிசி அமுக்குரா சிறுநாகப்பூ வெள்ளரத்தை அக் கிராகாரம் பளுக்காய் இவை வகைக்குக்களஞ்சி ஒன்று வீதம் நல்லெண்ணெ நாளியில் காச்சி முறிவிலிடவும் புண் சுகப்பட்டு குழிவிழுகும்.

98. பின்னும் கவளிக்காலத்தில் நெல்லிடை விலகி கவ ளியில் மேல்நோக்கி ஊனிப்பிடித்தால் கைக்கு கோச்சும் குத் தும் வேதனையும் வீக்கமும் உண்டாகி துள்ளி விரைக்கும் இதற்கு பச்சை நரம்பை தடவிப்பிடித்து கீழ்நோக்கி நீர் கொண்ட நரம்பிலமர்த்தவும் கையை அளந்து இடம் கண்டு

அமர்த்தவும் அப்படி அமர்த்துகையில் அதில் ஒரு சிறு நரம்பும் அசையும் அதைப்பிடித்து முறிவெண்ணை தாரை யிடவும் மறுகையிலும் இதுபோலாகும்.

**99.** உள்ளங்கையில் தெச்சணைக்காலம் கொண்டால் அதினுடைய அடங்கல் கைமடக்குக் குழியிலாகும் அதில் விரல் ஊன்றி மேல்நோக்கி அமர்த்துவாய் விறயல் மாறும் சுற்றிக்கிறக்கினால் உட்சுரம் மாறும் கீழ்நோக்கி அமர்த்தினால் சன்னி மாறும் கீழ் சுவாசம் உண்டென்றால் கைவெள்ளை மறுபுறட் அமர்த்தவும்.

**100.** இதற்கு குக்கில் ஈதகுப்பை யாளியரிசி கொம் பரக்கு நருக்குமூலம் வெள்ளரத்தை சிறுநாகப்பூ கச்சோலம் மாங்கம் கற்கடகசிங்கி இத்தனையும் நல்லெண்ணையில் மெழுகு பதம் வடித்து தாரையிடவும் கோச்சலும் கொளுத்தும் குத்தும் வேதனையும் வீக்கமும் சன்னியும் சுவாசம் பெருக்க மும் குளிர்காச்சலும் சுகமாகும்.

**101.** இன்னும் பெருவிரல் நகக்கண்ணிலிருந்து ஒரு விரல் உயர அசவுதிரியில் உளுக்கு என்னும் சுளுக்கு வர்மம் கொண்டால் கண்ணு கரிக்கும் கண்ணில் சதையுண்டாகும் பின்னே இளகிவெட்டும் அலகு கோச்சும் இதற்கு பேன் குழிக்கு இரண்டுவிரல் வலதுபாகம் பெருநரம்பின் இடையில் காணும் சிறுநரம்பே அடங்கலாகும் அதைப்பிடித்து மேல் நோக்கி அமர்த்துகா கண்ணில் சதைமாறும் கீழ்நோக்கி அமர்த் துகா கலிப்புமாறும் கைவிரல் வெள்ளையை மலத்திக்கொண்டு அமர்த்தினால் பனி குளிர் கபம் மாறும்.

**102.** இதற்குக் கொடுவேலிக்கிழங்கும் காட்டுள்ளியும் சாரணக்கிழங்கும் வேலிப்பருத்தி சாறிலரைத்து முலைபாலில் தாரையிடவும் வெள்ளரத்தையும் கரியபகழமும் பாலி லரைத்து தாரையிடவும் இதற்கு எண்ணை கடுகு கொட்டம் கொத்தமல்லி திப்பிலி மூலம் கொம்பரக்கு மீரை கார்கோலரிசி சிரகம் மாஞ்சி வகைக்குக் களஞ்சி ஒன்று நல்லெண்ணையில் கடுகுபதம் காச்சி சேவிக்கவும் சுகம் அந்த வர்மத்திலிருந்து

ஒன்றரைவிரல் மேலே அசவுதிரிக்காலம் அதில் கொண்டால் உடன் ஜன்னியும் சரீரத்தில் நடுக்கமும் கைக்குக்கோச்சலும் குத்தும் வெள்ளிரலில் வேதனையும் உண்டாகும் இதற்கு அடங்கல் மாரில் நாலுவிரல் உயர விசை நரம்பில் பிடித்துக் கீழ்நோக்கி அசைக்க ஜன்னி மாறும் மேல்நோக்கி அசைக்க நடுக்கலும் விரயலும் தீரும் விரல் வெள்ளை சுற்றிக்கிரக்க கைக் கோச்சலும் தரிப்பும் மாறும் இதற்கு நெய் குருந்தொட்டி வேர் கருஞ்சுண்டை வேர் வெள்ளைக்குன்றி வேர் கூவளத் தின் வேர் வேலிப்பருத்தி வேர் உளிஞ வேர் மணப்புல்லு வேர் அருகன் வேர் வகைக்குக்களஞ்சி ஒன்று சதாவேரிக் கிழங்கும் கொடுப்பை கைதோனி இவை வகைக்குச்சாருளக்கு கொம்பரக்கு கொத்தமல்லி அமுக்குரு திப்பிலி தேவதாரம் முருங்கைப்பிசின் இவை வகைக்குக்களஞ்சி ஒன்று வேப் பெண்ணை நல்லெண்ணை பசுவின் நெய் இவை வகைக்கு உரியில் மெழுகுபதம் வடித்துக் குடிக்க சுகமுண்டாகும். பின்னை காட்டு ஜீரகத்தை காடியிலரைத்து வெதுப்பி மேலுக்குப்பூசவும் மூடில்லா தாளியும் உளிஞ சாறும் பசுவின் பாலில் சாலித்து தாரையிடவும் இவைகளில் தீரா விட்டால் மூலத்தில் மோனெலுப்பில் மேல் நோக்கி விரல் அசைத்துக் கொடுக்க சுகமுண்டாகும்.

103. இன்னும் பெருவிரலசைக்கிற குழியில் மொழி வர்மம் அந்தப் பொய்கையில் ஊன்றிப்பிடிக்கவோ குத்தோ தல்லவோ கொண்டால் பித்த நாடிக்கு சூடுண்டாகி கை விரலுக்கு வேதனையும் கோச்சும் குத்தும் அனலும் உண்டாகும் இதற்கு பித்தநாடியிலிருந்து யன்னிரெண்டு விரலுக்கு உயரே ஒரு சிறு நரம்பு போகும் அந்த நரம்பைப் பிடித்து கீழ் இழுத்து அமர்த்தவும் கையின் அசையாடங் கள் உடனே நிற்கும் மேல் நோக்கி அமர்த்தவும் அலகு கோச்சலும் சீதம் ஜன்னியும் தீரும்.

104. பின்னும் இரெண்டாம்விரல் நகக்கண்ணிலிருந்து ஒரு விரல் உயரே கோச்சல் வர்மம் அதைப்பிடித்து கையை

வெள்ளை மாற்றி திருப்பினால் விரல் துள்ளி வியலும் கோச்சும் குத்தும் விஷமேறுவதும் பதினைந்து நாளிகைக்கு மேல் ஜன்னியும் உண்டாகும் இதற்கு கைப்புறத்தில் சுளி நரம்பில் பிடித்து கீழ்நோக்கி அமர்த்தினால் விரல் துள்ளி விரைப்பது நிற்கும் மேல் அசைத்துப் பிடித்தால் கோச்சலும் தரிப்பும் தீரும் அல்லது மாரின் வலது வசம் பிடித்து அமர்த்தினாலும் தீரும் பின்னை பதினைந்திற்குமேல் உண்டாகின்ற ஜன்னிக்கு காதிற்கு ஒரு விரலுக்கு உயரே மோமெனலும்பில் அமர்த்தவும் சுகமுண்டாகும் இதற்குக்கை யாந்தகரையும் நீர் நெறுப்புச்சாறும் புங்கினுடைய பாடதாளியும் சதைத்திட்டு பசுவின்பாலில் தாரையிடு சுகம் மாதளம் பூவும் தேங்காய்பூவும் பாலிலரைத்து உச்சியில் தப்பழும் போடத்தீரும்.

105. பின்னும் மூன்றுவது விரலில் மோனு பொய் கையில் சுளுக்கோ குத்தோ தல்லலோ கொண்டால் கண்ணில் காசம் கபாலம் இடித்து மந்தம் செவி இரைச்சல் உள்ளங்கை வீக்கம் இவைகள் உண்டாகும் இதற்கு நாடி கூடுகின்ற இடத்தில் அடங்கல் அதில் பெருவிரல் கொண்டு கீழ் நோக்கி அமர்த்தினால் செவியிரைச்சல் உள்ளங்கைவீக்கம் சுகமாகும் அதில் விரலை சுற்றிக்கிரக்கினால் சகலமும் சுகம் பின்னை கொடுவேலி இலையும் நஞ்சருத்தான் வேரும் காட்டெருமைப் பாலில் கிண்டி வேகவைத்து அனத்தவும் சுகம்.

106. பின்னை பச்சை நரம்பினுடைய உள்ளரையில் வர்மங்கொண்டால் உடனே ஜன்னி கபம் விக்கல் வலி இளைப்பு மயக்கம் இவைகள் உண்டாகும் இதற்குக் கைக் கூட்டில் மோனு சுளியில் வந்து சுற்றிவைத்து கையணைத்து மேல் நோக்கி அமர்த்துகா ஜன்னி கபம் நிற்கும் கீழ் நோக்கிப் பிடிக்க வலி இளைப்பு இரைப்பு போதக்கேடு சுகமாகும் அல்லது பேன் குழியில் கீழ் நோக்கி அமர்த்தினாலும் தீரும்.

107. மணிக்கட்டில் நாலுவிரல் உயரே முறிந்தால் ஒன்பதில் பன்னிரெண்டில் மரிக்கும் உள்ளங்கைக் குழியில்

முறிந்தால் பனி குளிர் ஜன்னி வெட்டுண்டாகி ஆறுக்குள் மரிக்கும் நிச்சயம்.

108. பின்னே கைமுட்டி னுடைய சுளியிலும்முட்டி லும் ஒடிந்தால் கண்ணுவெட்டும் போதக்கேடும் புலம்பலும் உண்டாகி இருபத்தாறில் மரிக்கும் இதுகளெல்லாம் சிகிச்சை செய்தும் அசாத்தியமாகும் மற்றும் குணங்கள் அனுபவத்தில் அறியவேண்டியவைகளாம்.

109. இன்னு நாலுவிரலில் ஒன்றும் விரலின் மொளி யில் உயர சுளியில் ஒரு சிறு நரம்பு உண்டு அதுவும் அடங்கலாகும் அதில் நெல்லுவைத்துப் பிடிப்பதற்கும் இதில் அமர்ந்த ஜன்னி நிற்கும் மேல் நோக்கி அமர்த்த கடம் வலி இருமல் தீரும் மேல் நோக்கி சுளித்து அமர்த்தினுல் புயத்திலும் முட்டிலும் • மணிக்கட்டிலும் குத்தும் வீக்கமும் உண்டாகி பின் ஊனமுண்டாகும் மார்பில் மூன்று விரல் உயரே அடங்கல் ஒன்று இதில் மாத்திரை நோக்கிக் கொள்ள வேண்டும்.

110. பின்னே அதேவிதம்போல் உள்ள முறிவுகளுக்கு பொறி எலும்பு முறிவாகி வருமென்றறியவும் அதன் மேல் பச்சையிட்டு வகைபோலே தடவி கைப்பாகம் அறிந்து அணைத்து நிருத்தி பொய்கை பிடித்து கெட்டி• மருந்து செய்யவும் பிரமாணத்தில் சொல்லியதுபோல் செய்யவேண்டும் அறிந்துசெய்யவேண்டும் இப்பொடுத்தடங்கல்கள் தவிர விரல்களில் பத்துவர்மங்களும் இசைவுகளில் சொர்ணக் காலமும்போக ஐந்து வர்மங்களும் உண்டு. இதில் அடங்கலும் உண்டு. பத்து வர்மங்களிலும் ஆதிரையில் முறிந்தால் ஏழு நாழிகை களிந்து கையணைத்து சிப்பியில் அமர்த்தி விரல் ஊன்றி மேல் நோக்கித் தடவவும் சுகம் உண்டாகும்.

111. பின்னே வெந்தயம் விளாத்திப் பிசின் ஓமம் வெள்ளைக் குங்கிலியம் கரியபகழும் நல் எண்ணையில் சாலித்து சீலையிட்டு சுற்றி அரைசவிட்டுக் கட்டவும் குக்கில் சதகுப்பை கொம்பரக்கு நாகணம் ஏலம் கருஞ்சீரகம் கார்கோல் கச்சோ

லம் வால்மிளகு வகைக்குக் களஞ்சி இரண்டு வீதம் எண்ணெ யில் கடுகாயரித்து தாரையிடவும் என்றாலும் பன்னிரெண் டில் மரிக்கும்.

112. பின்னை காலில் தூங்கு சதையில் முறிந்தால் மூலத்தில் கோச்சலும் கைகால் வெட்டி வியர்வை யுண்டாகி முப்பத்தாரில் மரிக்கும்.

113 பின்னை வாரெலும்பு பொடிந்து உள்ளே போனால் மனுஷனுக்கு போதக்கேடும் உள் வரட்சையும் வெள்ளீரலில் குத்தும் உள் காச்சலும் உண்டாகும் கழுத்தின் கீழே ஐந்தாவது எலும்புவரை முறிந்தால் கைச் சிப்பியில் மூணாவது பொய்கையில் விரல்கொண்டு அசைத்து இருத்த வேண்டும் அப்போது குணங்கள் மாறும் உள்ளே பொய்கை எலும்பில் தொப்புளிலிருந்து வலது வசம் அமர்த்தியும் குருக்குத்தாரனந் தடவி நெஞ்சில் கையிணைக்கவும் செய்தால் எலும்பு ஒப்பித்துவரும் இப்பிரகாரம் ஒவ்வொரு எலும் புக்கும் செய்து கொள்ளவும் என்றால் எலும்பு இசைவில் வருமென்றறியவும் பின்னே மாறுப்பிட்டுக் கட்டி சரீரம் அசையாமல் பார்த்துக்கொள்ளவேண்டும்.

114. இதற்கு எண்ணெ குடங்கலும் நாகப்பட்டையும் புங்கன் இலைச்சாரும் சதாவேலிக்கிழங்கும் கொம்பரக்கும் குக்கிலும்சதகுப்பையும் நல் எண்ணெயில் சேர்த்து மெழுகா யரித்துசரீரத்திலிட தீரும். பின்னே மலைதாங்கி வேரும் அரு கன்புல்லுவேரும் வெள்ளைக்குன்னிவேரும் வேலிப்பருத்தி வேரும்வெள்ளைக்காக்கணத்தின் வேரும் சுண்டை வேரும் வேளைவேரும் சங்கன்வேரும் வகைக்குக்களஞ்சிஇரண்டுவீதம் அசி சிவகை ஆறு குக்கில் கொம்பரக்கு திப்பிலி கொட்டம் சிறுநாகப்பூ கண்டங்கத்திரி இஞ்சி வகைக்குக் களஞ்சி மூன்று சதைத்து கால்படி ஜலமாக கஷாயம் வற்றவைத்து ஆறுநாள் பன்னிரெண்டு நேரம் சேவிக்கவும் பின்னே கண் டங்கத்திரி வேப்பம், பிசின் கருங்குடங்கல் வேலிப்பருத்தி பழமாங்காய் மலைதாங்கி இலை ஒன்றாய் சதைத்து நல் எண் ணெயிலாக்கி இடவும்.

115. பின்னே முகத்தின் முறிவிற்கு மூடில்லா தாளியும் சாரணைக்கிழங்கும் பச்சை நெல்லரிசியும் காடி வெள்ளத்தில் அரைத்து தலையில் தப்பளம் போடவும் ரெத்தச்சந்தணம் நல்லெண்ணையில் மத்தித்து அனத்தவும்.

16. பேன்குளி என்ற புறங்கழுத்தில் முறிந்தால் வெள்ளைக்குங்கிலியம் கடுகு கொத்தமல்லி முருங்கைப்பிசின் இத்தனையும் நல்லெண்ணையில் வேகவைத்து அனத்தவும் மூடில்லாத்தாளியும் அத்திக்கொழுந்தும் அரைத்து பாலில் வெதுப்பித்து இடவும் இப்படி சகல முறிவுகளுக்கும் குணங்கள் கண்டு சிகிச்சிக்கவும் வெள்ளைக்கல்லை தீயிலிட்டு பழுக்கவைத்து தேங்காய்ப் பூவும் நொச்சிக்கொழுந்தும் சதைத்து யிட்டு துணியில் பரப்பி கல்லை மேலேவைத்துப் பொதிந்து கிளிக்கட்டி அனத்தவும். பின்னே வேப்பம் பிசினும் சுக்கும் ஆசாளியும் கொட்டமும் கொத்தமல்லியும் விழுலி இலையும் எருக்கலையும் முருங்கப்பூவும் பாலில் அரைத்து நல் எண்ணையில் கிழியை வேகவைத்து அனத்தவும்.

117. பின்னே காலினுடைய கண்ணு விலகிப்போனால் குதிங்காலினுடைய பொய்கை சுளியிலும் பக்கத்திலும் பிடித்து இரண்டைாம் விரலில் கொண்டு நிறுத்தி அசைத்து ஊன்றிப்பிடிக்கவும். விலகிய கண் இசைவில் விழும் பின்னே வெற்றிலைச்சாறு துணியில் நனைத்துச் சுற்றவும்.

118. காலினுடைய மொளியில் பொருத்து நழுகிப்போனால் பெருவிரல் தடவி உள்ளங்காலில் கீழ்நோக்கி அமர்த்தவும். மொழி இசைவில் விழும் பின்னே மூடில்லாத்தாளியும் சுக்கும் கொம்பரக்கும் கொட்டமும் முலைப்பாலிலரைத்து துணியில் சுற்றவும் ஒவ்வொரு விரல் மொழிகளுக்கும் இப்பிரகாரம் செய்தால் வேதனை தீரும்.

119. பேன்குழியில் கை ஏற்றி அடித்தால் மயங்கி போதம் கெட்டு உணர்ச்சைமாறி ஜன்னியுண்டாகி சுண்டச் சளிக்கும் வலிப்பும் கபமும் உண்டாகும் பெருவிரல்

கண்டங்களில் பிடித்து கீழ்நோக்கி அமர்த்தவும் கண்ணடைப்பு மாறும் வலியும் தீரும். சுளித்து சுற்றிக்கிரக்கபம் தீரும்.

120. பின்னும் கண்ணினுடைய மேல் குளியில் நசுங்கலோ குத்தோ கொண்டால் கண்ணடைத்து போதம் கெட்டு வாயில் நுரை ஒலித்து மூக்கு சுளிக்கும் இதற்குப் பேன் குழிக்கும் மூன்று விரல் வலது வசப்பொருத்தடங்களில் கைவிரல் கொண்டு மேல்நோக்கி அமர்த்தவும் விக்கல் வலி கபம் தீரும் இடது பக்கம் சுளித்து அமர்த்தவும் விரயல் உள் சுவாசம் தீரும் பின்னே நெற்றியில் முறிந்தால் மரிக்கும் மற்றும் விபரங்கள் பிரமாணம் படித்து அறியவேண்டும்

நாலுகை மாத்திரை பிரமாணம் முற்றிற்று.

குருவே துணை.

## வர்மவில்லும் விசையும்.

1. மேல்கண்டக்காலம் வெற்றிலைக்காலம் சுண்ணும்புக்காலம் மஞ்சள்காலம் குற்றிக்காலம் கொம்புகுத்திக்காலம் கொண்டைக்காலம் சிறுங்கொல்லி கோணச்சன்னி வர்மம் உச்சிக்காலம் நாக்கடப்பன்காலம் பிடரிக்காலம் பைத்திய வர்மம் திலர்தக்காலம் நட்சத்திரக்காலம் செவிக்குத்திக்காலம் இவைகள் தலையில் உள்ளவைகளாம்.

2. இதற்கு வியாக்கியானம் கண்ணுடிக்காலம் என்பது அறுபத்திநாலு துண்டுவந்து சேர்ந்த இடையில் இரண்டாவது பொய்கை என்ற புறந்தலையாம் கனமாய் கைகொண்டு தடவினாலும் காது மந்தமாகும் தலை மூளைக்கும் மந்தம் ஏற்படும் மூக்கு வியர்க்கும் இதற்கு காட்டு ஜீரகம் இருவேலி பசுவின் பாலிலரைத்துக் குளைத்து உச்சியில் தப்பவும் சுவாசம் உற்பவம் நெற்றிக்கு ஐந்து விரலுக்குமேல் உச்சிக்கு வலது வசமாகும்.

3. அந்த இடத்தில் கொண்டால் மூக்கு சுளுக்கும் கண் புகைந்திருக்கும் சென்னி நரம்பு அசர்ந்து விரைக்கும் முகம் வியர்த்து போதக்கேடுண்டாகும் இதற்கு கோதுமை அதிமதுரம் சிறுநெருஞ்சில் பருத்தியிலை ஆவரம்பூ யாளியா நாங்கணம் வகைக்குக்களஞ்சி அரைத்துத்தலையில் பத்து போடவும்.

4. சுண்ணும்புக்காலம் என்றது உச்சியில் இந்திரியம் இருக்கப்பட்ட சிமிளினுடைய ஓரத்தில் பின்பாகத்திலாகும் அதில் கொண்டால் கண்மூடி செவி நரம்பு துடிக்கும் நாக்குக் கொன்னிப்பேசும் இதற்கு சதகுப்பை கசகசா கூவளத்துப் பிஞ்சு மோரிலரைத்து வெதுப்பி உச்சியில் தப்பவும் இதிலெல்லாம் உச்சியே பிரதானம் அந்த சிமிளில் விஷம் ஏறியாலல்லாதே சரீரத்தில் சீணம் உண்டாகாது.

5. பின்னே மஞ்சள்காலம் என்றது உச்சிக்கு ஒரு விரலுக்குக்கீழே தாரை கண்ணினுடைய பொய்கையிலாகும்

அதில் வர்மங்கொண்டால் கண் சுழன்று சரீரத்தில் உளைச்சலும் தலை விரைக்கும் இதற்கு கொத்தமல்லி மூடில்லாத் தாளி செந்தட்டி உளிஞெ வெந்தயம் பனுக்காய் நெல்லிக்காய் சீனி வகைக்கு களஞ்சி வீதம் குருந்தொட்டி சாற்றிலரைத்து தலையில் மத்திக்கவும் சுக்கு சமுத்திராப்பழம் நெல்லிக்காய் பொடித்து மணப்பிக்கவும் சுகம்.

6. குற்றிக்காலம் கொண்டால் கண் சிவக்கும் பல்லு கறுக்கும் நாக்கு வரண்டு போகும் பேச்சோடாது இதற்கு கண்டங்கத்திரி ஏலம் சந்தணம் மயில்பீலி சுக்கு கருஞ்சீரகம் வகைக்கு களஞ்சி ஒன்று பொடித்து வடிகட்டி அத்திப்பிசின் களஞ்சி வீதம் பூங்கதலிச்சாற்றிலரைத்து தலையில் தப்பவும் கருத்தச்சுண்டை வேர் நஞ்சறுத்தான் வேர் ஆடாதோடை வேர் அமுக்குரா சந்தணம் கொட்டம் கடுகு திப்பிலி கண்டங்கத்திரி ஏலம் வகைக்குக் களஞ்சி ஒன்று இரண்டுபடி ஜலத்தில்.

7. கசாயம் வற்றவைத்து அறித்து வடித்து சீனி கலந்து ஆறுநேரம் சேவிக்கவும் சுகம் வலதுகாதில் மூன்று விரலுக்குமேல் தலையோட்டின் எலும்பில் பற்றியவர்மம் கொண்டால் தலையை உருட்டிக்கொண்டே பேசும் காதின் வசங்கள். இரண்டும் குளிந்திருக்கும் மஞ்சள் நிறமாய் மூக்கில் சுவாசம் வரும்.

8. இதற்கு பசுவின்நெய் படியளையும் அபின் பலமரை கச்சோலம் கருங்குங்கிலியம் சாம்பிராணி இவை வகைக்கு களஞ்சி மூன்று வீதம் எண்ணையில் கலந்து கடுகு பருவம் அரித்து தைலம் தேய்த்துக் குளிக்கவும் ஜீரகம் கிரிசாத்து நறுதீண்டிக்கிழங்கு அரைப்படி ஜலத்தில் கஷாயமிட்டு சேவிக்கவும் மூன்று நேரம் சுகம் கொண்டக்காலமென்பது உச்சிப் பதைப்பிலிருந்து, அரைவிரலுக்குக்கீழே இடதுவசமாகும் அதில் கொண்டால் ,சரீரம் குளிர்ந்துபோகும் வேதனை யுண்டாகும் கண்ணில் நீரொலிக்கும் கபமுண்டாகும் சுவாசம் உள்ளிழுக்கும்.

9. இதற்குக் கஞ்சா தாளிசபத்திரி செண்பகமொட்டு விதையில்லாக்கடுக்காய் பூலாவிருட்சம் வேப்பன் பழம் களிஞ்சி மூன்று வீதம் நல்லெண்ணெ பசுவின்நெய் தேங்காய் எண்ணெ அரைப்படி ஒண்ணரித்துக்காய்ச்சி சேவிக்கவும் சுகம் கழுத்தினுடைய இசைவிலிருந்து குருக்கினுடைய தாரை நரம்பு உருளை சிப்பியிலும் முக்கோணிலும் கைக்கு குற்றம் சம்பவித்தால் கை அசைந்து துடிக்கும் அசாத்தியம்.

10. கையிலோ காலிலோ இரண்டு வசங்களிலும் உடம்பிலாலும் இருவசமும் சரிந்து குலைந்து நடந்தால் சிகிச்சை வேண்டாம் அந்த வில்லினுடைய பிசகு பின்னே நேர்நெஞ்சிலும் அதில் அரைவிரல் மாறி இருவசமும் பதினாலு பொய்கையிலுமாகும் காரை எலும்பிற்குக்கீழே தொண்டை செவி நரம்பு பொய்கையில் குத்தினால் நாக்கு உள்ளிழுத்து கண்ணடைத்து ஜன்னியுண்டாகும் தொண்டைக்குளி திரும்பி வெட்டும் சரீரம் குளிர்ந்துபோகும்

11. இரண்டாவது பொய்கையினால் மூக்கு சுளித்து அலரும் இருமி வலிக்கும் சுவாசமடைக்கும் சுற்றிக்கொள்ளும் அசாத்தியமாகும் மூன்றாவது பொய்கை என்றால் வயற்றில் வேதனை தலைசுற்று கபாலயிடி ஜன்னி பெருஞ்சுவாசம் விக்கல் நெஞ்சில் குத்து என்றால் பொய்கை பதினாரிலும் வர்மமானது தொடர்ச்சியாகும் தொண்டைக்குளிக்கும் ஒருவிரல் மாறி சுருதி என்ற நரம்பில் விஷம் பொங்கி கோணல் சென்ற இடமாகும்.

12. சுருதி நரம்பு காரை எலும்பினுடைய அடுத்த சிறு நரம்பாகும் அந்த நரம்பில் குத்தினால் கண்ணடைக்கும் நாக்கு நீட்டி வாயில் நுரையுண்டாகும் ஜன்னி கபம் அலகு கோணியிருக்கும் மாறி இடதுநேர் பொய்கையில் குத்தினால் மயக்கம் தலைவலி கொளுத்து சோகைநீர் ஊறும் அசாத்தியம்.

13. கூட்டில் உருவிச்சென்ற வர்மம் எட்டு பொய்கை பதினாறு நரம்பிலும் கால் பரிட்சித்து சிகிச்சை செய்யவும் குருக்கினுடைய மத்திப எலும்பில் குத்தினால் ஊன்பொய்கை

யிலும் தரியெலும்பினுடைய வில்லிலும் கொள்ளக்கூடாது சீளியடக்கம் விஷஸ்தானம் என்பது உருளை சிப்பியினுடைய முகட்டிலும் கொள்ளக்கூடாது மூலத்தில் சுளிமுனை இருப்பிடம்குய்யபத்திலாம் பொக்குள் காலிரண்டிலுமாம் பிங்கலை என்பது வலது மார்பு வலது கை ஆண்மாவுடைய நெற்றி இடகலையாவது.

**14.** இந்திரியக்குளல் இடதுமார்பு இடதுகை உச்சித்துவாரம் பொக்குளினுடைய இடையொட்டியது குருநாடி. மஞ்சர்டித் துவாரம் உச்சியென்றால் மூலத்தினுடைய இரண்டு வசங்களிலும் இரண்டு விரல்நரம்புப்பக்கம் குளியில் வில்லும் விசையும் வந்து பற்றுகின்றன எலும்பிலும் நரம்பிலும் வந்து சேருகின்றன விசையென்பது கீழ்நாடி கொக்கி மார்பு காரீரல் புஜம் குருக்கு கைக்குளி உருளைச்சிப்பி.

**15.** மூலம் அல்லது யோனி கைமுட்டினுடைய மேல் மடக்கின் உட்பாகம் மணிக்கட்டு உள்துடை கண்ணு காலினுடைய குளி இவைகளிலாகும் சங்குதிரியும் கூணெல் நரம்பும் பின்னல்போலே கூடி எட்டு இதளாய் பிரிகிறது எட்டுப் பிரிவும் எட்டு வர்மங்களாகும் வயற்றில் ஆறும் பெட்டிக் காலமும் ஞானல் குடலும் ஆமாசயமும் பக்குவாசயமும் குடல் என்றும் சுருதி என்றும் அதில் கூடி வர்மம் மூன்று.

**16.** அவரவருடைய கைப்பெலனும் ஸ்திரீ போகத்தாலும் குடல் சிறுநரம்பு பின்னங்களாகி வர்மங்கொள்ளுகிறது மரங்களிலிருந்தோ சுவர்களிலிருந்தோ மூலத்தினுடைய இருப்பிடம் நாலுவசங்களிலும் உயர அடியோ தள்ளேச கொண்டால் லிங்கம் சாடும் நாக்கு வெளியில்வரும் போதக்கேடும் ஜன்னியும் உண்டாகும் அடங்கல் நோக்கிப் பிடிக்கவும் தலையில் முறிந்தால் தறிப்பும் வேதனையும் உண்டாகும்.

**17.** இதற்கு ஆசாளி சீரகம் உளிநெரு கொடுப்பை இலையரைத்து குருந்தட்டிச்சாற்றில் தாரைபிடவும் கைக்குளியில் திரிநாடி துடிப்பின் உள்ளே ஐந்து நரம்புகள் வந்து

ஒரு நரம்பில் கூடுகின்றன அந்த ஸ்தலத்திலுள்ள வரியும் பொய்கையும் பரீட்சித்துப் பிடித்தால் கிரியாலமென்று பொருத்தும் துடலி நரம்பினுடைய எதிர்சையும் காணலாம்.

18. மனிதற்கு திருப்தி வருத்தி தேகதிடமறிந்து சிகிச்சிக்கவும் வில்லும் விசையும் எழுந்ததில் ஆறுவர்ம மூண்டு சிறுங்கொல்லி என்பது கொண்டைக்காலத்திலும் அரைவிரல் வலது பசம் அதில் கொண்டால் உதடு கோணும் வாயில் நுரை தள்ளும் தலைசுற்றி குளிர் இருமல் உண்டாகும்.

19. உள்ளிப்பருப்பு ஜாதிக்காய் பற்படகப்புல்லு நாங் கணம் புனுகு கோரோஜனை வகைக்கு களஞ்சி ஒன்று சத குப்பை இஞ்சி கொடுவேலி ஆடாதோடை வகைக்கு களஞ்சி நாலு சதைத்து தேங்காய் எண்ணெயில் மெழுகு பருவம் வடித்து சேவிக்கவும் உளிஞ சாற்றில் சீனி கலந்து கலக்கி தலையிலிடவும் ஒன்பது வர்மங்கள் உச்சியிலென்றால் மூர்க் கண்ணின் ஒன்றரை விரல்உயரே சந்துகுளி என்ற சென்னி நரம்பு மத்தியம் சென்னி வர்மமாகும்.

20. இந்த வர்மம் கொண்டால் கண்ணடைக்கும் ஜன்னியுண்டாகும் வாயில் சுவாசம் மூக்கடைப்பு நாக்கு வரளும் அடிவயிற்றில்மட்டும் நிதானம்பார்த்து அமர்த்தவும் பின்னே அரிசி வகை ஆறு பூவத்து மஞ்சட்டி தகரம் செவியம் கண்டங்கத்திரி கஞ்சாபத்திரி கிரும்பு கோரோசனை வகைக்குக் களஞ்சி ஒன்று வெற்றிலைச்சாற்றில் ஒருசாமமரைத்து பயறு வண்ணம் திரட்டி கண்டங்கத்திரி ஆடாதோடை வேறு செம்பருத் தம்பூ நாயுருவி வெள்ள நகு வகைக்குக்களஞ்சி மூன்றிடங் களி வெள்ளத்தில் கஷாயம் வற்றவைத்து குளிகை உரைத் துக்குடிக்கவும்.

21. நெற்றுக்கிருனேந்திப்பொருத்தில் திலர்தவர்மம் அந்த வர்மம் கொண்டால் மரிக்கும் அரத்தை சுக்கு திப்பிலி சிறுபோழம் கசகசா சாம்பிறுணி வகைக்குக்களஞ்சி மூன்று இரண்டு கால்படி ஜலத்தில் கஷாயம் வற்றவைத்துக்கொடுக்க வேதனை தீரும் தலையில் எண்ணெய்ப்பூரப்பத்து சிறு நரம்பும்

முப்பத்தேழு வர்மங்களும் உண்டு இதில் ஒன்பது பேன் குளிக்கு வலது வசம் அதில் ஒன்று பேன்குழிக்கு வலது வசம் மூன்றுவது விரலில் கை ஏற்றிக்குத்தினால் பைத்தியம் போல் பேசும்.

**22.** இந்திரியம் சொட்டாய் விழும் ஆயந்திரம் களைக்கும் பின்னும் செவிக்கு உயரே தலையோட்டின்மேல் காதில் இரண்டு விரல் சருகில் கை ஏற்றிக்குத்தினால் மூக்கடைக்கும் ரசனேந்திரியம் வரளும் தொண்டையில் வீங்கும் கண்ணிலும் மூவிரல் மேலே கைகொண்டு குத்தவோ தள்ளவோ செய்தால் கண் மூடும் காதொடுங்கும் சப்தமும் குறையும் தலைக்கு உளைவு வேதனையுண்டாகும் செவிக்கு அரைவிரல் உயரே ஊக்கத்தோடு சேர்ந்து விரல் குத்திப்பிடித்தால் காது மடிந்திருக்கும் சப்தம் கேட்காது.

**23.** சரீரம் நடுங்கும் போஜனம்வெறுக்கும் கபம் மந்திக்கும் கண்ணு அயர்ந்து உரங்கும் ஒரோர் ஸ்தலங்களையும் குணங்களையும் மறுவசங்களிலமர்த்தி ஊன்றவும் கண்ணின் மேல் மோடெலும்பில் குத்தினால் மயங்கும் கீழ்பக்கத்தில் குத்தினாலும் மயங்கும் கண்ணடைக்கும் சென்னிக்குழில் ஊன்றினால் கண்ணு திறக்கும் காதினுடைய மேல்படை எலும்பில் குத்தினால் காதிரைச்சலும் வாசனை அறிந்துகொண்டிருப்பதுபோல் பேச்சுண்டாகும் காது கேட்காது.

**24.** இதற்கு செவிக்குத்தியில் அமர்த்தவும் மோடு வட்டம் தடவவும் சுகம் மூக்கின் மத்திபம் குத்தினால் கண்ணில் சோரை சென்னி துடித்து பிராணவேதனையில் பல்லு கடியும் உண்டாகும் கண்ணிற்கு மோகனம் கண்ணடைக்கும் விஷமேறும் பேசமுடியாமல் சென்னி விடைத்து ஜன்னி உண்டாகும் கபசுரமுண்டாகும்.

**25.** அலைமாடு சென்னி எல்லாது வில்லினுடைய முகட்டில் காதினுடைய மேல் முன்வசத்தில் தொத்தெலும்பில் குத்தினால் சன்னடைந்து இளைப்புண்டாகும் கபாலபிடி இளைப்பும் தலைசரிக்கமுடியாமல் தேகம் வரளும் தலையாட்டும்

பிளேபேசுவதும் செய்யும் மறுபுறமும் இந்த வர்மம் உண்டு உள்காதில் விசைநரம்பு இரண்டு விசைவர்ண யந்திரத்தில் தட்டிஞல்தான் சப்தமுண்டாகிறது.

26. அந்த விசையோடு கூடித்தான் ஆத்துமா அசைகிறது நெற்றியில் திலர்தக்காலத்தில் சுழிஞும் தளமும் ஆத்மாவுடைய இருப்பிடமுமாகும் ஆயுசு மனித சரீரம் பூரண சீதளமடைந்தபின் நகக்கண்களின் வழியேயும் செல்லுகின்றன பிராணகலைகள் இந்த திலர்தத்தில் இருக்கப்பட்ட வில்லினுடைய சக்திகொண்டு அசைந்து பந்துபோல் சுருண்டு சுவாச கிரியாதியால் சுத்திகரணையுண்டாகி சரீரம் போஷிக்கப் படுகிறது.

27. இப்படியே விஷேசத்துவமாய் தலையுண்டாகிவட்டமும் அருபத்திநாலு துண்டு நரம்பும் நாலுதுண்டும் முப்பத்தியேழு பக்கமும் ஆகக்கூடி எட்டுச்சாணும் இசைவில்லா வர்மங்களும் உண்டாகின்றன இதில் தொடுவர்மம் படுவர்மம் சுளி பொய்கையாவும் இருவச எணப்படி நூற்றித்தொண்ணிற்ருருகும் கீழ்நாடி கவரெலும்பின் இடையில் குத்திஞல் ஓர்மை தெரியாமல் உரங்கும் தலை விரைக்கும் கண்ணு துடிக்கும் எதிரே அந்த நரம்பினுடைய அடிஸ்தானம் காதினுடைய கீழ் பொய்கையிலாகும்.

28 இதில் கொண்டால் ஜன்னி கபம் மூக்கடைப்பும் கண் வெட்டித் திரக்கிறதும் மூக்கில் சோரையும் காட்டும் தொண்டைக்குளியில் ஒருவிரல் வலது வசம் விசைநரம்பில் குத்திஞல் மாத்திரை அடங்கல் கண்டு பிடிக்கவும் கழுத்திலும் புஜத்திலும் நேரே கிடக்கின்ற துடரி என்ற நரம்பில் குத்திஞல் கழுத்து கோணும் புஜம் தடிப்புண்டாகும் தலைக்கு குத்தும் தலை ஆயர்ந்து ஜன்னியுண்டாகும்.

29. ஆத்மாவினுடைய பைக்கும் மரூலுன்யம் உண்டாகும் அசாத்தியமான காந்தாரி வர்மம் ஏன்பது இதே நரம்பில் உற்பத்தியாகி புஜத்தினுடைய சிப்பிக்குள்ளே கூடி கழுத்தில் வருகிறது வந்து மேல்நோக்கி சென்னியில் சுற்றுகிறது கழுத்

தின் பின்னால் மூன்று கண்டமும் இரண்டு வில்லும் ஆறு பல்லு நரம்பும் உண்டு பேன்குளி என்ற நெட்டியில் குத்தினால் அசாத்தியமாகும்.

**30.** இரண்டாவது இசைவில் குத்தினால் பல் நரம்பு ஸ்தாபித்துக்கொண்டால் தொண்ணூரில் அசாத்தியம் மூன்றாவது இசைவில் குத்தினால் குருக்கினுடைய தாரை பதிந்திருக்கும் மூக்கு சுளுக்கும் முகங்கோணும் இயந்திரம் களைக்கும் ஊக்கமாய் பிடித்து விரல் ஐந்தையும் பிதுக்கிப்பார்த்தால் ஒவ்வொன்றும் நெருநெருப்புண்டாகி மடங்கும் காலிலும் இதுபோல் உள்துடையிலும் ஆந்திரத்துவம் என்ற பிராண காலத்தில்

**31.** இடைவந்து போனால் காலமறியாமல் பரீட்சிக்க வேண்டாம் லோகருக்குச் சொல்லவேண்டாமென்றாலும் புத்தியும் பராபரத்தினுடைய திருஷ்டியும் முக்கியம் வேண்டியதாகும் விசையும் வில்லும் சேர்ந்து ஒடிந்தால் குணப்படமாட்டாது ஆதலால் மனப்பூர்வம் யாருக்கும் செய்யக்கூடாது செய்வது துரோகம் யோனி அல்லது மூலத்தில் சொன்ன அடங்கலை இருப்புக்குத்தி விழுந்தாலும் காலினுடைய படம் அடிகொண்டு திரும்பினாலும் கால் முடநரம்பினுடைய பிணக்கத்தினாலும் அடங்கலில் உண்டாகும் குணபேதங்களும் மற்ற வர்மங்களை இது கவனித்து பார்க்கவேண்டியதாகும் சிகிச்சை செய்யலாம்.

**32.** காரெலும்பினுடைய இடையில் குத்தினால் எந்தச் சுளியிலாகிலும் பொய்கையிலாகிலும் கொண்டால் குன்னி இருமும் குலை அடைக்கும் கோச்சல் குத்தலுடன்குடல்பொங்கும்நெஞ்சு தெரித்துப்போவதுபோல் காணும் தலையும் சுற்றும் தொப்புளின் நேரே மூன்றுவிரல் வலமே பள்ளையில் குருக்கே சரித்துக்குத்தினால் வயரிளகும்.

**33.** வாய்வுபோகும் பொக்குள் உயர்ந்து வீங்கும் மூத்திரம் வெள்ளையாய் விழும் மூலம் சுருங்கும் இது அசாத்தியமாகும் கூம்பில் இருவிரலின் கீழே குத்தினால் கண்ண

யர்ந்து ஜன்னியுண்டாகும் கபாலம் இடிக்கும் ஒருவசமாக வலித்து இழுக்கும் வாயில் நுரை தள்ளும் சங்கெலும்பில் வேதனையுண்டாகும்.

**34.** நெஞ்சில் கையில் குத்தும் வேதனையும் உண்டாகும் மூலத்தின் உயரே வாய்வு ஸ்தலத்திலும் ஒண்ணரை விரல் ஏற்றி ஆயங்கொண்டு குத்தினல் வில்லெலும்பு வளைந்து மூன்று கூனும் குருக்கினுடைய தாரையில் நங்கணிப் பொருத்திலும் இருவிரல் உயரே காலினுடைய பெருவிரல்கொண்டு குத்தினல் ஆள் வளைந்து சரியும் வர்மங்கள்போக இசைவு பொய்கை சுளிகளிலும் அபாய குணங்கள் உண்டென்று அறியவும்.

**35.** பொன்கழுத்திலும் மூன்று விரலின் பக்கத்தில் கைபொத்தியடிக்கவோ பிடிக்கவோ செய்தால் கழுத்து திரும்பி தப்பாது தலை ஆட்டம் விரையலும் உண்டாகும் புறங்கழுத்தில் நருக்கெலும்பில் இடம் கண்டு குத்தினல் கைவிரைக்கும்.

**36.** பலமில்லாமல் வாளும் தலை நேரே முன்னே சரிந்ததானல் கழுத்தினுடைய பின் இசைவு விலகும் பேதலித்து வெட்டும் அந்த நரம்பில் விரல்வைத்து அமர்த்தினல் தலை நிமிரும் ஒருவசம் வில்லெலும்பில் அமர்த்தினலும் நிமிரும் ஒருவசமே தலைசரிந்துகிடந்தால் கழுத்தினுடைய பக்கங்களில் காரையெலும்பினுடைய வில்லெலும்பில் அமர்த்தவும்.

**37.** பின்வசம் ஸ்தலம் அறிந்து அசைத்தால் தொண்டைக்குளியில் கொக்கியருகிலுள்ள விசை நரம்பு துடிக்கும். இது ஒருமித்துப்பார்த்தால் அறியலாம் அந்த நரம்பிலமர்த்தினல் நிற்கும் சரீரம் அண்ணர்ந்திருந்தால் அடிவயிற்றில் துணி பிடித்து நரம்பில் அமர்த்தவும்.

**38.** புஜத்தினுடைய வில்லுரெண்டு விசை ஒன்று மறு கையிலும் இது போலாகும் கழுத்து ஆடிப்போனல் கைக்குளியில் விரலேற்றி அமர்த்தவும் புஜத்தினுடைய வீதியும் தடவவும் காரெலும்பும் புஜமும் சேர்ந்த விசைநரம்பில் அமர்த்த

வும் கை மடக்கில் வில்லுரெண்டு விசை ஒன்று கை மடங்கி நேரே கோணினல் மடக்கின் மத்திபம் இருப்பிளகும் விலா வெலும்பில் அமர்த்தவும் நிற்கும்.

**39.** சரிந்துகோணினல் முட்டிற்குள் இருப்பான விசை நரம்பைக்கண்டு அமர்த்தவும் பின்னே முட்டின் மேலேயுள்ள சுளி நரம்பிலும் அமர்த்தவும் அமர்த்தி இதின் அருகிலுள்ள நரம்புகளையெல்லாம் தடவி இழுக்கவும் வில்லும் விசையும் உள்ள இடங்களில் இடிகளடி ஒடிவுக்கெல்லாம் விசையும் வில்லும் அசைந்து துடிக்கும்.

**40.** இதற்கெல்லாம் ஓர்மையும் சூட்சம புத்தியும் அதிகம் வேண்டும் வில்லும் விசையும் சரியாய் அறிந்தவர்களுக்கு வர்மம் மிகலேசானதாய் தோன்றும் மதருக்கு சண்டல துடர் போலேயாகும் வில்லும் விசையும் சிகிச்சைகள் பிரமாணம் அறிந்து செய்யவும் மணிக்கட்டில் இரண்டு வில்லும் ஒரு விசையும் எப்போதும் அசைந்துகொண்டிருக்கும்.

**41.** பெருவிரல் மடங்கிக்கோணிப்போனல் அந்த மணிக்கட்டில் அசைந்துகொண்டிருக்கும் விசையில் குளியில் ஓடும் விசை நரம்பில் அமர்த்தவும் இரண்டாவது விரல் மணிக்கு மத்திபத்தில் ஓடும் நரம்பிலும் அமர்த்தவேண்டும்.

**42.** மணிக்கட்டினுடைய உள்ளும் புறமுமான நடுநரம்பிலும் அமர்த்தவும் பின்னே குணங்கள் கண்டு பிரமாணம் படித்து யுக்தம்போல் செய்யவும் மணிக்கட்டில் உண்டாகும் குற்றங்களுக்கு புறங்கை படத்திலேயுள்ள முட்டு மடக்குக் குளியில் உள்ள விசை நரம்பை பிடித்து தடவவும் சுகம் கையிலுள்ள வர்மங்கள் யாவுக்கும் நரம்புகள் யாவும் கூடி வில்லையும் விசையையும் பற்றியே நிற்கின்றன.

**43.** நரம்பில் விஷமுண்டாகி விசைநார் தங்களால் நீர் தரிப்பு உளைச்சல் வீதனம் உண்டாகும் இதற்கு குருந்தட்டி கொடுப்பை குமரி பசுவின் நெய்யில் காலித்து தாரையிடவும் குருந்தட்டியை பாலில் அரைத்து தவம்போடவும் அல்லது

குவளத்தின்வேர் பைலி இவைகளை எருமை மோரிலரைத்து குமரியும் கொச்சங்காயும் சார் பிளிந்து அரைத்துப்போட வும் கழுத்தின்கீழே இடுப்பிற்கு மேலேயுள்ள வர்மங்களுக்கு.

44. உளிஞுடைய சாரை பசுவின்மோரில் கலந்து போடவும் பின்னை குன்றி இலையும் ஆவரையும் தெற்றி இலையும் சாலித்து பழங்காடியில் போடவும் குடங்கலரைத் தும் தாரையிடலாம் பூவரசன் பழமும் புண்ணாக்கிலையும் கருத்த நொச்சியும் குருந்தொட்டி சாருடன் உமத்தை அமிர்தவல்லி துளசி பளுக்காய் இவைகளை நல்லெண்ணெயில் சாலித்துப்போட உருளையும் சிப்பெலும்பும் இசைவும் வில் லும் விசையும் பலம் கொள்ளும்.

45. இன்னும் இவை நாலும் சேர்ந்து இருக்கும் பாகங் களில் ஒருமிக்க அடியோ இடியோ தல்லோ கொண்டால் விசையின் தரம் கெடும் இடுப்பினுடைய கட்டிலும் உள் துடை இரண்டிலும் மூன்று வில்லும் அவைகளின் விசையும் நரம்புகளும் உண்டு அதிலுள்ள நருக்கெலும்புகளை பரீட்சை செய்து அறியவேண்டும்.

46. இவைகளின் ஸ்தாபனங்கள் விசை விட்டுப்போ னால் அசாத்தியம் காலை அசைத்துப்பிடித்துக்கொள்ளும் இத னுடைய நாளங்களின் வழியாகத்தான் லிங்கம் என்பது வெளியில் வருகின்றன தண்டிற்கும் வித்திற்கும் இந்த விசை தான் பலமானதாகும் சனி என்ற பொருத்து தாரை எலும் பினுடைய உருளை அடுக்குச்சிப்பி இரண்டிற்குள்ளும் இருக் கின்றன.

47. வயிற்றினுள் சுற்றிப்பிடிக்கும் சிறு நரம்புகளுக்கு இடுப்பினுடைய வில்லும் விசையும் உருளையும் சிப்பும் எலும் புகள் ஒன்றுசேர நரம்புகளின் உதவியை வேண்டி பொருத் துகள் உண்டாகி வர்மங்கள் ஏற்பட்டன கூம்பிற்கு எட்டு விரல்மேலே நரம்பினுடைய பொய்கையில் குத்தினால் சாகும்

அடங்கல்களில் கொண்டு நாக்குள்ளிழுத்தாலும் அசாத்திய மாகும் விலங்கு நரம்பென்றது காரெலும்பினுடைய வில் லுக்கு மேலேயாகும்.

**48.** கொக்கியில் துடிப்பது இடகலை பிங்கலை என்று லும் குருநாடியில் தட்டினுல் நெஞ்சு பதைத்து சரீரலுக்கு கேடு உண்டாகும் தொண்டைக்குழியில் விசை நரம்பில் தட் டினுல் விக்கல் உண்டாகும்.

**49.** வர்மங்களினுல் மரிப்பவர்களுக்கு பரீட்சை செய்து பார்த்தால் அடக்கமாகுமுன் கொப்புளில் சூட்சம திருஷ்டியால் நோக்க சுவாசம் பிரிந்தவழி கடுகளவு துவாரம் காணும் வர்மத்திற்கு இவன் நாபி வழியும் வாதம் மீறி மாண் டவர்க்கு உச்சி வழியும் பித்தம் மீறி மாண்டவர்களுக்கு வாய்வழியும் சிலேற்பனம் மீறி மாண்டவர்களுக்கு கண் வழியேயும் பிரிகின்றன.

**50.** பரிசிரமம் உள்ளவர்கள் பார்த்தால் அறியலாம் எண்ணுயிரம் முடிச்சியும் வாய்வு பத்தும் பூகர் ஐந்தும் நெஞ் சுப்பிரதியும் பிஞ்சில்லாதொளியும் சாகத தலமும் வில்லும் விசையும் அறிந்தவர்களுக்கு பலநூல் சாஸ்திர சாமரஸ் லோசங்கள் எத்தனை இருந்தாலும் மனிதன்னை திருஷ்டி பிரதிபிம்பம அறியாதோர் இல்லாவிட்டால் உலகத்திற்கு துக்கமாம்.

**51.** ஆமைக்காலம்என்பது பொக்கிளினுடையதுவார வழிகீழாகும் அந்த ஸ்தலமானது தலைச்சோற்றில் இருந்து ஊறி சரீரத்தில் பரந்து வேரினுடைய அமிர்தம் கொண்ட விருட்சத்தில் தழைத்து ரெத்தம் கலந்தோடி கருவிகள் அதின் அதிர்ச்சையால் அசைய ஆகாயம் காற்றை உள்ளி ழுத்து வெளியில் தள்ளி பிராணகலைகள் கிரியைசெய்ய ஜீவன் சூட்சாதியாயிருக்கின்றன.

**52.** குடல் பெட்டியில் மணிக்குடல் முப்பத்திரண்டு முளநீளமும் நாளக்குழல்களும் சிங்குழல்போல் குருநாடியும் பன்னீராயிரம் சிறு நரம்பும் ஞான ஸ்தலங்களும் பூர்வீகமும்

பாளு லிங்கம் பதிதாசிக அறிவும் அமிர்கதாரை சுற்று அங் கங்களும் சுருங்கி பொருத்து தலையும் சுருதிக்குழல்களும் பின்கலையும் இவைகளெல்லாம் உச்சிமுதல் எங்கிருந்தாலும் பொக்குளே இவைகட்கு யந்திரஸ்தானமாம்.

53. காவெலும்பு பதினாறும் நெஞ்சுப்புறத்தெலும்பில் பத்தும் எட்டும் சொக்கி தொண்டை கழுத்து புஜம் கூம்பு நாக்கு அண்ணாக்கு கண்ணு மூக்கு செவி உச்சி சந்து இடுப்பு தாரை லிங்கம் அடிவயிறு உள்ளங்கால் முட்டு கரண்டை விரல் இவைகளிலெல்லாம் பகுப்பாய் பிரித்து குணசீலமாய் வர்மம் கொண்ட ஸ்தலம் கண்டு மாத்திரையும் பரிஸ்ரம சீல மும் அறிந்து பரப்பிரம்மத்தை நினைத்துக்கையணைத்து.

54. சிகிச்சை செய்யவேண்டும் மனிதனுடைய புத்தி யும் சீலமும் கைபாகமும் அனுபவ நிச்சயமும் தாழ்மையும் வேண்டும் நிச்சயம் கண்டு காலங்களுக்கு அடங்கல் நரம்புகளை பிடித்கால் தந்திபோல் உடன் வேலைசெய்யும் சுகம் உண்டு காலினுடைய முட்டில் இரண்டு வில்லும் முட்டின் சிரட் டையை தளர்த்தி கைகோர்த்தாப்போல் பிடித்திருக்கின்றன.

56. இது முட்டினுடைய கைமடக்கிப் பரிசோதித் தால் அறியலாம் காலினுடைய கண்ணில் மூன்று விசைநரம்பு உண்டு விரல்கள் இருபதிலும் மொளிகளில் இருபது விசை நரம்பு கூடுகின்றன கால் முட்டினுடைய மடக்கும் கைமுட் டினுடைய மடக்கும் சுளிநரம்பிலாதும் குணபேதங்களின்படி தாரையிட்டு கையணைக்கவேண்டும் நடக்கமுடியாமல் காலில் குத்தும் வேதனையும் உண்டானால் புத்தியாய் காலிடல் கொட்டு தட்டி சுகப்படுத்தவும்.

56. மனிதன் ஊக்கோடுகூடி இருக்க விழுந்தால் அந்த ஆயர் முழுவதும் இருப்பில் வந்து சேருகிறது அந்த அதிர்ச்சை யால்விசைநரம்பு சூடேறி குடலில் பொக்குளின் ஸ்தானத் தில்மண்டிகட்டும் மூலத்தில் கால் பெருவிரல்கொண்டு ஊன் றிப்பிடிக்கவும் நாலு பிரிவும் கண்டு மாத்திரையால் அடங்கலே பிடிக்கவும் மூலத்தின் காவெலும்பு வந்த பொய்கை குழியில்.

57 யோனியில் பொன் உடம்பின் சரிவாய் அந்தக் குழியில் மூன்று அடங்கல் உண்டு சரிந்துநின்ருே கமர்ந்தோ ஓடியோ உயரத்திலிருந்து விழுந்தோ இருப்பினுடைய விசை கொண்டு பெண்ணுடம்பின் சரிவாயிலும் யோனியின் கீழ் பாகத்திலும் உள்தொடையிலும் மூன்றும் ஒத்ததென்ருல் மூலத்தின் மூன்று நாடி காலினுடைய உட்சண்ணும் பலகை எலும்பினுடைய ஏந்திரக்கோணலும் துண்டு அடுக்குச்சிப்பியுமாம் சிப்பு உருளை தூங்கிப்போனால் அகத்தே காலினுடைய பெருவிரல் ஸ்தானத்தில்.

58. தன்னுடைய கால்விரல்கொண்டுகுத்தியசைக்கவும் குந்தியிருக்கவும் அசையவும் நடக்கவும் சாத்தியம் உண்டாகும் பின்னே பக்கங்களில் கால்நரம்பு பின்னலுண்டாகி பெருநரம்பு வெட்டி கடைச்சால் இவைகளில் வேதனையும் நடக்கமுடியாமலுமிருந்தால் ரோகியைநடக்கச்சொல்லிசூட்சமமாய் நின்று கால்விரல்கொண்டு மூலத்தினுடைய கோரை எலும்பில் குத்தவும் தீரும்.

59. விரையல் உண்டானுல் அசாத்தியமென்று கண்டுகொள்ளவும் ஆயங்கள் எல்லாம் இருப்பிலே வந்து சேர்ந்தபடியால் விசைநரம்புகள் தளர்ந்து சுருங்கி இருக்கும் விரையல் இல்லை என்ருல் உடைத்த தேங்காய்கொண்டு ரோகியை கவித்துக்கிடத்தி இருப்பில் வைத்து அசைத்துக்கொண்டிருக்கவேண்டும் வேதனையை உடனுக்குடன் கேட்டறிந்து கொள்ளவேண்டும் பினனே தேங்காய் அடியிலும் ரோகியை மேலேயும் மலத்திப்பிடித்து கீழ்பூட்டு முட்டின்மேல் உள் துடைசந்தினுள் நரம்பிலும் அதிலும் கீழ் உள்ள நரம்புகளிலும் உள்ள முடங்களுக்கு

60. கால் முட்டினுடைய மடக்குக்கோணில் புழு ஆடியதுபோல் சிறுநரம்பு ஏந்திரம் குருங்கி நடக்க முடியாமல் இருக்கும் அதைப்பிடித்து விரல் கொண்டு குத்தவும் நடக்கச்சொல்லி பிடியுள்ள நரம்பைக்கேட்டறியவும் முட்டிற்குக் கீழேயுள்ள வர்மங்களுக்கு சிரட்டைக்குழியில்தான் நரம்பு சுருளும்.



61. இதற்கு எந்திரத்தில் குத்தி எலும்பிலிருந்து கீழ் நோக்கி காலினுடைய கண்ணில் படத்தைத்திருப்பிதட்டவும் முடம் தீர்ந்துவிடும் நரம்பினுடைய சுருளும் தீர்ந்து சுகப் படும் முட்டினுடைய மடக்கிலும் உயர வில்எலும்பினுடைய இடையிலும் குத்தினால் கால் விரையலும் பின்னலும் உள் வேதனையும் வீக்கமும் உண்டாகும் நடக்கமுடியாது.

62. அந்த முட்டினுடைய சிரட்டையில் அடங்கல் உற்பத்தியானது அவ்விடத்திலிருந்து குதிங்காலினுடைய விசை எலும்பு கண்ணின்மேலே பதிந்திருக்கின்றன கண்ணி னுடைய இசைவு குளியில் குத்தினால் வீக்கமும் கால்விசை எலும்பு வெட்டும் நடக்கவும் முடியாது இரண்டாங்காலிலும் இது பிரகாரமுண்டு வில்எலும்பு மூலத்தில் உருளைச்சிப்பியி னுடைய அகத்தாகும் இதின்தொடர் விசைநரம்பு பெருவிரல் மேலேயும் மற்ற நரம்புகளிலும் சுற்றி இருக்கின்றன.

63. சிறுவிரலின் இரண்டு விரல் மேலே குத்தோ கல்லோ கொண்டால் கண் உளைச்சலும் சிகப்பும் சரீரத்தில் விரையலும் குத்தும் களிச்சல் வேதனையும் உண்டாகும் முட் டின் உயர முடமானால் அடித்துடையிலும் கீழானால் மடக் குக்குளியிலும் சுருள் நரம்புண்டு அது வில்லும் விசையும் சேர்ந்ததில் சென்று கொள்ளக்கூடாது அப்படி கொண்டால் அசாத்தியம்.

64. மடங்கும் பொய்கையும் துண்டும் இசையும் அடங்கல் நிதானம் கண்டு முளங்காலினுடைய எலும்பு சிரட்டையில் பிடிக்கவும் அதில் குத்தோ இடியோ கொண் டால் வீக்கமும் உருளைக்கு விதனமும் காலசைக்காத நிலைமை யும் உண்டாகும் கவிழ்த்திக்கிடத்தி இடுப்பிலிருந்து, கீழ் நோக்கி இரண்டு காலையும் நீட்டி ஒப்பமாய் வைத்து உலக்கை போட்டு சவட்டவும் சவட்ட அசாத்தியம் போக இடுப்பிற் குக் கீழுள்ள முடங்களெல்லாம் தீரும் இவைகளுக்கெல்லாம் இப்படியே சவட்டித் தீர்க்கவேண்டும் பெருவிரல் நரம்பு அற்றுப்போனால் தரிப்பு கண்ணில் காயம்.

65. ஜன்னியுண்டாகி சரீரம் வளைந்துபோகும் கூவளத்தின் வேரை பசுவின் பாலிலரைத்து கலக்கித் தாரையிடவும் பசுவின் நெய்யில் குமரிச்சார் சேர்த்து தாரையிடலாம் எள்ளும் சுக்கும் அரைத்துப் பூசவும் இவ்விதம் மூன்று விதமும் செய்யவும்.

66. காலினுடைய வெள்ளை முறிந்து தரிப்பு எறினால் எருமை மோரில் கைகோன்னி அரைத்து தாரையிடவும் இதற்கெல்லாம் வில்லினுடைய விசை மாறுகிறவரை தாரை குறையாமல் போட்டுக்கொண்டிருக்கவும் வில்லினுடைய கால் கண்ணில் இசைவில் சிறு நரம்புகளுக்கு உணர்ச்சி உண்டாகும்.

67. கரண்டைக் கண்ணினுடைய மொளியில் கவராயிருக்கின்ற வில்லில் கவராயிருக்கின்ற குடல்போன்ற விசை நரம்பு கரண்டையில் சுடர்ந்து அடியில் இருக்கும் விசை நரம்போடு கூடுகின்றன கையினுடைய விரல்களிலும் இப்பிரகாரமேயாகும் அப்படி வந்த நரம்பு மேலேர கரண்டையில் இருந்து முளங்கால் வழியும் அங்கால் வழியும் கூடி முட்டினுடைய விசைநரம்பில் பிரிவாகின்றன.

68. அதில் ஒரு கண்டமும் வில்லு நரம்பும் புறலோகமும் முட்டின சாய்வில் இருப்பாகும் இருப்பாகி கெட்டியாய் சிப்பியிலும் குறக்கின் தாவைக்குழியிலும் சந்திரனை ஒட்டி இருக்கின்றன கண்ணுடி எலும்பின் முன்வசமாய் துடைக் கெட்டைச் சேர்ந்த கெட்டின துபோல் வில்லெலும்பும் விசை நரம்பும்.

69. உள் சூஸ்திரமாய் இரண்டு மார்பிலும் அகவழியே கூடி இரண்டு விசைநரம்புக் கொக்கியிலும் முதுகினுடைய தாரைவழி இரண்டாகவும் புறங்கழுத்தில் பென்குழியில் சேருகின்றன புறங்காதினுடைய மோடெலும்பிலுள்ளும் இப்படி வசங்களில் உண்டாகி.

70. தலையோட்டை ஏந்திப்பிடிக்கின்றன இதுபிரகாரம் மனிதன் சரீரத்தில் வில்லும் விசையும் இசையும் எழுபீத்திராயிரம் நரம்பும் எண்ணாயிரம் முடிச்சியும் முன்னூற்றுபதினாறு சுற்று நரம்பும் துவாரவெளிகளும் வர்மப் பொய்கைகளும் உண்டாகி அதில் தலை சரியாய், மறுபுறம் திரும்பினால் அசாத்தியம் பிழைக்காது மற்ற யாவுக்கும் வில்லும் விசையும் பரிட்சித்துப் பார்த்துப் பிடித்தால் அசாத்தியமுள்ள வர்மங்களும் எழுந்திருக்கும்.

71. இனி கசாயம் சுண்டைவேர் வெள்ளருகு துளசி விஷ்ணுகிரந்திக்கொழுந்து குன்னிவேர் சிராலிஇலை வகைக்கு களஞ்சி ஆறு நாகதாளி அழுக்குறா வையந்தாளை சந்தணம் குடங்கல் பூவத்து சீரகம் கொம்பரக்கு ஆளியரிசி திப்பிலி மூலம் கொட்டம் கச்சோலம்சிறுபுன்னையரிசிஏலம் வகைக்குக் களஞ்சி ஆறு அரைப்படி ஜலத்தில் கஷாயமிட்டு அரைக்கால் படியாக்கு மூன்று நாள் ஆறுவேளை இப்படியே தினம் புதிதாக கொடுக்கவும்.

72 நரம்பினுடைய சுளுக்கு வர்மங்கள் சுகப்படும் வேறுமுறை ஆடாதோடை அமிர்தவல்லி இசங்கு குப்பை மேனி நஞ்சறுத்தான் நாயுருவி ஆடுதீண்டாப்பாளை வேலிப் பருத்தி வகைக்குப் பலம் மூன்று கார்கோலரிசி, சிவதை கொத்தமல்லி கண்டங்கத்திரி சீரகம் மீரை கோரோசனை திப்பிலி மஞ்சட்டிப் பொடி.

73. சாதிக்காய் வகைக்குக் களஞ்சி இரண்டு ஒருபடி ஜலத்தில் கசாயம் உளக்காக்கி நாளுக்கிருபோதாக மூன்று நாள் சேவிக்கவும் கூட்டிலே கொண்ட எட்டு வர்மங்களும் சுகப்படும் வேறுமுறை மூடில்லாத்தாளி கைவளை சம்பங்கி காதல் பிச்சிமொட்டு தாமரை வளையம் சாரைக்கிழங்கு முத்தங்காய் அமிர்தவள்ளி மலைதாங்கி.

74. கருவிலாஞ்சிவேர் செந்தட்டி வகைக்குக் களஞ்சி பத்து சீரகம் வால்மிளகு கும்பாசாணி நெல்லிக்காய் தோடு

செவியம் கிருமிசத்துரு ஏலம் கார்கோலரிசி வகைக்குக் களஞ்சி மூன்று ஒருபடி ஜலத்தில் கசாயம் கால்படியாக்கி ஐந்து நாள் பத்துவேளை குடிக்கவும்.

**75.** குடலினுடைய கொளுத்து பள்ளைவர்மங்களும் சுற்று நரம்பினுடைய விஷங்களும் சுகப்படும் பின்னை தூது வளைவேர் ஆவரைவேர் வெள்ளருகு குருத்தட்டி செந்தட்டி சூரிவேர் பூதாவிருட்சம் தேவதாரம் மாஞ்சி மருது மூலம் கண்டங்கத்தரி வகைக்குக் களஞ்சி இரண்டு ஒருபடி ஜலத்தில் கசாயம் உளக்காக்கி ஆறுநாள் பன்னிருபோது சேவிக்கவும்.

**76.** நெஞ்சின் கூட்டில் உள்ள சுற்று நரம்புகளின் கோச்சு குத்து கொளுத்து அபார ஆத்துமதுடிப்பு கபால யிடி இவைகள் சுகமாகும் வெள்ளருகு பிரமி சிவனார் வேம்பு பிள்ளை நெருஞ்சி மலைதாங்கி குன்றி இசங்கு தூதுவளை வேர் குட்டித்தக்காளி வெள்ளைக்குடங்கல் திருநீதவி தாரா வேர் வகைக்குப் பலம் ஒன்று அக்கரா மதுரம சீரகம் தகரம் ஏலம் கொத்தமல்லி கொம்பரக்கு அரிசிவகை ஆறு வெள்ள ரத்தை வகைக்குக் களஞ்சி மூன்று வீதம் மூன்றுபடி ஜலத் தில் கசாயம் உளக்காக்கி மூன்று நாள் ஆறுவேளை கொடுக் கவும்.

**77.** உள்வர்மம் கொழுத்து கோச்சல் உன்னும் மின் னல் இடி இருமல் சுவாசகாசம் இவைகள் சுகம் உண்டாகும் அருகன் வேர் குருந்தட்டி வேர் ஆடாதோடை கூவளத் தின்வேர் வகைக்கு பலம் பத்து திப்பிலி அமுக்குரா நாகணம் தாளிசபத்திரி சிறுநாகப்பூ வகைக்குக்களஞ்சி மூன்று இரண்டு படி ஜலத்தில் கஷாயம் வற்றவைத்து.

**78.** கொம்பரக்கு பலம் ஒன்று திப்பிலி பலம் கால் பொடித்து துணியில் அரித்து மேல் பொடியிட்டு ஆறுநேரம் குடிக்கவும் கருப்பு ஈரல் கூம்பு இவைகளின் விஷங்களும் அவைகளைச்சுற்றும் நரம்புகளின் விஷங்களும் வர்மங்களும்

உள்கொழுத்தும் வேதனையும் சுகமாகும் வேறு முறை கண்டங்கத்திரி செந்தட்டி கருஞ்சுண்டை வேர் தும்பை வேர் வீகைக்குப் பலம் ஒன்று.

79. அமுக்குரா திப்பிலி மதுரம் வெண்குங்கிலியம் வகைக்குக்களஞ்சி மூன்று மூன்றுபடி ஜலத்தில் கஷாயம் வற்றவைத்து ஏலம் மேல்பொடி போட்டு பன்னிரண்டு நேரம் கொடுக்கவும் சகல வர்மங்களிலுள்ள கொழுத்தும் வேதனையும் சுகம் வர்மங்களினால் முடங்கிக்கிடப்பவர்களுக்கு கரிசாத்து அமுதவள்ளி அமுக்குரா வகைக்குக் களஞ்சி மூன்று வீதம் ஒரு படி ஜலத்தில் கஷாயம் வற்றவைத்து குளிகை உரைத்துக்கொடுக்கவும்.

80. குளிகை நாகணம் சிங்கிரசம் புனுகு இருவேலி பச்சைக்கற்பூரம் ஏலம் கண்டங்கத்திரி அமுக்குரா திப்பிலி வகைக்கு களஞ்சி மூன்று திப்பிலியும் மிளகும் கஷாயம் செய்து அந்த நீரில் முப்பது நாளிகை அரைத்து பயறு வண்ணம் திரட்டி நிழலிலுலர்த்தி ஜன்னிக்கும் வலிப்புக்கும் இஞ்சிச்சாறும் தேனும் சேர்த்துக்கொடுக்கவும்.

81. பின்னே மீனை களஞ்சி மூன்று சூடம் களஞ்சி இரண்டு புனுகு களஞ்சி ஒன்று கோரோசனை களஞ்சியரை ஏலம் கண்டங்கத்தரி வால்மிளகு வகைக்குக் களஞ்சி மூன்று கூவளத்தின்வேர் கருஞ்சுண்டைவேர் இவைசேர்த்து கஷாயமிட்டு இருபது நாளிகை அரைத்து மிளகு வண்ணம் உணர்த்தி.

82. பெரும் சுவாசத்திற்கும் வலிப்புக்கும் கபத்திற்கு திப்பிலி கஷாயம் வடித்து சேவிக்கவும் பொருமலுக்கு இஞ்சியிலும் இளக்கத்திற்குமுதங்காய் இஞ்சி தும்பைப்பூ இவைகளில் கொடுக்க சுகம் குளிகை கற்பூரம் கச்சோலம் மீனை சந்தனம் சிப்பி முத்து பகளம் சங்கு உத்திராட்சம் காண்டாமிருகப்பால் அன்னபேதி வெண்காரம் செவியம் அபின் பளுக்காய் கடுகு ரோகணி வகைக்குக் களஞ்சி இரண்டு முருங்கைப்பூவை வெப்பன் பழச்சாற்றிலரைத்து.

**83.** பயறுவண்ணம் உருட்டி இஞ்சியும் கொளுஞ்சி வேரும் கஷாயமிட்டு மாத்திரை உரைத்து சேவிக்க சுகம் பொடி தூதுவளைவேர் கருஞ்சுண்டைவேர் இசங்கின்வேர் குட்டிதக்காளிவேர் அமுக்குரு திப்பிலி பல்லி கார்கோலரிசி சிங்கி கற்கடகசிங்கி வெள்ளரத்தை வகைக்குக் களஞ்சி இரண்டு சேர்த்து வெயிலில் வைத்து தேனில் சேவிக்க காயங்கள் வர்மங்களினுலுள்ள ரத்தக்கட்டு இவைகள் சுகம்.

**84.** பொடி செந்தட்டி சாரணைக்கிழங்கு மலை தாங்கி கருங்குடங்கல் வேலிப்பிலை ஆசாளி வெள்ளைக்குங்குலியம் மதுரம் திப்பிலி பூலாவி நட்சம் சீரகம் எலம் கண்டங்கத்திரி மிளகு இலவங்கம் வகைக்குக் களஞ்சி மூன்று வெயிலில் உணர்த்திப்பொடித்து பசுவின் நெய்யில் சேவிக்கவும்.

**85.** வர்மங்களும் கொழுத்து கபம் குன்னல் இவை சௌக்கியம் பொடி திப்பிலி பத்திரி சிறுநாகப்பூ கண்டங்கத்திரி கற்கடகசிங்கி தேற்றான்பரல் கொட்டம் கரும்பிடம் வெள்ளைநொச்சி காக்கலம்வேர் பொன்னுவரைவேர் இவை ஓரிடையாய்சேர்த்து வெயலில்வைத்து பொடித்து தேனில் சேவிக்கவும் காரிரல் வெள்ளீரல் சம்மந்தமான கோச்சல் தரிப்பு கபம் இருமல் சுகம்.

**86.** ஐந்தெண்ணைத்தைலம் கூவளத்தின்வேர் இசங்கின்வேர் விராலி ஆவரைவேர் தொட்டால்வாடி கொடுவேலி வகைக்குப் பலம் மூன்று குருந்தொட்டி பலம் இருபது மூவிலை பலம் ஐந்துபடி ஜலத்தில் கஷாயம் வற்றவைத்து கடுகு வெள்ளரத்தை நாகணம் சந்தணம் அமுக்குரு பத்திரி கொம்பரக்கு திப்பிலி மூலம் தேவதாரம்.

**87.** சீரகம் கசகசா செண்பகமொட்டு சமுத்திராப் பழம் வகைக்குக் களஞ்சி மூன்று வீதம் இருவேலி முத்துச் சிப்பி குங்குமப்பூ வகைக்குக் களஞ்சி மூன்று ஆவின் நெய்

தேங்காய்நெய் நல்லெண்ணை பன்றி நெய் வேப்பெண்ணை வகைக்குப் படிகால் மருந்தெல்லாம் கஷாயமிட்டு வடித்து எண்ணையில் கலந்து கடுகு பதமாய் காய்த்து சேவிக்கவும்.

88 புறத்திடுதலும் முட்டுவர்மங்களும் பிடிநரம்பினுடைய வரட்சைகளும் பீனிசம் விஷநரம்பு குற்றம் தரிப்பு கொளுத்து உள்வேதனை சயம் இருமல் வெட்டு விரையல் இவைகளெல்லாம் சுகம் முக்கூட்டு எண்ணை ஆவரைவேர் கருஞ்சுண்டைவேர் செந்தட்டி சாரணைக்கிழங்கு முள்ளில்லாவாடி குடங்கல் நாகதாளி வகைக்குப் பலம் ஒன்று.

89. இலையும் தளையும் சேர்த்து இரண்டுபடி ஜலத்தில் கஷாயம் உரியாக்கி கச்சோலம் கண்டங்கத்திரி திப்பிலி அரிசி வகை ஆறு கொம்பரக்கு அமுக்குரா ஜாதிக்காய் குங்குமப்பூ பளுகாய் மஞ்சிலை கொட்டம் செவியம் செஞ்சந்தணம் வகைக்குக் களஞ்சி மூன்று.

90. ஆமணக்கெண்ணை தேங்காய்யெண்ணை நல்லெண்ணை வகைக்குப்படி கால் ஒன்றாகச்சேர்த்து இடங்காளி வெள்ளத்தில் கஷாயம் மருந்துகள் சேர்த்து வற்றவைத்து இருத்து எண்ணையில் கலந்து மெழுகுபதம் வடித்து சகல வர்மங்களுக்கும் கொளுத்துகளுக்கும் மேலிலிட்டுத்தடவிவிட சுகம் இசைவிலும் சுளியிலும் கூம்பின் கூட்டிலும் கொண்ட வர்மங்களுக்கு உள்ளுக்குக் கொடுக்கவும்.

91. நெய் முல்லில்லாவாடி அமுக்குரா கடுகு மல்லி கொட்டம் சந்தணம் கொம்பரக்கு வகைக்குக் களஞ்சி மூன்று கால்படி பசுவின் நெய்யில் மருந்துகளை அரைத்துக் கலக்கி மெழுகுபதம் வடித்து சேவிக்க வர்மங்களினால் உண்டான வரட்சை தீரும் சரீரம் புஷ்டிக்கும்.

92. வேறு எண்ணை ஆமணக்கெண்ணை நல்லெண்ணை வகைக்குப் படி கால் கொம்பரக்கு திரிபலை, திரிசாதி வகைக்குப்பலம் ஒன்று சதாவேலி கொடுவேலி அருகன்வேர் கஷாயத்திலரைத்து எண்ணையில் கலந்து மெழுகுபதம் வடித்து சேர்த்துக்கொள்ளவும்.

93. வர்மத்திறைல் குன்னி நடக்கிறவர்களுக்கும் உள் சுவாசம் கோச்சல் கொளுத்து இருமல் சுகம் நேரத்திற்கு கரண்டியிடை உள்ளுக்குக் கொடுக்கவும் நடக்கமுடியாமலே இருப்பவர்களுக்கு விசைவில்லினுடைய ஸ்தலம் நோக்கி எண்ணெயிட்டுத் தடவவும் கையுபதேசம் பார்த்து செய்யவும்.

94. சரீரம் அடங்கிலுமுள்ள பின்னல் நரம்பினுடைய விஷங்களும் விசேஷத்துவமாம் விசைவில்லினுடைய உள்ளே எழுபத்தாறு வர்மம் உண்டு மற்ற வர்மங்களுக்கு வில்லினுடைய ஏந்திரங்களைப் பரீட்சிக்கவேண்டாம் அவை கள் ஆதாரவர்ம சங்கங்களாகும்.

95. தண்ணீரில்லா மேனியும் சுளியும் சிப்பும் உருளை யும் விசையும் வில்லும் கண்டவர்களுக்கு ஒன்றும் கஷ்ட மில்லை கைகால் திடனும் ஓர்மையும் பரிசிரமமும் ஆயங்கள் நிச்சயமும் சுவட்டினுடைய பெருக்கமும் நிச்சயம் அறிய வேண்டும்.

96. திருமேனி எண்ணெ திறம் பெரிய திருமேனி எண்ணெயென்று செப்பக்கேளு செப்புகிறேன் மேனிச்சார் வேளைச்சாறும் நவரயிலைக்கொடி மரக்கொடி நாயுருவிச்சார் வேலிச்சார் நத்தைச்சூரிசார் குருந்தொட்டி மொசு மொசுக்கை இலுமிச்சம் சார் இவைகளோடு காஞ்சிரை வேரும் கொருடக்கொடி ஜாதிக்காய் ஜாதிப்பத்திரி கருஞ்சீரகம் கார்கோலரிசி.

97. குணமுள்ள அத்தமுடன் அருசும் கூட்டிச் சொல்லுவேன் நற்சீரகம் கொட்டம் மிச்சம் தாரமொடு கஸ் தூரி மதுரம் கோரோசனை திரமான அபின் வெள்ளைக் குங்கிலியமாமே ஆமென்ற வகைச்சாறு ஆளாக்காக அப்பனே கடைமருந்து களஞ்சி ஐந்து ஓமென்ற நல்லெண்ணெ நாளி யப்பா அப்பனே மெளுகுபதம் தன்னால் காய்ச்சி அடவுடனே தேய்த்துவர வர்மம் தீரும் வர்மத்தால் வந்த ஜன்னி மண்டையிடி மண்டைக்குத்து மாற்றுனல் செய்யப்பட்ட வர்மநோய்கள் கேளப்பா நரம்புப்பிடி அலைவு சென்னிநோயும் மாறும்.

98. ஆயாசம் மயக்கமொடு இருக்கும் மாறும் அப்பனே உள் தளர்ச்சை சயமும் தீரும் தீருமடா உச்சிவலி உச்சிக் குத்து ஊக்கமுடன் கொண்டவர் மனோயெல்லாம் கோணுதல் யாவும் உண்மையாய் தீருமென்று பொதிகைமுனி உரைத்த வாரே சுவராதி ஐந்தெண்ணை முக்கூட்டு சொல்லவே திரி கடுகு பழையோடாறும் சொற்பெரியம்துரமொடுதேவதாரம் நல்லதொரு அரத்தையொடு மாஞ்சி கொட்டம் நான்முகப் புல் அக்காரசந்தணம் வல்லபுகள் காரகிலும் முத்துச்சிப்பி வகையான இருவேலிருமிச்சம் சிறுதேக்கு எல்லமணிக் குங்கிலியம் கரியபோளம் இயல்பான நாகப்பூ பூலாவிருட்சம் தானே கேள் கண்டில் வெண்ணை பருக்காய் மோதகம் அசூர் ணகம், வேப்பன்பட்டைகாயம் கிருமிசத்துரு கருஞ்சீரகம் சோலம் கோலம் திரிசாதி ஏலம் சதகுப்பை கடல்நுரை சிறு நாகப்பூ.

99. மானே நீ மருந்தை எல்லாம் இடித்து நன்றாய் நயம்பெறவே வகை வகைக்கு களஞ்சி இரண்டு இரண்டான ஆவின் நெய் புங்கெண்ணை செண்ணைக்காய் எண்ணை நல் லெண்ணை தேங்காய் எண்ணை குணம்பெறவேவகை வகைக்கு படிதானென்று நன்றான ஆவின்பால் வெள்ளாட்டுப்பாலும் நலமான கந்தபப்பால் தேசிப்பாலும் ஒன்றான முலைப்பாலும் தானும் வாங்கி ஓகோகோ சம்பழச்சார் கும்பழச்சார் நிம்ப ளச்சார் என் மகனே எட்டிச்சார் மட்டிச்சாறும் அதுவான வெப்பாற்றிப் பழத்தின் சாறும் வகை ஒன்றுக்குப்படி ஒன்று கணக்காய் சேர்த்து இசைவான சந்தணமும் வேங்கைக்காதல் இயல்வான கருங்காலி பொன்னாவரைப்பட்டை மதுவான அத்தி இத்தி ஆல் அரசுப்பட்டை மகத்தான குருந்தொட்டி வகையொன்று பலம்தான் இரண்டு ஆகவே இருகுருணி நீரி லிட்டு அடவாக கஷாயம் ஐநாளியாக்கிக்கொண்டு ஆக ஒரு பெரிதான உருளிதன்னில் வகையான மருந்து முதல் எண்ணை பாலும் போக இந்தக் கஷாயமதும் கூடச்சேர்த்து பொங்கமுடன் எருக்கலையும் நொச்சி மேனிதாகுபெர வல் லாரை கொடுப்பை வெற்றி தயவான கைதோணி சங்கங்

குப்பி சங்கென்ற வகைச்சார் படிதான் பாதி பரிவாக இதை யெல்லாம் ஒன்றுச்சேர்த்து பொங்கியது போகாமல் அனலெரித்து பொருந்தவே மெழுகுபதமாகக் காய்த்து தாங்கியதோர் புனுகுச்சட்டம் வெட்டிவேரும் பச்சைபாதி மிச்சத்தாலே எங்கும்மொருநிலையாக கணேஷனுக்கு என்னேயதை வடிகட்டி பூஜை செய்யே.

**100.** செய்யவே அந்தி சந்தி பத்துநேரம் கொள்ளுவது காசிடைதான் வேளையொன்று பையவே தேகமெல்லாம் எட்டு நேரம் உருவி எண்ணை போட்டு நலமாக வென்னீரில் முழுகச்சொல்லே நலமான படுவர்மம் பன்னிரெண்டும் தொடுவர்மம் தொண்ணூற்றாறும் உயர்ந்ததொரு உள் வர்மம் எல்லாம் தீரும் கேளப்பா வாதபித்த சிலேற்பனங்கள் கெடியான சூனியங்கள் கைவிஷங்கள் பாழப்பா பேய் பூதபிசாசினுலும் பலநரம்பு தெற்றலுடன் பரிசினுலும் நாளப்பா வைத்திருந்து சிறசோடெங்கும் வளமாகப்பூசிவர எட்டுநேரம் பாகமுடன் பத்தியங்கள் சொல்லக்கேளு. கடினமடா மோகமதை தள்ளவேண்டும் புளியுடனே உப்பினிப்பு நீக்கவேண்டும் நீக்கியே பசும்பயறு கூட்டிக்கொள்ளே கூட்டவே சொன்னதொரு வர்ம சாஸ்திரம் குணமான மருந்துடனே குணபேதங்கள் பேதமென்ற ஸ்தலங்களதின் இடமும்செல்லி சாத்தியம் அசாத்தியம் சொல்லி பேரான வில்லும் விசையும் சொல்லி புகழ் பெரவே என் குருவின் பாதம் போற்றி புகழ்ந்திட்ட வில்லும் விசையும் முற்றே.

குருவே துணை.

## வர்மசூஸ்திர நிகண்டகராதி ஒடிமுறிவு ஞானம்.

1. அண்டபிண்டம் எண்டிசையும் ஒன்றதாகி அண்டப கிரண்டமிதின் புறமுமாகி அண்டபிண்டம் திரிகிரிகை நாலு யோனி அதிலெழுந்த ஊர்வனமும் பறவைதேவர் கண்டிருந்த மனிதாதிபலங்கள்யாவும் கதிப்பான நீர்வளமும் சிரதிகாற் கால் கொண்டிருந்த எழுதோற்றம் ஒன்றாய்நின்ற குணமான பொருளாதி குருவே காப்பு.

2. ஆதியந்தங்கடந்த பொருள்நற் குணமாய் நின்ற அகண்டபரிபூரணமே அளவில்லாத சோதிஎன்ற நிர்மலமே சூட்சாசூட்சம் சுடர் ரவிமதி என்னும் முச்சுடரும் தாண்டி வீதி என்றஒலி இமைக்குள் ஒளியாய் எங்கும் மெய்ப்பொரு ளாய் எப்பொருட்கும் நிறைவதாக சாதிஎன்ற சாதிக்குள் உயிராயெங்கும் தானுக நிற்றிலங்கும் மூலம்காப்பாம்.

3. மூலமுதல் ஆறுஸ்தலத்தோடே மேலாய் மூலவளி தளமதிலே மேலாதாரம் பாலவெளிஸ்தானமதுதான் கடந்து பதியான முப்பாழும் கடந்துமென்மேல் நாராக மேல்குகை யில் குடியிருந்து வந்தவழி தன்னைக்காண ஆலவிஷமுண்ட சிவன் அடியிணையை தினம்பணிந்து ஐந்துருவும் காப்புத் தானே.

4. ஐந்துருவும் மூன்றுருவும் ஒன்றாய்கூடி அதிலுமே ரெண்டுருவும் களங்கமின்றி தேய்ந்ததுகாண் அண்டபகி பெண்டமெல்லாம் தொல்லையற்று நின்றகுருநாதா உன்னை ஆய்ந்துகண்டு தேர்ந்தவர்க்கு நீயேதஞ்சம் அல்லாது வேறுண்டோ அமைச்சர்கோலே மாய்ந்த குருநாத உன்னடி யிணையை மறவாமல் இன்னமொரு காப்புத்தானே.

5. இன்னமொரு ரெண்டாகி நின்றாய் நாதா எதிர் பெருகி முப்பாரில் குடி தானே இன்னமொன்று மூன்றுவி பதியில்வாழ்ந்து இல்லறத்தை நல்தாரமாய் சுத்திபண்ணி

குன்றுமணிபோலிருந்து வாழும்நாதா பிரணவத்தில் வளர்ந்த மூர்த்தி சென்றுசுடர்மணிவிளக்காய் பூரணமாய்நின்ற செஞ்சுடரோன் கமலபதம் காப்புத்தானே.

6. மலரான குண்டலியாள் தாயின்செய்கை வல்லவே தான் பிரணவத்தோடொன்று சேர்ந்து தலமானவலிகளெல்லாம்பெருகிச்சென்று சதுரான பெருவெளியாகாயத்தோடே நிலையாகி மறுபடியும் முன்பின்னுகி நிர்ணயமாய் முதல்கடையாய் நடுவுமாகி பலவகையாகி உடலாகி உயிருமாகி பதிக்கரசாய் ஏவல்செய்யும் ஸ்தலமேகாப்பு.

7. ஸ்தலமான ஸ்தலத்தோடே அசைவு புக்கித்தானு மதிலேரி மலர்மணத்தைக்காண ஜலமாகி வந்தவளி தன்னைக் கண்டு சந்தித்து மேல் வீட்டில் குடியேரி பல உணர்வால் உடலாகி உயிருமாகி பகர் கருவாய் நின்ற பதினுறு காப்பாய் நிலைபெருகி ஒரு குருவாய் நின்ற நாதநின்னருளை என்மீதில் நிகழ்த்தக்காப்பே.

8. நிகழ்த்துவாய் அண்டபகிரெண்டமெல்லாம் நின்றாடும் மணி சூட்சத்தப்பாலேரிபுகழ்த்துவாய் உன்னையன்றி வேறேயுண்டோ புல்லர்களை ஏன்படைத்தாய் புனிதநாதா ஜெகத்திலமைத்திருக்கும் வளிக்கடங்கா நாதா தன்னையொரு அகத்திலிருந்தக ஞானதீபம் காண அருள்புரிந்து எனைக்காப்பாய் அண்ணல்கோனே.

9 அண்ணலே உலகதிலே வாழும் மாந்தர் அடிகாயம் முறிவு விழுதல் தல்லலாலும் விண்ணடியில் புனையற்று விழுகையாலும் விழுந்தங்கம் சிதறுண்டு நொருங்கலாலும் மண்ணதிலே வெகுநாளாய் துக்கமுற்று மற்றவ்வால் வர்மமது கொள்கையாலும் திண்மையுடன் இவைகளிலே பலதுக்காக செப்புகிறேன் எண்ணையொடு கஷாயம் மாத்திரை.

10. மாத்திரையும் கிருதவகை துவாலைப்போக்கும் வகையான நசியமுடன் தூளின்போக்கும் சேர்த்துடனே ஔஷதங்கள் செய்யும் போக்கும் செய்யாமல் பார்த்தறிந்து

நீ விலக ஸ்தலத்தின் போக்கும் பண்பாக ஈடுகொண்ட குணத்தின்போக்கும் காத்து முறை செய்து உயிர்கருகும்போக்கும் கட்டர்களை கைகொண்டு செய்யும் போக்கும்.

11. போக்காக்கால் கொண்டு செய்யும் போக்கும் பொட்டணத்தில் கிளிகள் ஊனும் போக்கும் தெளிவாகச் சொல்லுகிறேன் தெரிந்துபாரு ஆக்கையுற்றுன் குருபரனை நினைந்துகொண்டு அன்னியர்தன் உயிரை உன் உயிரைப்போலும் வாக்குமனம் ஒன்ருகி நின்றுகொண்டு வர்மங்கள் முறிகாயம் எல்லாம் காணே.

12. காணவே அபகுரிகள் தட்டுமென்று கண்டாலோ அகல நீ, விலகி நில்லு ஊணவே தீருமென்று நிஜங்கல் கண்டால் உத்தமே செய்து நீ உருதியாக வாள்நாள் தான் பிரியுமென்று நிஜங்கள் கண்டால், வல்லவனே நீ அருகில் சருகவேண்டாம் தூணதுபோல் நின்றி இருகுரியும் பார்த்து சூட்சமாய் யோசிக்க சூட்சம்தானே.

13. சூட்சாதி சூட்சமதைக் கண்டு நீயும் சுருக்காக விபரம் எல்லாம் ஆய்ந்து பார்த்தால் ஆச்சரியமாயிருக்கும் ஸ்தலங்கள் கண்டால் அது பெருகி குளிர்ந்திருக்கும் அறிந்து பாரு பாச்சலுடன் அத்தலத்தில் பிராண வாய்வு பற்றியே சிக்கருப்பு உயிருண்டென்ருல் மாட்சிமையாய் அறிந்து நீ தலத்தில் தேரி மறவாமல் இருவினையும் வகுத்துப்பாரே வகுப்பாகப் பார்க்கையிலே படுகாலத்தில் வருமங்கள் கொண்டதென்ருல் சிணம் செய்து.

14. தொகுப்பரவே பிராணகலை நாலும் சிக்கி தோன்றினதால் பிராணனுக்கு குற்றமாகும் பகுப்புடனே சிக்கலது தீர்ந்ததென்ருல் பகையான வர்மங்கள் இல்லை என்பார் நகைப்புடனே அறுத்தடைத்த வாசல்வழியணுகி நிற்கும் எட்டுவிரல் கலை எட்டாமே.

15. எட்டான கலையுடனே பிராணன் நாலும் ஏகினதால் ஈராறு கலையாமென்ன கட்டான ஈராறும் வழி எட்டாகி கருதி

னதால் தொடுவர்மம் தொண்ணூற்றும் நெட்டிடவே இது கலெல்லாம் நூற்றெட்டாகி நேர்ந்ததினால் நூற்றெட்டு வர்ம மாகும் மட்டுரவே இவையறிந்து வர்மந்தீர மறவாமல் வகை விபரம் அறிந்துசெய்யே

**16.** அறிந்து நீ செய் களங்கமற்றுக்காணும் அரன்மூல குருபரனை மனதில் கொண்டு செரிந்தவரை நிதம்பணிய தல மும் காணும் செங்கதிரில் மதியொடுங்கி சிறப்புஞ்சேரும் அறிந்துடனே மயிர் பாலம் தாண்டிப்போக வழிகளெல்லாம் செம்மையாய் காணலாமே நிறைந்திட்ட மூலவெளிபெரும் பால் தன்னில் நேர்ந்த நல்கலை சுளியில் ஒடுங்கிக்காணும்.

**17.** காணுமே இருவழியாய் நின்றொலிக்கும் கலை நாலும் சொச்சமது வழியில் நிற்கும் ஆணவமே புக்கும்வழி ஒன்றுகூடில் அதில் மூன்று கலைகாணும் அடர்ந்து நிற்கும் பூணுகின்ற பிராணகலை நாலுமொன்றாய் புக்கினதால் படுவர் மம் பன்னிரண்டாம் வேணுமென்று பதினெட்டு வர்மமொன் றில் விபரமுடன் இரட்டையாய் வகுத்ததென்னே.

**18.** வந்த வகைவிபரம் இப்படியே கண்டால் மங்கைய ருக்கு குறைந்தவர்மம் பீஜக்காலம் சொந்தமென்ற இந்தவர்மம் ஒன்றும்நீக்கி தொகைகாண ஒருநூற்று ஏழாம்பாரு சந்த முறை இப்படியே இருக்குதென்று ஜடம்பார்த்துக் கூறுகண்டு அமர்த்தல் செய்து விந்தமது முறைசெய்தால் அமராதென் றால் வேறு கொண்டை காலமதால் வந்ததென்னே.

**19.** காயமென்றால் படுகாயம் கனத்தாடு கதிர்குலைகள் நெருங்குண்டு நிறம் வேராகல் நேயமுடன் நாலற்று இயங்கித் தாளல் நெடிக்கு முன்னே நெட்டிளிதல் கலையாய் பாய்தல் தேயமுடன் பெருவியர்வை அலர்தல் கண்டம் சுருங்கியே கழுத்துரையில் வலித்தண்ணார்தல் தூயதலை உருளல் பிரண்டுருளல் கண்விழித்து மேல்சொருகி சீரல்.

**20.** சிறலுடன் கைகாலால் சேட்டை செய்தல் ஜடம் வெதும்பி குளிர்ந்திடுதல் ஜடம் கனத்தல் மாறியே கருடனு

டைய பார்வை பார்த்தல் வழிபிசகிப்போவதற்று நடையே கொள்ளல் ஏறியே பெலனதிகம் காட்டிப்பின்னுல் இடமுக தேகம் விரைத்து உளறுதல் மாறியே கடைக்கண்ணில் நீரொ லித்தல் மயங்கியே அதிமூர்ச்சை கபம் வர்த்தித்தல்.

21. வர்த்தனையாய் பீஜம் விந்து கலங்கி மூலம் வலு வற்று இசைவு தளர்ந்திடுதல் கறுத்தவிஷம் போலேயதில் வேக மாகி கண்டவரை கைகாலால் உதைக்கலாகல் வியர்த்து மிகவெ ருவி குளிர்ந்திடுதல் இசை என்ற பொரி தளர்ந்து மயக்கமா தல் பார்த்து மிகச்சிரித்தல் வேர்வையும் கபமும் காட்டும் பயப் பட்டு நடுநடுங்கி மயக்கமுறல்.

22. நடுங்கி மனம் பேதலித்து மனம் கழித்தல் நல்ல கண்ணும் மேல் சொருகி பஞ்சி பார்த்தல் அடங்கிமிக நடுவணை யில் குன்மமேறல் அதனாலே ஜடம் கமிந்து நிமிராதாகல் திடங்கண்டு துயில்கீரல் பொதுமி ஏறல் சிக்கிஏறி குருக்கே பார்வை குத்து வேர்வை விக்கலாகல் மடமயிலே இக்குறிகள் கண்ட தென்றால் மறுகாலம் பல விதத்தால் மாறச்செய்யே.

23. மறுகாலம் செய்திடவே கொஞ்சமாகும் மாறாமல் அதிகமென்றால் மைந்தாகேளு விருதாவாய்ப்போம்உயிர்களது தடைபடாதுவேரிளகி பிறுணகலை வேறுமென்றால் சர்வ தொழில் பார்த்தாலும் பலனொன்றில்லை சந்தேகம்கொண்ட தென்றால் அமுர்ந்துபாரு குருமுனிசொன்ன மொழிப்படியே சொன்னேன் கூறறிந்து இந்தமுறை கண்டுநில்லே.

24. நில்லென்ற தலங்களது, உச்சிமூக்கு நேர்கொண்ட ஸ்தலமதுதான் திவளையாகும் வெல்லென்றநடுவரியில் காட்டம் வாரி விசையான நேர்சுருக்கி கொண்டைக்கொல்லி கல்லென்ற பஞ்சவர்ணகருகே நடுவாம் கதில்கொண்ட வெள்ளீரல்வாரி எல்லாம் சொல்லென்ற தொண்டைநடுப்புறகேயாகும் சுகமான பித்துக்காய்ரெண்டின்பக்கம்.

25. பக்கமென்ற மணிபந்தம் எட்டெலும்பின் மத்தி பகரும் உள்ளங்கையுடனே காலுமாகும்அக்கமென கதலிவளம் நெருங்கலாகி ஆவிஎன்ற மூச்சடங்கி அத்தலமில்லாமல் சிக்

கெனவே மேல்கீழும் வாசியாகல் திரமானவாரிமேலெலும்பு திரள்தல் பக்கமென்ற அதினடுத்த பூணெல்தாள்தல் பதிந்த நடுஇசையணை அசைந்து குன்மமேறல்.

**26.** அசைவான நாசியது மூலஞ்சேரல் அதனாலே மூங்கில் வட்டம் விரிந்து தோன்றல் கசையான குண்டெலியில் உளைமையான கதிர்மூலம் மேல்சென்றுபதிந்தங்கொட்டி விசையான கைத்தரிக்கோல்விசை கொள்ளாமல் மேல்வாசல் விசையற்று தளர்ந்துகோணல் அசையாமல் நின்றசையும் விசை தளர்ந்து அரைக்குக்கீழ் செத்தசவம்போலேயாகல்.

**27.** ஆகவே இதுமுதலாய் குறிதலங்கள் அறிந்து நீ கூடியதுமட்டும்பாரு பாகமாய் செய்தாலும் பலிக்காதென்றால் பண்பாக விலகிநீஅகலநில்லி தோகையரும் நீ வகைகள் செய்தாயென்று சொல்லுவாரென்று கண்டால் அகன்றுபாரு வேகமறிந்திப்படிச் செய்வாயென்று விளம்பிநீ வேரேஆள் பார்க்கச் சொல்லே.

**28.** சொல்லுகிறேன் கனத்தஅடிகொண்டு அங்கம் கொதுவியே அறிவற்று துவண்டு காணல்வெல்லாமல் அடிகொண்ட காயத்தாலே வேகித்து பஞ்சகர்த்தன் நிலைதளர்ந்து பல்லுயிர்க்கும் தானுக யிருந்தானதம்பம் சரித்து நிலைபிசகிப் போனதாலே அல்லுபகல் மூன்றுதினம் கடருமாகில் அவருயிரும்தோஷமில்லை அறிந்துசொல்லே.

**29.** குண்டெலி முரிவு அறிவானஅசைவென்ற குணடெலியின்பாகம் அணைத்திருக்கும் குண்டுரெண்டும் விலகுமாகில் சாயாமல் காலுரெண்டும் ஒன்றாய்சேர்த்து மட்டரவே முட்டுரெண்டும் ஒன்றாய்க்கூட்டி பிரியாமல். குண்டுமணிக் குண்டிலானால் புரம்போகா கசை வரிந்திருக்கிக்கூட்டி உருதியுடன் நடுவரியில் சதுரப்பந்து உத்தமனைதாக்கி விரல்தன்னை கூட்டே.

**30.** கூட்டியே இந்தநிலை கலைவில்லாமல் கருதியே முறிவெண்ணை கதிக்கத்தாக்கு மட்டரவே தொண்ணூறுநாட் சென்றக்கால் வசவெண்ணை தாக்குவாய் ஏன்றமட்டில் திட்ட

றுடன் எண்ணேகொண்டும் ஒன்ருய்கூட்டி செலுத்துவாய் மண்டலம்தான்செல்லுமட்டும் மட்டாகவந்ததென்ருல் நன்மை யாகும் வலிவிலகி நிற்குமானுல் தின்மையாமே.

31. மணிபந்தம் முறிதல் என்ருலோ மணிபந்தம் விலகி ஏகயிதமாக நொருங்குண்டு செவ்வோடேகில் நன்ருக கண்விலகிப்போகுமென்ருல் நலமான ஐந்துவரி எலும்பின் பின்னே நின்றிசையும் பேரெலும் போடதனேலுப்ப நிசமான புனையதனில் தாக்கிக்கொண்டு குன்றுமணி ஐந்துமதை பற்றச்செய்து குறையாமல் அச்சிரண்டும் ஒன்ருய்ச்சேரே.

32. சேரேநீ அச்சதனேப் பூணக்கட்டி சிறுகடுகும்விலகா மல் செலுத்திவைத்து நீரதிகம் கொண்டுதானுல் சேராவண் ணம் நிசம்கண்டு துவாரமிட்டவழிகளெல்லாம்பார் அதிகம் நெருங்காமல் பஞ்சுசேர்த்து பண்பான முறிவெண்ணே தாரை செய்து சிரேநீ மூன்றுநாள் கூடிப்பார்த்து சிறப்பாக தொண் ணூறுநாள் சென்ருக்கால்.

33. நாள்சென்றவுடன் வசவுஎண்ணேதாக்கு நலமான மண்டலம்தான் கழிந்தபின்புதான் திறந்துஅச்சதனே விலக்கிப் போட்டு தயவாக கையதனுல் இதமும்செய்தால் வாள்முருகர் கிருபையினுல் நன்மைகாணும் வழிமறந்தால் தின்மையது வந்துசேரும் நிகள் வழியாய் இந்தமுறைசெய்துகண்டால் நிலே பிசகிப்போகாது திடம் கண்டாயே.

30. திடம்காணும் இந்தமுறை அசைவுகெட்டில் சிளி முறிந்திட்டாலும் சவ்வற்ருலும் அடவுதவருநிலேயாய் மன முறைத்து ஆக்கையற்றுப்போனுலும் கண்டுசெய்ய மடமயிலே குருபாதமறைவாய்நெஞ்சே மற்ருெருவர் அறியாமல் தியானம் செய்து கடன்துலேக்க இப்படியே வந்ததென்று கருதியேமன முரைத்துக்கண்டுசெய்யே.

35. முட்டுநகண்டால் கண்டுநீ செய்திடவே இன்ன மொன்று கடுமையாய்முட்டுநகண்டுவிட்டதென்ருல் மண்டான சிரட்டையது சவ்வற்றேகி மறுபுரத்து சவ்வகன்று விசை

கொண்டிட்டாக்கால் கொண்டாலோ மீள்வதற்கு அருமை யாகும் குதிங்காலில் நரம்பற்றால் இதுபோலாகும் பண்டான பெருவிரலும் இதுபோலாகும் பகர்ந்த உட்புறமதுவும் இது போலாகும்.

**36.** பிட்டி நடுஆகுமே மூணும் கீழ்தாரைக்குள் அடி கொண்டு விசைதளர்ந்து வரிநெரிந்தால் வாகுபெற முறி வெண்ணே தாரைசெய்து வகுப்பாக கீழ்மேலாய் அலகை யொட்டி பாகமுடன் அணைவழியே கச்சைகட்டி பதித்திருத்தி கையதனால் இதமும்செய்தால் வேகமுடன் நொறுக்கெலும்பு சரிபாய் கண்டால் விபரமாய் வசவெண்ணே தாக்கத்தீரும்.

**37.** வாரிப்பூணெலும்பு முறிந்தால் தாக்குவிாய் நடு வரியில் வாரிப்பூணுதானே அற்றுநொருங்கியது முறிவுகொண் டால் போக்குமுயிர் மீழ்வதற்கருமையர்கும் பொன்னெட்டி நாலுவிரலுள்ளேகொண்டு தாக்குமே நெட்டதுவும் கவுழ்தல் கண்டால் தானவனுய் பலபாகம் செய்திட்டாலும் நீங்குமே உயிரதுவும் உடலைவிட்டு நிசமாகவிலகிநீ அகலநில்லே.

**38.** நிசமாகும் கதலிவனத்திடுகொண்டு நீளசைவு பில னற்று விசைதளர்ந்து வளமான தசவாய்வு வெதும்பல்கொண்டு வாகுபெறவெருவி அனல்குளிருமாகில் கபமான கபமூர்ச்சை வேர்வைகண்டால் காலனுர் உடன்வருவாரென்று நீயும் குட மாக மருந்து பலவிதம்செய்தாலும் கூண்ட உடல்விட்டு உயிர் கடரும்தானே.

**39.** ஓடிந்தால் கட்க்குமந்த ஆக்கிருணப்பாலம்தன்னில் கனத்தஅடியர்ல் குருந்தில் சோரைகொண்டு சடமெனும் பிர பால்மதில் வீக்கம்கொண்டு செவ்வையின்றி பலவழியாய்பேசக் கண்டால் மடமயிலே மீழ்வதற்கு அருமையாகும் மருந்துபல செய்தாலும் அதிகம்கண்டால் திடம்பேசிசெய்யாதே அகன்று செல்லே ஜெயம்வருமோ எப்படியோ என்றுசொல்லே.

**40.** எப்படியும் கபாலமது சதையுண்டாகி மூர்ச்சையாகி எரிட்டு எழுந்திருந்து தளர்ச்சைகண்டாலப்படியோ இப்படித்

தான்வருமோ என்று ஆராய்ந்து திட்டமறிந்தகன்றுசெய்யே செப்பமுடன் கதலிவனம்பாரா ஈடுசினங்கொண்டு மூச்சயர்ந்து கமூர்ச்சைகண்டால் மப்பதிகம் கபம்விக்கல் மூர்ச்சைகண்டால் மரணம்வருமென்று திடம்வகுத்துச்சொல்லே.

**41.** சொல்லுகிறேன் கைப்புஜத்தில் ஈடுகொண்டு சூட்சமாய் சிப்பியது தாழ்ந்துபோனால் வல்லதிது கைமுறையாய் மைந்தா நீயும் வலுத்திருத்திவைத்தாலும் உரையாதென்றால் வெல்லுகின்ற கால் வெள்ளைப்பதிவில்தாக்கி விளங்கவே கையதனால் பிடித்துச்சேர்த்து நில்லெனவே தலம்பதியவைத்துக் கொண்டு நேரானவில்லதிலே நானு பூட்டே.

**42.** பூட்டியே முன்வசத்தில் குருக்கேதாக்கிப்போற்றியே பந்ததனைப்பதியச்செய்து தாட்டிகமாய் மறுதோளில் தாக்கிக் கட்டி சரியாக முன்தோளில் ஆப்பிள்வைத்துகட்டியே முறி வெண்ணை கழிக்கத்தாக்கு ஈட்டியே புரமுறிவால் மூன்றில் பாரு இல்லாவிட்டால் ஐந்துநாள் கூட்டிப்பாரு.

**43.** ஐந்துநாள் கூட்டிப்பார்த்திதங்கள்செய்து அடவாக தொண்ணூறுநாளும் சென்றால் மஞ்சவே வசவெண்ணை மண்டலந்தான் கூட்டிப்பின் கையிதம்செய்துஞ்சலுற்ற சவ் வுரைத்துப்பற்றிப்போகும் சுகமாக கையதிலே எலும்பும்சேரும் நஞ்சுண்டசிவனார் தன்னருளினாலே நல்வழியாமீதுரைத்து நாடிச்செய்யே.

**44.** நாடியேமுளங்கையில்பிலமுறைத்து நன்றாக முட்டதினுள் விசைநரம்புதானேரிச்சாடி முழுங்கைஎலும்பு முட்டைவிட்டுத்தான்வெளியில் சாடிவிசைகொண்டதென்றால் கூடிய மட்டும் உள்செலுத்தினாலும் கூடாதுஎன்றுகண்டால் ஆடியே கால்வெள்ளைப்பதிவிலேற்றி அகங்கையால் பிடித்திழுக்க முன் போலாகும்.

**45.** முன்போல ஆக்கியதை தாக்கிவிட்டு முடுகியே பறதனை பதியச்செய்து பொன்போலே நாணேற்றி விசை புடுக்கி பொரியாகஅகற்றெல்படு நீக்கல்செய்து தன்மயம்போல்

முறிவெண்ணை தாரைசெய்து தான்பிலத்தால் வசவெண்ணை தாக்குவாய்நீமுன் நிகம்போலாகுமடா பலமுங்காணும் முனிச் சலத்தைப்பாராமல் தெளிந்துசெய்யே.

**46.** தெளிவானகவளியது கிரல்கொண்டு சினமான காலமதிலுற்றுக்கொண்டால் பழியாக ஒருவேளைவந்துசேரும் பகர்ந்த இடையின் கலைதான் நீங்கிக்கொண்டால் வெளியான முறிவெண்ணை கழிக்கத்தாக்கி வேண்டியதோர் விரலதனை மட்டாய்கட்டி அழியாதபடி இதமாய் செய்துகொண்டால் அசடொருநாள் வாராதென்றறிந்துபாரே.

**47.** அறிந்திருந்தால் விரலின்மத்திகிரி அகங்கையில் வர்மம்தான் விசையாய்கொண்டால் சிறிந்திருந்தகாச்சலொடு குளிரும்காணும் செயலான வியர்வைகபம் சிதம்தோன்றும் அறிந்திருந்த அறிவையெல்லாம் குறைத்துப்போடும்அடவாகப் பலவிதமாய் கோட்டிசெய்யும் பிரிந்திடும்காண் உயிரதுவும் உடலைவிட்டு பிழையாதகுறி இதனைப்பேணிப்பாரே.

**48.** பேணிப்பார் தோள்புஜத்தின் நெட்டிதாழ்ந்து பெலத்தோராகிருந்துகொண்டால் சொல்லக்கேளு உடனே வில்லில் நாணேற்றி உத்தமனே கூட்டில்பந்துசேர்த்து கதிப் பாகமுறுக்க ஒருகச்சைகட்டி தோணப்பா முறிவெண்ணைகதிக் கத்தாக்கி தொண்ணூறு சென்றவுடன் கையிதம்செய்யே.

**49.** கையிதமேசெய்து வசவெண்ணைதாக்கு கதிப்பாக முட்டதிலே நாளைத்தாக்கு பையவே மறுதோளில் தாக்கிக் கெட்டிவை இதமேசெய்து கொண்டால் நன்மையாகும் வகுப் புடனே இந்தமுறை வருந்திச்செய் நீசெய் இதமே கொண் டால் நன்மைகாணும் ஜெயமாகும் இந்தமுறை திட்டம்பாரே.

**50.** பார்த்திடுநீ வாரிஎலும்பு முறிந்து தாழ்ந்தால் பதி யான நிரப்பிலே குழிதோண்டி சேர்த்திடுவாய் முறிதலத்தை நடுவில்சேரவே மறுபுரத்தை நிரப்பில்தாக்கு போற்றிடுவாய் இருபுரமும் உருட்டிநீக்க பொன்போலே எலும்பதுவும்சேரும் கண்டாய் ஆறந்தவிதம்றிந்து உடனே பற்றையிட்டு அறிவாக முறிவெண்ணைதாக்குவாயே.

51. தாக்கிடு நீ எண்ணையது குறைவில்லாமல் தன் கையாலிதப்செய்ய சுகமே காணும் ஊக்கமுடன் பூணெலும்பு ஊனம் தாழ்ந்தால் உண்டாகிறுறிந்துடனே தாழ்ந்ததென்றால் ஆக்கமுடன் முன்போலே அடவுசெய்து அணைத்துருட்டிமருப்புறமும் தாக்கப்பாரு நீக்கமுடன்செருமியது முன்பாகத்தை நிசம்கண்டு செய்துவிட விணையற்றேறகும்.

52. ஏகியே அலேவதிலே அதிகமாகி இதப்பிணைத்து கெட்டியது நின்றுகொண்டால் வாகுபெறவசவெண்ணை புறம்பும் உள்ளும் வார்த்துபின்னங் குசவ்வையகற்றி நீக்க தோகையரே முன்போலே ஆடிநிற்கும் சுகமாக குருவருளை நாடிச்செய்தால் ஆகுமடாநீநினைந்து அவரிடத்தில் அன்பாக க்கேட்டறிந்து அருளேப்பாரே.

53. அருளான எலும்புமுரி வெளிவிட்டேடேகில் அனந்தரிய ஆறுவிரலுக்கதிகமானல் வெருளாமலிருந்தாலும் நிஜமாகாது வெளிப்பட்டதுள் செலுத்தச் செல்லாதென்றால் மருளாக்க குறுகினதை அறிந்துகொண்டு மாத்திரையாய் மாமிசத்தைக் கீரிப்பின்னே பொருளாக உட்செலுத்தி வைக்கவென்றால் புத்திரனே தலங்களிலேபடுமென்றால்நீ.

54. படுகாயம் கொள்ளாமல் அகலநீக்கி பண்பாகக் கிரியதை உள்ளேதாக்கி நடுவான காயம்முறிகலத்தில் நன்றாக விரணமுற்ற இடங்களெல்லாம் விடுவதிகம்சாறுமல் இடைவருத்தி வலிக்கண்டுகெட்டதிகம் நெருங்காவண்ணம் நடுவரியாம் இடைபின்னில் அலவு சிகிளி நல்வழியாம் அதில் நெருங்கப்பற்றிடமேல்.

55. பற்றுமல் அற்றசவ்வு விலகிடாமல் படுத்திருக்க முறிவெண்ணை உள்ளே தாக்கி பற்றான இடங்களிலும் எண்ணை செல்ல வழிகண்டு முறிகாயம் ஆறிப்போனல் வெற்றான முறிவெண்ணை நிறுத்திப்போட்டு போடுவாய் வசவெண்ணை காலம் கண்டு வேண்டியதாய் செலுத்தி முன்கைபிதமும் செய் நீ தெற்றுமல் தீருமடா கோடிக்காயம் நிறைசூழும் புவனம் எல்லாம தெளியும்தானே.

56. தெளிவான பீஜவித்து மேலேறி திசைபிசகி வலம் இடமாய் நின்றுகொண்டால் வழியான துறைகளெல்லாம் பார்த்தாலும்தான் வந்திறங்கி நில்லாவிட்டால் வந்து சேரு எளிதாக மேல்புரத்தில் பக்கம்பற்றி இரண்டு கையில் எட்டு விரலால் பிடித்து குழியான மேல்குழியில் பெருவிரலால் குவித்திறக்கு அசைத்தெடுத்துக்கொண்டு சென்று.

57. சென்றுகொண்டு விட்டுநீ முன்பக்கத்தில் சிறு கச்சை கத்தரிக்கோல் போலே கட்டு நின்றிடும் நீர்களெல்லாம் சுண்டிப்பின்னே நீர்நிலைத்து நின்றிடாமல் அன்றுடம் தான் ஔஷதங்கள் செய்திடுநீ அன்புரைத்தால் மீள ஒன்றும் செய்ய வேண்டாம் நின்றிடும் குருபரனை நினைந்துகொண்டு நினைகெட்டுப் போகாமல் தியானம் செய்யே.

58. தியானமது மனமதிலே மறவாவண்ணம் செபித் திடுநீ பரமகுருவருளினாலே ஜெயமுனைக்குத்தந்து வரமளித்து நிற்பார் செய்வதெல்லாம் பலவிதமாய் வாய்க்கும் கண்டாய் கயமான கண்காணுதிருந்திட்டாலும் கண்ணான அருள் மனதில் கண்ணால் காணும் நயமான இவ்வழியே முன்னிட்டுச் செய் எமன் வரினும் பயமில்லை நளினம்காணே.

59. நளினமென்ற உச்சி தன்னில் பாரமீடு நன்றாக அதினகத்தில் முறிவுகொண்டால் வழியான தட்டல் முட்டு விசையாய் கொள்ளல் விதமான மாத்திரைக்கு மிஞ்சிக்கொள்ளல் வழியான அதின் நடுத்தலத்தில் கொண்டுவாகித்து நெருக்கமுற்று செருமிக்கொள்ளல் அழிவுகண்டு பாகமதாய் முறைகள் செய்தால் அடுக்காது என்று அகலநீங்கே.

60. நீங்கிடும் நீ படுவர்மம் பதினெட்டுக்கும் நிலையான தொடுவர்மம் தொண்ணூற்றுறுக்கும் வாங்கிடுநீ தலங்களெல்லாம் அறிந்துகொண்டு வகையறிந்து செய்தாலே நன்மையாகும் அங்குநின்ற இடைபிங்கலை சுளிமுனையும் அறிந்ததெனில் வழியறிந்து தேர்ந்து செய்தால் பாங்குபெருமிவ்வழிகளெல்லாம் வேறே பலவழிகளுண்டாகும் என்றுகூறே.

61. கூறான ஈறுறு கலையின் மார்க்கம் கூறயிலோ ஒளியாகி வெளியும் காணும் ஈறுனகலை நாலும் பரத்தின்கூறும் இதனடுத்த நாலுகலை சிவத்தின் கூறும் மாறுகின்ற நாலுகலை சத்திக்கூறும் வகுப்பான பரமகுரு தீபமானார் வேறான சிவகிரிதான் தந்தையாச்சி வெளியான, சத்திகலை வன்னியாச்சே.

62. வன்னிஎன்ற சத்தியவள் தாயுமானாள் வகுப்பான சிவகிரிதான் தந்தையாச்சு சென்னி தீபப்பாதமனார் செழிப்பான நாதமது உயிருமாச்சு கன்னியென்ற தாயவளும் சலத்திலானாள் கதிப்பான சலமதுவும் பிருதிவியாச்சு இன்னமுமே பிருதிவியது அப்புமாச்சியே கலந்த இருப்பிடமும் மண்ணுமாச்சே.

63. ஆச்சப்பா மண்ணதுவும் அண்டத்தாச்சி அண்டவென்ற பிரம்மதலம் பரத்துள்ளாச்சி வாச்சப்பாபரம்தானாய் நின்றவாறும் வழுவாத யோனிகருதோற்றம் ஏழும் நீச்சப்பா இதனுள்ளும் புறம்புமாகி நின்றணுவுக்கணுவான நிகரில்லானை ஆச்சரியமுணர்ந்து மனமுருகும்போது அறியாத தொன்றுனக்கு அதனைந்தேறே.

64. தேறுகின்ற குருபரனை நினைத்துத்தேர்ந்து தெளிவாக ஆராய்ந்துதலத்தைக்கண்டு கூறுகின்ற மயக்கமதைநீக்கித் தள்ளி குருபரனை உள்கொண்டு குறித்துப்பாரு ஏறுகின்ற சரமதனை அடக்கினுக்கால் எல்லாமும்இதற்குள்ளாய் இருப்புமாகும் வேறுகின்றவிரலாலே சுவாசம்பாரு விரைவான ரவிமதியின் பலத்தைப்பாரே.

65. பாரென்றநாடியை நீ தேர்ந்துபாரு பத்தென்ற தசைநாடிதன்னைப்பாரு சீரென்றவாதமது மிஞ்சிக்கொண்டால் திறமாகும் கதிர்மதிரவியின்கீழே வீரென்ற பித்தமது மிஞ்சிக்கொண்டால் விரைவாக உந்திமுதல் கண்டம்மட்டாம் காரென்ற சிலேற்பனம்தான் மிஞ்சிக்கொண்டால் கண்டமுதல் உச்சிவரைகாணும்மட்டே,

**66.** மட்டுமிட்டுமூவருமே சிதரியுத்தம்ஆனுலே ஒளி குறைந்காலே இருளுமாகும் விட்டுரெண்டு நாடியொன்ருய் இசையுமாகில் விசையாக இருஸ்தலத்தில்ஈடுகாணும் கட்டு விட்டு மூன்றுமொன்ருய் தொந்திப்பாஞல் கபவேர்வைசீத மொடு ஜன்னிமூர்ச்சைதட்டுவிட்டு சண்டைசெய்வோர் ஆர்தானென்று தானறிந்து சயம்பிடித்தோர் என்றுகூடே.

**67.** கூடியே மூன்றுமொன்ருய்கூடி பதுங்கினுலும் குரூரமாய் சாடியதுமோதினுலும் ஆடிநின்றபித்தமது நிலே விட்டாலும் அதனுலே அபகுறிவந்தணுகும்பாரு தேடிநின்ற வாதமது சிலேற்பனத்தேறில் சீதமொடு கபவேர்வை சன்னி விக்கல் ஓடிநின்றஐயமதுவாதத்தேரில் உற்றபல அபகுறிகள் உறிதியாமே.

**68.** உறுதியுள்ளவாதமதில்சிலேற்பனம்சேரில்உறைப் பானபித்தமதின் வாதஞ்சேருதல் இருதியுள்ள கபமதிலே பித்தம்சேர்தல் இசைந்தகபம் பித்தமதிலுற்றுச் சேர்தல் குறியிதுநீகண்டாலோ மருந்துசெய்நீ குணமானபித்தநிலே குறைந்திட்டாலோ அருதியாய்உடல்எதுவும் உயிரைவிட்டு அம்பரத்தில்போற்றுமென்று அறிந்துபோற்றே.

**69.** போற்றிநின்ற நாடியது பின்பக்கத்தில் புகழாக விலகியது நடக்குமாயின் மீறிநின்ற குளிர்சுரங்கள் மயக்கம் மூர்ச்சை மிகவாகதன்பாகம் அருளுகாணும் தேற்றிநின்ற நாடியது முன்பக்கத்தில் தொடர்ந்துநடைகொண்டாலோ கடினமாகும் சாற்றினதோர் விசைநரம்பின்வழியேசென்று சாடிநிற்கும் கபாலம்வரை மயக்கம்தானே.

**70.** மயங்கிநின்றநாடியது கபத்திலுற்றுட் மாறியக் கரையேறிசாடிமோதில் பயங்கிலேசமுற்றதிக கடினமூர்ச்சை பறந்தேறி விக்கல்கபம் சன்னிதோன்றும் நயமாக மருந்துபல விதம்செய்தாலும் நாடியதுகோபமுற்று மிஞ்சிக்கொண்டால் ஜெயம்வருகாதொருநாளும் மீழாதென்றே செப்பினுர் மலே முனிவர் ஜெகத்துள்ளோர்க்கே.

71. உள்ளபடிவாதமொரு பங்கதாகி உற்றபித்தம் அரைபங்குசிலேற்பனம்காலாய் கள்ளமற்றுநடைகொண்டால் பிணியொன்றில்லை கண்டுகொள்நீ வன்னிபதுமிஞ்சிக்கண்டால் பள்ளமேடில்லாத வண்மையறிந்துநீயும் பாங்குடனே முப்பொருளேயாய்ந்துகொண்டு விள்ளுகின்றநாடியதுவன்னி வாதம்பிருந்திருக்கும்வாசி வட்டநாடிகாணே.

72. வட்டமடாமூலமென்ற குண்டலிக்குள் வகுத்திருக்கும் சிவகலைமேமேலேசாடிவிட்டதினால் பஞ்சவர்ணத்தூடு தாண்டி அட்டதிசையிலூடாடி சாய்ந்து அம்பரத்தில் பாய்ந்துமிக அடங்காநின்று கட்டாதகாளையடா அதனைக் கட்ட கதிர்திரைக்குள் சந்திரனைக் கண்டிப்பாரே.

73. கட்டிநின்ற இடகலையின் மார்க்கம்கேளு கருதுகின்ற வலக்கால்பெருவிரலைத் தொட்டுநின்று குதிங்காலில் விசைகொண்டேகி தொடுத்துநின்ற கத்திரிக்கோல்விசையில் புக்கி மட்டுடனேவே இடதுபக்கம் சாய்ந்து மேலே வகுப்பான செவிக்குற்றி மேல்பக்கத்தில் திட்டமுடன் சுற்றியந்தபிடரி புக்கிதிடமான இடதுகா துள்ளுடாடி.

74. ஊடாடி அசைவுபுக்கும் வழியுமாகி உள்ளசபை ஆக்கிராணவழியேசாடும் கூடாதபின்கலைதானிடது காலில் குறிகொள்ளும் பெருவிரலில் குதியிலுற்று ஆடாத கத்தரிக் கோல்விசையில்நின்று அணைத்திளகி வலதுபக்கத்துள்ளு டாடி நாடாத்கபாலம்வரை சுற்றுமீழ நளினமுடன்சுற்றி யந்த அசைவுகெட்டில்.

75. அசைவுவழி கட்டுண்டு பெருவிரலில் அணைந்திருக்கும் பின்கலை என்றறிந்துபாரு நிசமான சுளிமுனைதான் மூலக்குய்யம் நின்றிலங்கும் கத்திரிக்கோல்நடுவிலுற்று வசமான குறுக்கெலும்பில் முன்பக்கத்தில் வகுத்திருக்கும் நடுத்தாரைவழியாய்எரி குசமாக மதிவளரும் தலத்தில் புக்கி குய்ய முனையாயிருக்கும் குறித்துப்பாரே.

76. குறியாகமயங்கும் காரணமேசொல்வேன் குறிப்பானகாலங்கள்கொள்ளும்போதுகூறி நடனம்புரியும் விசை



தளந்து குறிப்பான நாதவிந்து விசைவிட்டேகி பாரிநின்ற பிராணகலை சிக்கல்கொண்டு பொரியான பஞ்சகர்த்தா நிலை பிசகிப்போனதினுல் அறிவிழந்து மயங்கிப்பின்னும் மறுத்து வந்து பிராணகலைநாசிமுனை முட்டிமட்டாக நின்றதனுல் உணர்வுண்டாச்சு.

77. உணர்வாகச்சொன்னபடி தன்னைத்தேர்ந்து உரையாதவலிகளையும் ஆய்ந்துபார்த்து புனையானதைப் பலஉணர்வாய்செய்து புகலாதபாதைகளை செவ்வைதேரி குணமாகச் சொன்னவகையல்லால் வேறுகுறிதலத்தில் அடிகாயம் கொள்ளுமாகில் சினமான இருவழியும் ஆய்ந்துகண்டு செய்திடுநீ மருகாலம் ஜெகத்துள்ளோர்க்கு.

78. காலமதுகொண்டெழும்பும்போதுகேளு கடினமுற்றுக்கொண்டதென்றால் குணங்கள்மாறும் சீலமுடன் ஒத்தபடிகொள்ளாதென்றால்செணமாக வெகுவான குணங்கள் தோன்றும் ஆலவிஷம் ஏறுவதுபோலேகண்டால் அமர்த்தினுல்அமராதே இருந்ததென்றால் ஞாலமதிலொருபோதும் மீளாதென்று நாட்டினர் மலைமுனிவர் நகருள்ளோர்க்கே.

79. நகரானஉலகத்தில் நவிலார்சூட்சம் நன்றாகசூட்சமத்தை ஆய்ந்துதேரி சுகமான நன்மைதின்மை அறியவல்லார் சுகிர்தவரம்தனைப்பழித்த நிந்தையாறும் அகமறியாதாங்காரம்கொண்டு அம்பரத்தைக்கெணியாத அசடர்தம்மை சுகமாகஎண்ணினதால் அபத்தம்வந்துசருகாமல் அவரிடத்தில் சாரும்தானே.

80. தானேகேள் ஒருநாளும் பரத்தைக்காணுன்தன் குருயாமென்றவரை சார்ந்துநில்லான் ஊனேதானொருநாளும் உயிரும்காணுன் குவலயத்தில் யாருமெதிர் இல்லை என்பான் நானேதானென்றுசொல்லி பணம்பறிப்பான் நானிலத்தில் உள்ளவரை நெகிழ்விப்பானே.

81. உள்ளபடி நூற்று எட்டுத்தலமும் கண்டால் சாவாகும் உணர்வாகும் அத்தலங்கள் உயிருமாகும் கள்ள

முற்றால் அத்தலங்கள் பிணியாகும் களங்கமற்றால அத்தலங்கள் சுகமுமாகும்உள்ளுணர்ந்தால் அத்தலங்கள் வாசியேறல் உற்ற திறல் மயக்கம் வந்துசேரும் புள்ளடிபோல் அத்தலங்கள் கண்டபேர்கள் புகலார்கள் ஒருநாளும் புவியுள்ளோர்க்கே.

82. புகலாத தலங்களது மாத்திரைக்கு பூறுக மிஞ்சி யது கொண்டதென்றால் சுகமுறவே ஒருபோதும் மீளாதா கும் சுளியிடையின் நடுவழியே காயமேறும் அகமறியா தாங் காரம் கொண்டுபேசும் அசாத்தியமாய் முடியுமிது அறிந்து பாரே.

83. முடிவான அத்தலங்கள் எல்லாம் வேறே முன் பின்னும் முறிவீடு சதவு வெட்டு அடியான குத்துடனே மொழிவிட்டேகல் அசைவற்றல் சவ்வற்றல் ஆர்கைதெற்றல் வெளிகாயம் உள்ளுடைவு மொளிசெருயல் வேறுபட்டுப் பல விதமாய் நின்று கொள்ளல் இடையிங்கலே சுளி மூன்றின் வழியாய் ஏறி இடைநரப்பு சுளுக்கல்கொண்டு நின்று கொள்ளல்.

84. கொள்ளவே இதுமுதலாய் பலம் கைக்கும் குண மான பரமகுருவினருளை வேண்டி மெள்ளவே கொண்டுற்ற விதங்களாய்ந்து வெகுளியற்று மனக்கண்ணை திறந்துகொண்டு பள்ளமே யதிலிறங்கி ஏறிப்பார்த்தால் பருவமாய் முன்பின் னும் பாதை நீக்கி விள்ளாத பாதைவழி ஏகிமீழ்க மிதமான அவயவத்தின் வாறு காணே.

85. வாறுகண்டு புணைதாக்கி கெட்டும் வைப்பும் வகை யான அகற்றலொடு நெடுக்கல் கொண்டு ஈரு மூதல் நடுவான இடங்கள் கண்டும் இடமில்லா தலங்களிலே புணைகள் கண்டும் தேறுதலாய் மனக்கண்ணை திறந்துகொண்டு தேறுக வந்து தென்றால் மாறிக்கொண்டும் கூருகளின் வகை கண்டு செய்து நின்றால் குணமாகக்காணுமது குருவினாணை.

86. குருவான பரமகுருவினருளினாலே குறைவர்மம் செய்தவரை சென்று கண்டால் கருவான குணம் காணும்

இளக்கமானல் காணவே மட்டாகக்கொண்டதென்ருல் வெருவீாமல் இளக்கமாம் குறிகள் தானும் வேற்றுமையாய் மாத்திரைக்கு மிஞ்சிக்கொண்டால் பொருளாகக் குறிகளெல்லாம் பேதமாகி பேதமது வேகமதாய் வாரிக்கொள்ளும்.

87. கொள்ளுமே அத்தலங்கள் முறிவுகொள்ளல் குணங்களற்று அவகுரிகள் காணும்பாரு விள்ளுமே தூர்க்குறிகள் மிஞ்சிக்கொண்டால் விதமாக அசாத்தியமென்றறிந்து நீங்கு கள்ளமாய் குறிகளது மிரட்டாய் கண்டால் கடரும் நாளித்தனே என்றவதிசொல்லு தெள்ளுகின்ற வழியறிந்து பாகம் செய்தால் சினத்துடனே அபத்தம் வந்தணுகாதென்றே.

88. என்றிடவே வாசியதிலுற்றுக்கொள்ளில் இதமாகும் காலமது தண்ணீரானல் சென்றிடவே வாதமதில் கடினம் முப்பத்தாறும் திங்களதி வன்னியதிலுற்றுக்கொள்ளும். கொன்றிடவே காற்ருேடு தீயுங்கூடி கொதிப்பாகும் சிலேற்பனமது மிச்சங்கேளே.

89. மிஞ்சுமே புனல் தீயும் காற்றும்கூடி முளிப்பான சுளிமுனையில் வினைதான் கொண்டால் தஞ்சமில்லை ஒரு நாளும் மீளாதப்பா. சாற்றுகின்ற காலமது வன்னி என்ருல் அஞ்சலென்ற மூவிரண்டு ஆருண்டுக்குள் துரிசமாய் சேர்ந்து விசைகொள்ளும்பாரு அஞ்சலுற்ற காலமது வாசியானல் அதனலே மூவாண்டுக்குள்ளே சாவாம்.

90. சாகாமல் மிஞ்சிடாமல் கொண்டதென்ருல் சமர்த்தாக இருந்தமுறை சரியாய்க் காணும் பூவாகி யிருந்ததாலே புகலுவாயொன்றரை என்றறிந்துபாரு மேவாமல் அதிகமுற்ருல் அரையரைக்கால் மேதினியோர்க்கிந்த முறை மெய்யாம் பாரு. ஆவலது மிஞ்சியந்த வழியறிந்து அன்புடனே கூடியது மட்டும்பாரே.

91. பாரேநீ அக்கினியிலுற்றுக்கொள்ளில் பதிவான காலவது தண்ணீரானல்சேரேநீ மூவாறு திங்கள்சென்ருல்

சினமாக அக்கினியிலூற்றுக்கொண்டுபோமேநீ வாசியினால் கூடிப்புக்கி வழுமான மும்மூன்றுதிங்களிற்சென்றால் கூமேநீ மூப்பொருளு மொன்றுமாகும் கூடியேகொள்ளுமொரு திங்கட்குள்ளே.

92. உள்ளான தண்ணீரில் உகந்துகொண்டால் உடனக்கினி தண்ணீர் கலந்துபுக்கிவிள்ளாதே பரிசமது நோய்க்குள்ளாகி வெளியுருளில் ஒருபோதும்சுகமுறாமல் கொள்ளாத நோய்களெல்லாம் உடனேகொண்டு கெடிதிப்பாகி உயிருடலை நீங்கும்பாரு கள்ளமுற்றுக்கொண்டுமுன்னே அபிஷேகித்து காலமது நீக்கும்வகை கருதிப்பாரே.

93. கருதுகின்ற வாசியக்கினியைச்சேர்ந்து கலந்துறைந்து மூலக்குண்டலியினுள்ளே வெருவிநின்ற தண்ணீருமிறைகோணத்தில் வீற்றிருக்கும் சந்திரபுஷ்கரணிக்குள்ளே அருமையென்ற ஆச்ரயம் கருவுமாகி அடர்ந்திருக்கும் சதாசிவத்தின் மகிழுண்மணிக்குள் உருகிநின்ற வாசியின்வீடறு கோணத்தில்உற்றதொரு அக்கினிமுக்கோணத்தில்தானே.

94. வாதபித்தசிலேற்பனகாலம் அமிர்தபுஷ்கரணிக்குமேலத்தானம் அளிமுனையில் சந்திரபுஷ்கரணிகீழாய் அத்தானம் குண்டலி முப்பத்திமூன்றுவயதும் முப்பத்திமூன்றுமாதமும் சேத்துமகாலம் முப்பத்திநாலுக்குமேல் அறுபத்திநாலுவயதும் எட்டுமாதமும் பித்தகாலம் அறுபத்திஆறுவயதுமுதல் நூறுவயதுவரையும் வாதகாலம் என்றறியவும் கலைகள்சுடர் அக்கினிஅண்டம் பூமிபரப்பிரம்மம் சத்திசிவம் அக்கினி ஈறான கலைகள்நாலு கலைசிக்கலை போக்குவரவு அக்கினிச்சுடர் கலைநாலு.

95. மனதியங்கிப் புக்கினதால் படுவர்மமென்றும் அறிந்துகொள்கதாமப்பா திலர்தகாதைத்தின்நேரே தவறுது சுற்றமிர்தப் பொருத்துக்குள்ளே நாணப்பா ஓடிமுறிவு வெட்டுகுத்து நன்றாகக்கொண்டதனால் மூர்ச்சையானால் ஊணப்பா மூன்றுடனே ஐந்து ஏழு ஒன்பது மூவாறுடனே முப்பத்தாறும் எனப்பா எண்ணைஞ்சோடொன்றுமாகும் ஏற்றமருந்தவுஷதமாம் தொண்ணூறுநாளே.

96. நாளிகேகாயம்வரும் மாண்டுபோவான் நல்காயம் எழும்புவதும் மூலாலே தாளாமல் வாய்வெழும்பி பித்தம் சுண்டி கண்ணீர்தான் இடைபின்னி சுளியிலேகி பாழான் விஷம்போலே பறந்துபொங்கி பிரயாசம்போல் வேர்வைகபம் மூர்ச்சையாகி தோஷம்மிகும் மரணம்வரும்மூலமுலே தொடர்ந்துவந்த காயத்தின் வகையிதாமே.

97. தாமென்றஉந்தி பெருங்குடலைப்பற்று தயவான ஓட்டீரல் ஒன்றுகாணும் நாமென்றமண்ணை நாக்கென்றும் சொல்வார் நன்றானபுரிவதிலே கொண்டிட்டாலும் சாமென்ற மூதண்டம் நெருங்கினாலும் சடுதியாய் பிடரிநரம்பற்றிட்டாலும் நாமென்றுசெய்யாசே அன்றுநில்லு நமன்வருவானென்று சொல்லிநாட்டினோமே.

98 நாட்டினோம் இன்னமொரு பெருமைகேளு நல்லதொருமூங்கில்வட்டம் பின்பக்கத்தில் சூட்டிவைத்த மூனெலும்பு என்றுபேராம் தொல்லையாய் பிளந்துதாள் நொருங்குண்டாகி ஆட்டிவைத்தகுண்டலிதான்சுண்டுமாகில் அப்போது மரணம்வரும் சுண்டதாகும் நாட்டினில் மரணமில்லை சிகிச்சித்தாலும் நாதனாலுமே இந்தஇடம் தீராதே.

99. முடத்தினால் கால்களது சுண்டிவாடி முக்கியமாய் அரையின்கீழ் பெலமில்லாமல் இடமதிலே கிடப்பாச்சு என்னசொல்வேன் எப்போதும் பேதிஜலம் அறியாதோடும் அடவரியார் தடவுமுறைசெய்வாராகில் அதினாலே ஜீவனது போனாலும்பேசும் நடனமிடும் வாசிநிலையாய்ந்துசெய்தால் நலமரணதோஷமுனக்காகாதென்றே.

100. என்றதொரு பஞ்சவர்ணக்குளிகை நெருங்கி ஈரலென்றகூம்பற்று இரங்கிப்போனாலும் நன்றெனவே எழுந்திருப்பான் தன்சாரத்தால் நடுநடுங்கி பித்தனைப்போல் பிரமைபேசும் கன்றிடவே வர்மமில்லைஎன்றும் சொல்வார் காயமென்ற சன்னியதின்கோட்டிஎன்பார் கொன்றிடவே

நாழிகைதான் மூன்றேமுக்கால் குருவருளாலிந்தமுறை கூறினேனே.

101. கூறுகிறேன் மார்பிலிருவிரலின்கீழே கொடிய தொருமுறிவாகி அப்பைதாழ்ந்தால் மாறாமல்முறிவழியே விசைதான்போகும் வலுவற்றுக் குன்றந்தாலும் மரணமாகும் கூறவே சிவன் உமைக்குச்சொன்னவார்த்தை செந்தில்வடி வேலவரும் எனக்குச் சொன்னார் ஆறுமப்பாயானறிந்து இந்நூல்சொன்னேன் அரனருளால் இன்னமொன்று வகுத்து வேனே.

102. வகுத்துகிறேன் முச்சதுரப்பலகைமூலம் வரி யாக அடுக்கிவைத்த முதலாம்கண்டம் கொழுத்துடனே பிரண்டதுதான் முறிவிட்டாலும் கோணநெட்டெலும்பின் நடுப்பூட்டப்பா பூழுதரவேவிலகியதும் பிரண்டிட்டாலும் பதினாறுமதுண்டெல்லுவிலகினாலும் விழியதனால்காணாது ஆய்ந்துபாரு வெல்லாதுஎன்றுகண்டால் விலகிநில்லே.

103. நில்லென்றபுறவரியின் கூடம்மெலும்பின்கீழ் நேர்த்தியாய் இருபுறமும் பித்தக்காய்தான் விலகாமல் பதிவாகஇருக்கும்பாரு வில்லென்ற வில்பூட்டின்பக்கம்தன் னில் வேந்தனேபித்துக்காய்என்றும் சொல்வார் மல்லென்ற அடியிடிகள் அதிலேகொண்டால் பீசவிரைமூளித்தாப்போல் விலகிப்போகும் வில்லென்ற வில்போலே கூனிப்போகும் விசனமொடு குருக்குளேவுதன்சாரம்காணும்.

104. காணுமே மூன்றின்மேல் ஜன்னிதோன்றும் கடிமையாய்கொண்டதென்றால் மரணமாகும் தோணவே தடவிவிடு மெதுவானால் சுருங்கானபருத்திச்சார் உள்ளே தாக்கு பூணுவாய்காய ராஜாங்கனண்ணை புகழாகக்கொடுத் துடனே மேலும்பூசே ஆணமொய்தடவிவிடு மெள்ளமெள்ள அடங்கலிலே பிடித்திடவே அமரும்தானே.

105 அமருமந்த தலங்களிலே முறிவுகொண்டு அப்பனே காயமதுமிஞ்சினக்கால் இமாவே சிகிச்சையினால் மாறிநிற்கும் இல்லையென்றுபத்தியத்தை இகழ்வாராகில்

தமரகமாய் அடங்கிநின்ற சனிவேகம் தானெழும்பி மூர்ச்சை வரும் மூவாண்டுக்கும் நமனைவெல்ல மருந்துண்டோ நாட்டுக்குள்ளே நாதாக்களுரைதெளிந்து துறைசொன்னோமே.

106. துறையான பெருவிரலில் கவளிக்குள்ளே சூட்சமாய்காலமதில் குறிவுகுத்து அகத்தோடே மறுபுறத்தில் சாடுமானால் அப்போது மரணமது வருமாகில் லெகுவாய் புண்ணுறி புரையுந்தீரும் எப்படியும் மூன்றின்மேல் சுரமும் காணும் துறையுடனே ஐந்தேழில் ஜன்னிவந்து சட்டெனவே மரணமது கடந்திடாதே.

107. கடந்ததொருதானமடா லாடமையம் கதிர்மதியாம் பிரகாசவட்டத்துள்ளே அடர்ந்திட்டநாதவிந்து அடங்கும்வீடு ஆறானமாளிகைக்கும் மேலாம்வீடு பகர்ந்திட்ட தத்துவங்களொடுங்கும்வீடு பாரமென்ற பிரமாண்டம் ஆதிவீடு துரந்திட்ட ஓங்காரமுற்றவீடு சூட்சமென்ற பிறணயம் இருந்தவீடே

108 வீடானதலமதுதான் நொறுங்குமாகில் விசையாலே ஆடுகின்ற பொறிகளெல்லாம் மூடோடேஇடிந்து விழும் பஞ்சகர்த்தாள்மூலமாய் நின்றதொரு பிராணவாய்வு ஆடிநின்றபாவை சூத்திரர்போலே அசைகின்ற வசைகளெல்லாம் அடங்கும்பாரு கூடிநின்ற ராஜாக்கள்மூவரோடு குடிவிட்டுப்போகுமென்று பகர்ந்தவாறே..

109. பகர்ந்திட்டகாமதிலே கொண்டைமத்தி பண்புடனே மையமது ஒடியுமாகில் தகையாகமாழமடா செய்ய வேண்டாம் தலம்விலகி முறியுமென்றால் சற்றேகேளு முகிழ்ந்திடவே சன்னிவந்து அணுகாவண்ணம் மூந்திநீ தைலமதை உள்ளேதாக்கு கெதியாகத் தைலத்தைப் போட்டுக் கிருபையுடன் கெட்டுகிற விபரங்கேளு.

110. கேளுநீ எலும்பதனை சரியாய்வைத்து கெட்டியாம்துணியதனை சுற்றிக்கொண்டு ஆழவே தைலமதைப் போட்டுக்கொண்டு அதின்மேலே அலகுவைத்துப் பதியக்

கட்டுநீரூநீ பஞ்சுவைக்துத் தைலம்போடு நிமிருமலண்டை யிட்டுப்படுக்கச்சொல்லிப் பாருநீ பத்தியத்தை விட்டிடாதே பதிந்தாலும் அவதியுண்டு பார்த்துக்கொள்ளே.

111. பார்த்திடுவாய் பன்னிரெண்டில் பிரித்துப்பாரு பதிந்ததலம் புண்ணுனல் அலைகையாற்று சேர்த்திடுவாய் துணியதனுல் சுற்றிக்கட்டி திடமாகமுன்னைதலம் தாரை தாக்கு கோர்த்துவரும் முன்போலேஎலும்புசேரும் குண மாகும் புண்ணு நும் புகையுந்தீரும் ஆர்த்துவிதம் இப்படியே ஆழ்ந்துசெய்தால் அசடில்லையென்றுசொல்லி அறிந்திட் டோமே.

112. சொல்லுவோம்புறந்தலைகேசம்பற்றிதொகுத்து வைத்த பிடரியென்றநரைகைக்குள்ளே நல்லெனவே முறிந் தாலும்பொறுக்கும்மூன்றில் நாலைந்தில் குளிர்ஜுரமுண்டா கும் மெல்லெனவே மேல்நோக்கி அண்ணார்ந்தேதான் விதம் மாறிமுறிந்துவிடும் கண்டம்தானும் மல்லெனவே சன்னிகபம் வேர்வைகாணும் மரணமது ஒன்பதுக்குள் வழுத்திஞேமே.

113. வழுத்துகிறேன் இடகலை சூரியனுகும் மாறிவந்த பின்கலை சந்திரனுகும் அழுத்துகிறேன் குண்டலியே வாசி மூலம் அண்டசராசரங்களெல்லாம் அடங்கியோடும் பழுது டனே மாறிவரும் நொடிக்குள்ளேதான் பதிப்பக்கி எழும்பி விடும் முன்னும் பின்னும் வழுத்துரவே சுளிமுனையின் வழியே போக வாணிருந்த தலம்சேர பாத்திலேரே.

114. பரமறிந்தான் சாமறிந்தான் பாசமற்றுன் பற் றுன பகையற்றுன் பலத்தை விட்டான் உருவறிந்தான் ஐவ ருட கூறுங்கண்டான் உடலறிந்தான் உளவறிந்தான் உண்மை கண்டான் கருவறிந்தான் நிருவி என்றகமலம் கண்டான்கதிர் மதியும் ஒடுங்கி நின்றதலமுங்கண்டான் கரையறிந்து துறை யறிந்துகண்டபேர்கள் காசியினில் அவர்பெரிய ஞானிகாணே.

115. காணயிலே இளிநடுவில் உருளேப்பூட்டு கட்டு விட்டுவிலகியது விலகுமானல் தோணவேஎடுத்திருத்திப்

பிடிக்கச்சொல்லி துடைகால்பெருவிரல் இரண்டும்வைத்து வேணுமே சவட்டியந்தக்குண்டில்தாக்கி விலகாமல் பந்ததனை இருத்திவைத்து சாணகலம் பலகையதை மேலேவைத்துச் சட்டகம்போல் கச்சைசுற்றி நெருக்கிக்கூட்டே.

116. கட்டுவாய் முன்போலே துண்டிரெண்டுக்குங் களராமல் கணுக்காலும் அதுபோலப்பா முட்டாமல்வச வெண்ணெ தாரைபோட்டு முப்பதிலேபிரித்துநீ மிதிக்கச் சொல்லு விட்டுவிடுநொந்ததென்றால் எண்ணெபோடு விசனமாய்கொழுத்திவிடில் தடவத்தீரும் தொட்டுத்தான் காட்டுவதுபோலே சொன்னேன் தொல்லென்று நினையாதே துணிந்துசொல்லே.

117. செய்யடா அமுதநிலைதலம் மூவைந்தும் தெளிவாகச்சொல்லுகிறேன் தெளிந்துகேளு, ஐயடாஇத்தலமும் வருமத்தானம் அமிர்தநிலை அறிந்தவனே ஆசான் ஆசான் எய்யடாவளர்பிறையில் இடமாய்ஏறும் இறங்குவது தேய்பிறையில் வலப்புரமேயாகும் கையடா சரநிலையேகலையின் தானம் மைந்தனேசொல்லுகிறேன் வகுத்துக்கேளே.

118. வகுத்தபெருவிரலுடனே பிறதாரைக்கும் மைந்தனே பரடுமணிமுளந்தாள்குய்யம் தொகுத்திட்ட உந்தி தொப்புள் முலை கைமூலம் துடர்கழுத்து வாயுடனே கபாலம் கண்ணும் மிதித்திட்டலாடம் உச்சிதலமூவைந்தும் வேந்தனே சாமிசையும் அமிர்தஸ்தானம் பதித்திட்ட இத்தலமே அதிகம்மிஞ்சி பாடாக முறிவதிகம்கொள்ளுமாகில்.

119. கொள்ளையிலேசரம்பிசகி வேர்வைதோன்றி கொதிப்பானஅனல்மீறி கபம்உண்டாகி விள்ளயிலே காயச் சன்னிவந்துமாழும் வேந்தனே இக்குணம்தான் இல்லாவிட்டால் மெல்லவேஉள்ளுக்கு காயருஜாங்கம் விபரமாய் முறிவதிலேபஞ்சுவைத்து கொள்ளவே முறிவெண்ணெ தாரையிட்டு கூசாமல்பத்தியம்பார் குணமாய்போமே.

120. குணமாச்சுதென்றுநீ மறந்திடாதே கொற்றவனே அவதிதொண்ணுற்றுதாகும் நினைவாச்சுகைதனிக்

கொண்டையின்மேல் நிஜமாய் புஜத்தி ிருவிரலிலேதான் விளையாச்சு ஒடிந்தசூட்சம்பிரகே சாடி விக்கிநின்றால் மரணி மதி மூன்றுக்குள்ளே தனிவாச்சு அடப்பனென்றகாலம் பற்றி சடுதியிலே முறிந்தாலும் மாழும்பாரே.

121. பாரப்பா படங்காலினை நடுவுதள்ளி பதியவே ஒடிந்ததென்றால் சொல்லக்கேளு ஏறப்பா இத்தலத்தில் வருமம்தானும் இல்லையென்று சொல்லாதே கடிமையாகும் சாரப்பா சன்னி சுரம் வேர்வை காணும் தவறாமல் ஒருவேளை வந்துகூடும் தாரப்பா அது முன்னே தருண் றஜாங்கம் கருத் தாகக் கொடுத்து மத்திப்பைப்போடே.

122. மத்திப்பு வைத்து முன் கட்டச்சொல்லேன் மரத்திலே மொளிபோலே செய்து காலை பத்தியமாய் வளை யதிலே பதியவைத்து பற்றிட்டுப் புறங்காலில் அலவை யொட்டி சத்தியமாய் கச்சை சொண்டிருக்கிக் கட்டி தயவாக விரலிடையில் பஞ்சுசேர்த்து சற்றும்மே தவராமல் வச வெண்ணை போட்டு கார்பாகஐயெட்டில் அவிழ்த்துப்பின்னே.

123. பின்னே நீ மெதுவாக நடக்கச்சொல்லி பிடி யிருந்தால் தடவி முன் தைலம் போடு தன்னமே தோண் ணூறுநாள் சென்றக்கால் தரைதனிலே மிதித்திடலாம் உரைத்துப்போகும் இந்நாளும் பத்தியத்தை விட்டிடாதே இன்னமொன்று சொல்லுகிறேன் இதமாய் கேளு அப்பனே முளங்காலில் மத்தி நீக்கி அப்பனே இருபுறத்திலெது வானாலும்.

124. ஆனாலும் எதுவிதத்தில் ஒடிந்திட்டாலும் அப் போது எடுத்து முன்போல் இதமாய் வைத்து தானாக முனை யதை தள்ளியேதான் சார்வாக பஞ்சுவைத்து சரியாய் கட்டி ஊனமில்லா முரிவெண்ணை காரைபோட்டு உரைப்பான அடையதிலே படுக்கச்சொல்லு வானாக அவிழ்ந்து நாற்பதில் தானும் வசவெண்ணை அதின்மேலே போடு போடே.

125. துடைமுறிவு அதன் பிறகு உரைத்துவிடும் உரையாதாகில் தொண்ணூறு சென்ற பின்பு மிதித்து முன்

போல் நடந்திடலாம் முடமும் தீரும் விபரமாய் சொல்லி விட்டோம் வெளியாயப்பா பதிவாக துடை முறிந்தால் கெட்டு முன்போல் பரமகுருபாதமதை மறவாதே நீ சித்தி யொருநாள் வாராது சாகுமட்டும் சாஸ்திரத்தில் சொல்லி விட்டேன் சட்டம்தானே.

126. சட்டமென்ற துடைமேலே இளியின் பூட்டில் தாங்கிநின்ற உருளைபெரும் செப்புரெண்டும் விட்டுமே விலகி யது நகண்டு போனால் மேவிமுடம் தீர்வதற்கு வருத்தமாகும் இட்டமாய் சட்டுதற்கு விபரம் சொல்வேன் எடுத்திருத்தி இருகாலும் இழுக்கச்சொல்லி திட்டமாய் காலினுள் தலத்தை தட்டி சேரவே மிதித்து முன்போல் குண்டில் தாக்கே.

127. முன்போலே குண்டதிலே அணைத்துவிட்டு உரைப்பதற்கு விலகாமல் வைத்துப் பின்கேள் அன்பாக பலகையது முன்கை நீளம் அதுபோலே ஒரு பலகை குறுக்கேகட்டி இன்பமாய் மூலம் நேர்வரியின் நேரே இதமாக ஒட்டிவைத்துக் கட்டக்கேளு அன்பாக குறுக்கே வைத்த பலகை சொச்சம் வளர்கச்சை சுற்றியிடம் சந்தினூடே.

128. சந்தோடே மாற்றி மறுவலது சொச்சம்தான் சுற்று வலதுகால் சந்துமாறி பந்துரெண்டும் இருபுறமும் கச்சைக்குள்ளே பதியவே தாக்கிவிட்டு இன்னும் கெட்டு இந்த விதம் கத்தரிக்கோல் போலே கட்டி இதம் பதமாய் பீசவிதை நசுங்காவிண்ணம் இருதுடையும் சேரக்கட்டி துவாரமலப்பையரத்தை தைலமிடவும் தப்பாதே.

129. தப்பாமல் வேசவெண்ணை இன்னும் போடு தைல மது போட்டுப்பார் தொண்ணூறு மட்டும் கைப்பாகம் கைத் தடி பிடித்து நிற்கச்சொல்லி கால்தூக்கி மெதுவாக நடத்திப் பாரு செய்யப்பா மண்டலம்தான் அரைசென்றுக்கால் மெது வாக கெட்டதனைப் பிரித்துப்போடு.

130. ஜெயமாக இன்னமொரு முறிவுகேளு செப்பு வேன் புஷ்பாதி நடு ஒடிந்தால் தயவாக ஒடி முறிவுகொண்டு மாகில் சடுதியிலே இடிவிழுந்தாற்போலே மாள்வார் மயமாக

இத்தலம் விட்டகல நீங்கி மாறியே எலும்பொடிந்து உள்ளே தாழ்ந்தால் ஜெயமாக கடினமடா முன்போலாக்க சூஸ்திரமாய் அட்டதனை சுருக்காய் சொல்வேன்.

**131.** சுருக்காக முதுகின்பின் இருகைவாங்கி துணிந்து தான் கள்ளர்களை கட்டல்போலே முதுக்குவாய் இருகையும் முட்டின்மேலே இதமாக கச்சையினால் இருக்கும்போது முறித் துடனே தாழ்ந்ததொரு எலும்புதானும் முன்போலே ஆகு மடா முனைந்துபாரு மருத்து முன்போல் தாளாமல் கட்டச் சொல்வேன் வரிவரியாய் முட்டதனில் துணியை சுற்றே.

**132.** சுற்றியே பந்ததனை குழியில் வைத்து சூஸ்திர மாய் பூரத்தினால் பிறைபோல் செய்து பற்றவே பந்தின்மேல் இருத்திவைத்து பதியவே இருதலையும் சரடுபோட்டி மற்ற தொரு புரத்தாக்கி கட்டிக்கொண்டு வசவெண்ணை தொண் ணூறு நாளும்போட சற்றுமே பிசகாது முன்போலாகும் சாதனமாய் சொல்லிவிட்டேன் சமர்த்தாய் செய்யே.

**133.** சமர்த்தாக முன்சொன்ன ஸ்தலங்கள் தானும் சட்டெனவே ஒடிந்து புறம் தள்ளிப்போனால் நிமிர்த்து முன் போலாக்கியதை கட்டச்சொல்வேன் நிறப்பாக எலும்பதனை பிடித்துத் தாழ்த்து அமர்த்திடவே பந்ததனை மேலே வைத்து அடவாக ஒடெடுத்து துணியைச் சுற்றி கமத்துவாய் பந்ததனை மேலிருத்திவைத்து கச்சைகொண்டு மாருப்புக் கட்டிப்போடே.

**134.** மருப்புக் கட்டி வசவெண்ணைபோடுமண்ட லமே கழிந்தபின் அவிழ்த்துப்பார்த்தால் சீராகவூரி வரும் ஊராதாகில் செலுத்துவாய் வசவெண்ணை திங்கள் மூன்று வேமுடி உரைத்ததுபோல் நிறப்பாய் பேர்கும். வெளி யாகச் சொன்னேன் நான் விபரமாக கூர்மையுடன் குருபரனை வணங்கிச் செய்தால் குணக்கேடு வாராது குருவினாணை.

**135.** குருவருளாலின்னமும் தான் நர்சிதன்னில் கூர்ந்து நடுமுறிவதிலே கொள்ளுமாகில் பெருக்வே மயக்கம் வரும் வேர் வைதோன்றும் பிறகெழுந்து முன்சுகம் போலாவான் கண்டாய்

வருகவே வார்த்தையுது சிணுங்கிப் பேசும் வன்சுரங்களஞ்சில் வரும் சன்னிதோன்றும் இருமலொடு வாந்தி சத்திவலி யுண்டாகும் இதம்வராதெப்படியும் மரணம்தானே.

**136.** தானனதருண ராஜாங்க எண்ணே தவறாமல் சொல்லுகிறேன் தயவாய் கேளு பானன நீரொட்டி பரங்கி மாவின்பட்டையுடன் வேங்கை மரக்காதல் தானும் தானன்று நன்றிகிழங்கு முத்தம் கருங்குருஞ்சி நிலவாகை அவுறிவேராம் கானன கருங்காலி சின்னிவேரும் நன்றான கருநொச்சி ஆடா தோடை.

**137.** தோடையடா கெருடனுட கொடியின்வேரும் தொகுப்பான வேலி என்ற பருத்திவேரும் வாடையடா வெண் நொச்சிநிம்பன்பட்டைவகையான பசுவசம்பு கொளிஞ்சிவேரும் சாடையடா தும்பைரெண்டு மிளகுதாளிசரியான வெள்ளருகு கிராந்தியொடு பீடையடாதில்லை பெருமரத்தின் பட்டை பிரி வான குண்டலத்தின் இலையும் வேரே.

**138.** இலையுடனே அடபொதியன் வில்வப்பட்டை எதிரான நரும்பாசி இலையும் வேரும் விலையுடனே மூவிலை தேசாரின் வேரும் வெற்றிசங்கு தூதுவளை செந்தட்டிவேரும் வரி என்ற கன்னிநரி இலந்தைவேரும் வகையான புல்லா மணக்கும் சலே என்ற ஆடுதீண்டாப்பாளைவேரும் சரியான கடலாடிவேரும் கூடே.

**139.** கூட்ட நீ கர்ப்பூரவள்ளிவேரும் கொடுவேலி கிழங்கு மாவிலங்கின்பட்டை நீட்டே நீ அளிஞ்சியுடன் தொட்டால்வாடி நிலப்பனையும் சிவனார்தன் வேம்புமாகும் மூட்டே நீ சதாவேரி வஜ்ரவல்லி முககியமாய் சவுந்தரவல்லிவேரும் ஆக்கே நீ காக்கலம்வேர் கருஞ்சுண்டைவேர் அப்பனே சடைக் கஞ்சா கருவிலாஞ்சே.

**140.** கருவானிலுள்ளியுடன் காட்டுமாறன் கதிப்பான நிரவும் காட்டுச்சேனை தருவான வஞ்டாளை முசருமுட்டை தானன மருடம் பொரி காஞ்சுரைவேர் குருவான இவைகளை

வகையொன்று பலமிரெண்டாகக் கூர்ந்தெடுத்து சதைவு செய்து வெருளாமல் இரண்டு பதக்கிளநீர் விட்டு.

**141.** வெந்தெடுத்து ஐநாளியாக வாங்கே வாங்குவாய் மறுபண்டம் தன்னில் சேர்த்து வைத்தபின்பு கஷாயமொன்று இன்னங்கேளு பாங்குபெறும் கம்பிளியும் குரங்குமண்டை தாங்குபெரும் பூஞ்சிறு வலியானோடு தனியாந்தை கருவாலி பூநாகம் கேளே.

**142.** கேளப்பா வேங்கை ஒட்டகக்குளம்பு கெடிகடுவாயதின் குளம்பு பூனைமண்டை ஆளப்பா பரிகரியின் குளம்பு நீர் நாயதின் மண்டை நலமான கெருடனுட தலையாகும் பாரு வேளப்பா கழுதைவண்டு குளவட்டை நாரை வெண்டலையோடாமை ஓடு வகைக்கு இரண்டே.

**143.** இரண்டுபலமாக இதை சதைவுசெய்து இருபதக் கமுரிவிட்டுக் காச்சிவாங்கி கொண்டிடுவாய் நாளியால் இருத்து குணமான முன் கஷாயத்தோடே சேர்த்து உண்டாக்கும் சரக்குவகை பால்பழங்கள் உரப்பாக வைப்புவகை சொல்லக் கேளு பண்டான வெப்புக் காஞ்சுரை பூலாத்தி பகருகின்ற இலுமிச்சம் பழத்தின் சாரே.

**144.** சரகமடாபாளை வள்ளிக்கிழங்கின் சாகம் சரியான செம்மரியின் கிழங்கின் சாகம் வகையான செம்மரியின் கிழங்கின் சாகம் வகையான சம்பா வெற்றிலையின் சாகம் ஆகுமடா ஆடுதின்னாப்பாளைச் சாகம் அடர்காணம் காணி சித்ரமூலச் சாகம் வாகுபெரும்பாலச்சார் துவரைச்சாகம் தாகமற தும்பை ரெண்டும் குப்பைமேனி தைவளை வேலி என்ற பருத்தித் தோடை.

**145.** தோடையடா வஜ்ரவல்லி நொச்சிச்சாகம் துவள் நவரை கருங்குரிஞ்சி கஞ்சாசாகம் வாடையடா புகையிலைச்சார் கும்மட்டிச்சாகம் வகையான ஆதளம் சார் கருவேப்பின் சார் மீடைவண்டு தீண்டமரத்தோலின் சாகம் மெய்குரிஞ்சி

இரண்டு பெருதலை கொளுஞ்சி சாடையதாம் வசம்பு மஞ்சள் மூடில்லாத்தாளி ச.ாவேலி கார்திகையும் முதப்பனுகும்.

146. ஆகுகிறந்தி மரக்கொடி மாறுவும் அடர் நாகல் பழத்தோடே ஆட்டின் பாலும் வாகுபெற கழுதைப் பால் குதிரைப்பாலும் விளர் முலைப்பால் சாராயம் தென்னங் கள்ளும் வேகமுடன் வகைக்கு ஒருபடியுமாகும் விட்டொக்க முன் பாண்டத்திட்டுக் காச்சி சேகரமாய் ஐந்திலொன்றாய் காயும்போது சேரு வெளிச்சி வேம்பு விளாம் பிசினே.

147. விளாம் பிசினும் பரங்கிதில்லை இலவம்பிசினும் வெள்ளைக்குந்திரிக்கம் கரியபோளம் கொம்பரக்கு சாம்பிராணி சதகுப்பை ஆதாளிச்சாதி மூன்றும் வளம்பெறவே சித்த ரத்தை சிறியதேக்கி வகைக்கு ஒருபலம் கூட்டி இடித்தரைத்து குளம்பரவே நீரொட்டி சென்னை புன்னை குயிலும் மயிலும் மலம்பாம்பு புங்குமாமே.

148. புங்குடனே மலம்பன்றி வெள்ளாட்டு நெய் போமிலுப்பை நிம்பெண்ணை பதினொன்றுகும் அங்கு இவை வகைக்கு ஒருபடியும் சேர்த்து நீங்காமல் கிண்டிபதைக் காச்சும் போது நிச்சயமாய் நேர்பதினாலாயினும் பொங்கியது பாழாகப் போகாவண்ணம் புத்தியாய் காச்சிடவே புகழக்கேளு.

149. புகழக்கேள் திரிகடுகு திருமுனிவர் கஞ்சா புத்தி புரும் காரமஞ்சும் மகிளம்பூ நாகணமும் அரசி ஆறும் வால் மிளகு பெருங்காயம் அரத்தை அக்கரா பகழப்புத்து ஏல முடன் சதகுப்பை பஞ்சவனும் கூடன் குரோசானி மஞ்சள் உள்ளி துகலதுத்தம் கிரிசாத்து சேங்கொட்டை கெந்தம் துருசு மனோசிலை காந்தம் வேம்பாடல்தானே.

150. வேம்பாடம்பட்டை நரும்பிசினும்மாஞ்சிவிடையம் கஸ்தூரிமஞ்சள் கரியசீரம் கொம்பரக்குமுந்திரிகைப்பழம் காயம் குந்திரிக்கம் கடல்தேங்காய் சமுத்திராப்பழம் வரம்பாத பெருஞ்சீரம் கடகசிங்கி வாலுளுவை அதிமதுரம் சிவதை தேக்கு சாம்பிராணி கடுகுசந்தம் பூலாவிருட்சம் சண்பகப்பூ மல்லிகைமொக்கமுக்கூரம்தானே.

151. தானேகேள் குக்கில்கல்மதம் கல்லுடையும் மச்சம் குங்குமப்பூ இருவிகாமேதை மீரைதேர வெட்டிவேர் கோரோசனை கஸ்தூரிசிறப்பாக வகைக்கு இருகளஞ்சாய்கூட்டி வாரமுடன் கம்பியிழும்பருவம்பார்த்து வடித்ததனை குப்பி தனில் வைத்துக்கொண்டு சிரதுவாய்தைலம் பிரயோகம்செய் தால் தீராதமுறிகாயம் திரும்காணே.

152. காணநீஅத்தைலம் பொரிதலங்கள் கண்டமுடம் அசைவுறிக்கெல்லாமிட்டால் வினைபோமென்றதனை எண் ணிடாதே விளையாட்டுப்போக்கென்றும் நினைத்திடாதே பூணே உன் கருமவினைஎல்லாம் தீரும் புகலாதே அடவுமுறை வெளி விடாதே ஆணைநானென்றுசொல்லித் தைலமிதை ஆறபோதுட் கொள்ள சன்னிபோச்சே.

153. சன்னிகபம் விக்கல்வேர்வை சாறுது ஜலமலங்கள் பழவலம்போம் அன்னிநாவரட்சை பரிதாபமூர்ச்சை அணல் பீறல் உள்குளிர்தல் அதிகம்போகும் சென்னிமுதல் சகலகாய நிலையும்போகும் செமியாமை புளித்தேப்பம் சிறங்கும்தீரும் கன்னிகைக்கு தசவாய்வு தலத்திலாகும் கலைமூன்றும் வாசிநிலை சரியாய்ப்பாயும்.

154. சரியாகும் பொருளும்தன்தலத்தில்சேரும் தத்து வங்கள் ஒத்துநிற்கும் பஞ்சகர்த்தாள் பிடிநாடிநிலைக்குள்ளே உயிராய்நின்றாய் பிராணகலைக்குருநாடி நேரேநிற்கும் துரித மாய் மூலவட்டம் பிரகாசிக்கும் துண்டமொடு கண்டவெளி அசைந்துநிற்கும் கரிமுகனும் கணபதியும் உமையும்மாதும் கண்டமதிலேரிமண்டலம் நிற்பாரே.

155. மண்டலத்தில் நாலுபொருள்நின்றிலங்கும் மறை என்ற மறைஎல்லாம் நிறைந்துகாணும் தெண்டிரையும் அண்ட பகிரண்டமெல்லாம் சேர்ந்துமேருருவங்கே பதிந்துநிற்பார் ஆறுறுதத்துவம் நிலையாய்கூன்ற பஞ்சதத்துவத்திலாடிநிற்கும் பண்டிருந்த முச்சுடரின் நிலையில்மூன்றும் பதிந்தங்கே விளை யாடித்திரியுமாமே.

**156.** திரிசவிளையாடி அகமகிழ்வாய் செயலாக அளித்தாக்கால் செய்குவாழும் அரியானும் உருவானநாதவிந்து அருஉருவாய்கருவாகி ஒருவாராகும் பதிமீதில் விளையாடும் திருப்பொருளும் பகல்கதிரோன் இந்திரன் ராவதில்நடத்தும் சரியாகபுரிநகரம் ஒருநிலையாய் சடையாமல் இக்தைலப்பிர யோகம்செய்யே.

**157.** செய்யே நீ பிரயோகம் குரநோய்முட்டம் சேர்ந்த மகோதரம் பாண்டுபீலிகையும் ஐமேபாபோம் கவுசிவலிதீரும் சோகைஆந்திரமும் சிலேற்பனங்கள் தொண்ணூற்றுறும் கைய உன் வாதபித்தம் குடல்வாதங்கள் காமாலைவீக்கமுடன் கனத்த ஈடுஉய்யப்பா நோய்களெல்லாம் மூட்டோடேதான் உன் குருவைத்தான் வணங்கிஉகந்துகேளே.

**158.** கேளப்பா காயமுஜாங்களண்ணை கெடியாய் கை பாகமதாய் வடிக்கக்கேளு வாழப்பா மருந்தினத்தின் விபர மெல்லாம் வழுத்துகிறேன் அதின்விபரம் வணங்கிக்கேளே சூளப்பா அத்தியுடன் வேம்பின்பட்டை சுகமான பனிச்சை யுடன்உதியன்பட்டை நாளப்பா சென்னையுடன் விரியன் பட்டை நலமான பரங்கிமா முருங்கைப்பட்டை.

**159.** பட்டைஎன்றமுருக்கினுடன் ஆயணியாம் பதி வான அரசிலுப்பை மருதின்பட்டை வெட்டுவாய் மாவலிங்கு இலுப்பைபட்டை விதமான கதம்பைச்சார் தேசிச்சாரும் கூட்டுவாய் எட்டியுடபழத்தின்சாரும் குணம்வேம்பு விரிய தனில் பழத்தின்சாரும் நாட்டுவாய் விளாத்தியுடபிஞ்சின் சாரும் நலமான பச்சைப் பாக்கதனின்சாரே.

**160.** சாருடனே அத்தியொடு பனிச்சைக்காயாம் சாற்றுகிறேன் தென்னம்பூ நாகல்பிஞ்சாம் வீறுடனே பூலாத்தி பேய்கும்மட்டி விதமான ஊமத்தின்காய் நீரொட்டிக்காய் கூருனகூடத்தும்பை பெரும்தும்மைச்சார் குழியானை குழி மிண்டான்பச்சிலைச்சார் சூரான அவுரிமுறி பொருந்திச்சாறு சுகமான செந்நெருஞ்சி குப்பைமேனி.

161. மேனியென்ற வெள்ளைநெருச்சி ஓடுஒடுக்கி மேலான இசங்கினிலை ஆடாதோடை மாவிளன்ற வேலையுட பருத்திச்சாரும் தைவேளைதூதுவளையின்சாரும்கூட்டி இனி என்றகற்பூர வள்ளிச்சாரும் பச்சையாம் புகையிலைச்சார் இடித்துக்கூட்டி கூனிஎன்ற வச்ரவல்லி துவரைச்சாரு குதி கருணை மாறுணிக்கிழங்குச்சாரே.

162. சாரானநிலைப்பனை செம்மரிக்கிழங்கு சதுரப் பாலை வள்ளிசதாவேரியாகும் வேறான ஆட்டின்பால் செண் பகப்பால் விதமான நல்முசுட்டைதண்டின்சாகம் பாறுன புங்கின்பால் பிறுயின்பாலும் பகர்கழுதைப்பால் நாறுங்கள்ளிச் சாரும் ஆறுனமாவின்பால் ஆவின்பாலும் அப்பனேஇருவேலி நகரையாமே.

163. ஆமென்றதில்லைப்பால் இவைவெவ்வேறு அறி வாக நாழிகொண்டு ஆகக்கூட்டி தாமென்ற அனல்மூட்டி நெருப்பைப்போட்டு தவராமல்பாதிமட்டாய் வற்றக்காய்த்தால் ஓமென்ற கழிப்பாக்கு கொம்பரக்கு உத்தமனை கரியென்ற போளமாகும் கூவென்று பாடமில்லாப் புகையிலைதான் சுக்கு நெல்லிப்பட்டை மாறுன கொண்டைமூலம்.

164. மூலமென்ற செந்திரியவேறு மதுவள்ளிமூங்கில் வேர் நாய்செவி புல்லாமணக்கு பாலமென்ற தக்காளி செறுப் படியும் பாலவேர் மழுக்கான வெள்ளருகும் வேலைஎன்ற அளிஞ்சில்வேர் அரசின்பட்டை விதமான கழிச்சிவேர் கண்டங் கத்திரி துலாமென்ற நிலவாகை வேங்கைக்காதல் சுகமான நீர்பூலா குப்பிவேரே.

165. வேரான தொடைவேர் கருஞ்சுண்டைவேர் வித மான பூலாவிருட்சம் சிறுதேக்காகும் காரான உளுந்துடனே காணமாகும் கனமான பனங்கிழங்கு உடும்பிறைச்சி சூராண நல்மிளகு ஞாயரின்வேர் சுகமான வெட்டிவேர் தாளைவேராம் கூரான பலம் வகைக்கு ஒன்று தூக்கி குணமான கால்குருணி இளநீரில் தூக்கே.

**166.** தாக்கிடுநீ தீ எரித்துப் பாதிவற்றி தயவாக கோழி பிடிபிளிந்து சேறும்போக்கியே புங்கெண்ணை மலம்பாம்பெண்ணை புகளாக நீரொட்டி எண்ணை சுகமான மலிவெண்ணை புன்னை எண்ணை பாக்கியே நிம்பெண்ணை இலுப்பையெண்ணை பதறு மல் எண்ணைவகை ஒன்பதாமே.

**167.** எண்ணையது வகைவகைக்கு நாளியாகும் இதமாக சேர்த்தபின்பு சொல்வேன் கேளு வின்னே கேள் விளாம் பிசினும் பரங்கிமாவின் வெளிச்சிப்பிசின் வேப்பன்பிசின் முருங்கைப்பிசின் கண்ணே நீ இலுப்பை புன்னை பிசினும் கூட்டி கலந்தடுப்பில் வைத்தெரித்து நாலொன்றாய் வற்றக் காய்த்தால் தவராமல் கடைமருந்து சொல்லுவேனே.

**168.** சொல்லுவேன் திரிகடுகு துருசு துத்தம் சுகமான நவச்சாரம் பூவத்தேலம் வெல்லுவேன் செவ்வுள்ளி ஓமம் காயம் விடையமிருதாரம் நெல்லிக்காய் கெந்தம் நல்லதொரு சதகுப்பை கடுகு கார்கோல் நாகணமும் கரியபோளம் இரண் டரத்தை அல்லகரு மனுசிலையும் வேம்பாடம் பட்டை அரிசி ஆறு முந்திரிகைப்பழம் தர்கோலம்.

**169.** கோலமென்ற செண்பகப்பூ கரியசீரம் கொம்பரக்கு சேங்கொட்டை வால்மிளகு தேலமென்ற குங்குமப்பூ பவளப் புற்று சடாமாஞ்சி கரும்பிசினும் மூலமென்ற குந்திரிக்கம் சாம்பிராணி முச்சாதிரசம் காந்தம் அஞ்சணைக்கல் சூலமென்ற பொன்மெழுகு சந்தம் நாகம் சோலமொடு கிரிசாத்து வசம்பு கூட்டே.

**170.** கூட்டேநீ அபின் சூடம் மேதை குக்கில் குப்பை யுடன் கஸ்தூரி உலுவாய்தானும் காட்டேநீ சிறுதேக்கு நறுக்கு மூலம் கல்மதப் பச்சைக் கற்பூரம் மீரை சூட்டேநீ வெண்காரம் நாவியாகும் சருக்கரை இருவியுடனெல்லாமொன்றாய் தூட்டே நீ வெவ்வேறு வகைவகைக்கு துள்ளிபமாய் தூக்கி எடுசொல்லக் கேளே.

171. கேளப்பா கால்பலம்தானெல்லாம் வாங்கி கிருபையுடன் பொடி பண்ணி தூவிக்காச்சி வேளையப்பா கம்பி யுட பதத்தில் வார்த்து விதமாக அரித்திருத்து வைத்துக் கொண்டு ஆளப்பா அறுமுகனைப் பூசைசெய்து அவர் பதத்தை அனுதினமும் சிரசிலேற்றி நினைவாக தைலமதைப் பதனம் பண்ணே.

172. பதமான தைலமதை தொட்டுமெள்ள பார்த் தரித்து முறிகாயத்திட்டுள் தாக்கு விதமான தைலிட்டுப் போகுமுன்னே வீராசப்பிரயோகம் செய்திட்டாக்கல் மதன முடன் முறிகளும் கபமும் சன்னி மரிவான தளங்க ளெல்லாம் செம்மையாகும் சீதமுடன் நரம்பெலும்பு அற்ற தெல்லாம் செம்மையாம் சவ்வுகளும் பொருந்தி நிற்கும்.

173. நிற்குமே அற்றதொரு பையும் சவ்வும் நேராகத் தாள்பொருந்தி ஊரிச்சேரும் துர்குணமே காயங்கள் பூப் பேறுமல் தொடுத்துடனே அடிக்கடி நீ பார்த்துக்கொள்ளு புக்கிநின்ற காச்சல் பனி சன்னி சீதம் புகழான மயக்கமொடு வலிகள் விக்கல் திக்கற்ற மூர்ச்சை கபம் அலகு பூட்டல் தீருமடா தயிலமதால் திடம் காண்பீரே.

174. திடமதிலும் இடர்வந்து சேராவண்ணம் இத மான வசவெண்ணெ சொல்லக்கேளு, வல்லவினை நிலவாகை வீளிகொற்றான் வலுவான செம்பருத்தி அடைக்காய் வேரும் நல்ல முஞ்சை கடலாடி வெள்ளருகு நாயகமே முடில்லாதாளி யாகும் சில்லரிவேராமணக்கு கருவிலாஞ்சி செருப்படியும் மரைக்காரை காக்கைநொச்சி.

175. நொச்சியுடன் செந்திரியவல்லி மூலம் நுகர் பயிலி மலைதாங்கி தடைச்சி வேரும் அச்சமில்லா அடம்பா னும் மஞ்சணத்தி அருகு சிறுகீதக்கு ஆலம்பூ நீர்பூலாவும் நிச்சயமாய் குருந்தொட்டி இதுகளெல்லாம் நினைவாக ஓர் வகைக்கு பலமும் மூன்று பட்சமுடன் பதக்கு நீர்தன்னி விட்டு பார்த்தறித்து இருநாளியாக வாங்கே.

19

176. வாங்கியே அதனோடு கூட்டிச்சேர்க்க வலுவான எட்டியுட பழம் பூர்த்தி ஆங்குமெற கற்பூரவள்ளிச்சாறும் அதனோடு நீர்முள்ளி தேசிச்சாறும் சாங்கு கண்டன்கத்திரி ஆடுன்னுைப்பாலை சங்குபுஷ்பம் அதனோடே குமரிச்சாகம் நீக்குகின்ற இளநீரோடாட்டின் பாலும் நிசமாக இதுகளெல்லாம் வகைக்கு நாளி.

177. வகைவகைக்கு இவைகளெல்லாம் நாளி வார்த்து ஒரு பாண்டமதிலேதான் ஒன்றுசேரு சிகையாக தீ எரித்து பாதியானால் சேர்ந்திடவே கடை மருந்தின் விபரம் கேளு அகமகிழும் சுக்குடனே பூவத்தேலம் அதிவிடையம் குரோசானி ஆளிசேற்றான் நகைபுரியும் சிற்றரத்தை வசுவாசியும் நாங்கணமும் திரிபலை கற்கடகசிங்கி.

178. சிங்கியொடு கொட்டம் இருவேலிப்பச்சை செயலான அகில்வெட்டி அஞ்சனக்கல் பொங்குசனி ஞாயரோடு தேவதாரம் புகழான மல்லி இருஜீரமாகும் அங்குநின்ற தாளிசையும் கிறும்புமீரை அழகான கிரிசாத்து பூக்காய் முந்திரி வாங்கியே இதுகளெல்லாம் வகைகளஞ்சாய் வடிவாக இடித்தரைத்து சேர்த்துக்காச்சே.

179. காய்ச்சிநீ மெழுகு பதம் வடித்துவைத்து கண்டறிந்து இந்த எண்ணை பிரயோகித்தால் சூட்சமடா முறிவுகளில் பினைலகொண்டு சுருக்கிமிக வுசையாமல் நின்றிட்டாலும் கூச்சத்துடன் முறிவுகளில் விஷநீரேறி குத்தியே நீர் நிலைத்து வீங்கினாலும் பாச்சலுடன அஸ்திகளில் முறிவுநீங்கி பதிவகன்று முன்பின்னாய் நின்றிட்டாலும்.

180. நின்றாலும் சவ்வகன்று நின்றிட்டாலும் நிலை சரியாய் சேராமல் அகன்றிட்டாலும் நன்றான வட்டமிட்ட கண்ணிளகி நகண்டதுதான் முன்பின்னாய் திரண்டிட்டாலும் சென்றிடும் கையிதங்கள் சரியாய் செய்தால் சதிகேடு இல்லையடா வசவுண்டாகும், அப்பனே குருபரனை அறிந்துதேரே.

181. அறிந்துசேர் அதிசாரம் காய்ச்சல்தீர அறைகிறேன் கஷாயமொன்று சொல்லக்கேளு செந்தவரை வல்

லாரை சீந்தித்தண்டும் சேர்த்துவரை நுவளோவேர் குருந்த முட்டி பிரித்துவிட இசங்கன்வேர் இளந்தென்னம்பூ பிசகா மல் பருத்திவேர் முசுட்டைதண்டு மரித்தடக்காய் மாதளங் காய் முத்தங்காயும் மருதுதோல் உளிஞெ ஓரிலையுங்கூட்டே.

182. கூட்டேநீ இருதும்பை அத்திப்பிஞ்சி குணமான களிப்பாக்கு வாழைப்பூவும் ஈட்டேநீ இருவேலி இசங்கின் பூவும் மய்யலாம் மாதாளம்பூ பருத்திப்பூவும் சீட்டேநீ நாக மத்தி இலைவின்பட்டை சிறப்பான கொட்டி நெய்தல் பிரமி நன்றி நீட்டேநீ சிறுநெருஞ்சி தோடைதூவை நெல்லிக்காய் விளாம்பிசினும் அருகன்வேரே.

183. அறுகுடனே திரிகடுகு விடையம் வங்கம் அரி ஆறுதிரிசாதி சாளி ஓமம் நறும்பிசினும் உலுவாயும் நற்சீரகம் நாகப்பூ மகிழம்பூ கொம்பரக்கு கொருவுடனே வகைக்குக் கால் பலமுமாகும் இருபையாய் ஐந்திலொரு பாகந்தன்னை மறுபடியே சதவுசெய்து இடங்களிநீரில் மறுகாமல் உளக் காக்கி இரண்டு நேரம்.

184. உழக்கான கஷாயத்தில் நெய் தேன் சேர்த்து உடனருந்து இரண்டுவேளை ஐந்துநாளும் பழக்கமாய் கொண்டவுடன் அஸ்திவெக்கை பாழான களிச்சலென்ற அதிசாரங்கள் திழகாமல் சுண்டல்வாடும் தேகந் திடமெனவே ஊதிவிடும் தெளிந்துபோகும் நழுகாமலிந்த மருந்தருந்து வோர்க்கு நாடாதுவெகுநோய்கள் காயங்காணே.

185. காணுமென்ற பையற்றுத்தைலம் சொல்வேன் கடுகுரோகணி சுக்குஓமம்கொட்டம் வேணுமென்ற அதிமது ரம் திரிபலைதான் விதமான திரிசாதி சிறுநாகப்பூ வேணு மென்ற வயல்மிளகு குங்குமப்பூ பெலமான நாகணமும் சிறியதேக்கு பூணுமென்ற சந்தனம்ரெண்டு பூலாவிருட்சம் புகழான செவ்வள்ளிகிரி சாத்தாகும்.

186. ஆகுமே பூலாத்தி வெண்குந்திரிக்கம் அனுதாரம் சாம்பிறுணி கஸ்தூரிமஞ்சள் வேகுமே சாதிலிங்கம் பவழப்

புத்து வெந்தயமும் வசுவாசி கரியபோளம் வாகுமே அரிசி சனிஞாயர் தானும் வகையான பஞ்சவன் பழுக்காய் மேதை தோகுமந்தக் கோரோசனை கஸ்தூரி காந்தம் துடுக்கான நவச்சாரம் கண்டிவெண்ணை.

187. வெண்ணையொடு குரோசானி முந்திரிகை விதமான நவச்சாரம் சீனக்காரம் கண்ணேகேள் ஏலமொடு சித்தரத்தை கச்சோளம் சித்திரை திப்பிலியும் பச்சைதானும் பெண்ணேகேள் இலவங்கம் அதிவிடையம் விழாலரிசி கார்கோலம் புனுகுமீரை பெண்ணேகேள் ஆதாளி பெரியசீரம் பிசகாமல் ஓர்களஞ்சிவிதம்கேளே.

188. கொண்டிடுநீ இடித்தரைத்து நன்றாகத்தான் குணமான பாத்திரத்தில்வைத்துக்கொண்டு தென்றகில் குருந்தட்டிவேர் வெள்ளைக்குன்றி செயலான நிலப்பனையின் கிழங்கு வாடி பண்டான பலையதின்கிழங்குமாகும் பகர்வேம்பு காஞ்சியோடிலஞ்சிப்பழம் திண்டான நாவலதின் பட்டையோடு திறமான சொரியணங்குவில்லைசேரே.

189. வில்லையாம் மூவிலை ஓரிலையுமாகும் இதமான மிளகின் வேரருகின்வேராம் சொல்லுமெழுத்தாணிவேர் பேரருகின்வேராம் சுகமான பழம்பாசி தாளிவேரும் வல்ல நரி இலிங்கைவேர் வெப்பாலைவும் மழுக்காரை தாமரையின் வளையம்கூட்டு வெல்லுமே குப்பைவேர் சேம்புத்தண்டு விதம் ஆலம்விருது கொடிசுரைமூலம்தான்.

190. மூலமுடன் சிவன்வேம்பு வஜ்ரவல்லி மூக்கவரை சின்னிவேர் முசுட்டைத்தண்டு கோலமென்ற வெள்ளருகு வீளிவேராம் குணமானமூங்கில் பொன்னவரைவேர் நெருஞ்சிவேர் வண்டாளம்வேர் தொகுப்பான குருதுள்ளி கோடைசூடி நலமென்ற தாழைவிளிர் அகத்திவேரும் நல்லதோடை தக்காளிவேர் இதுகளெல்லாம்.

191. வகையொன்று பலமொன்று தூக்கிஎடு சதைத்து இளநீர்வெள்ளம் பதக்குவிட்டு பதமுடனே எட்டொன்றாக்கி இருத்துவைத்து பலிதமுள்ள எண்ணைவகைதன்னைக்கேளே

கதியுடைய ஆமணக்கு பசுவோடெள்ளுநகாரணமாம் வேப்பு புங்கு மயிலின்நெய்யும் மதியுடனே ஞகைநாழியொக்கச் சேர்த்து.

192. மயங்காமல் ஆவின்பால் ஆட்டின் பாலுமதனு டனே தேங்காய்ப்பால் அடர்புங்கு செண்பகப்பாலொடுக்கிச் சாறு சேவிதமாய் கருநொச்சி குப்பைமேனி சிறப்பிஞ்சி இரைச்சிப்பச்செலேயின் சாகம்பனிதமுடன் ஆடுதின்னுப் பாளேச்சாகம் பகர்தும்பை வஜ்ரவல்லி அவுரிச்சாகம் ஓவிய மாய் குமிமீண்டான்சாற்றினேடு உயர்நாகல்பட்டையுடன் பரங்கிப்பட்டை.

193. பரங்கிமாப் பட்டையுடன் கதம்பைச்சாகம்பார் உதியன்பட்டையுடன் வகைக்குநாழி அறம்பதியும் மூன் மருந்தில் சேர்த்துக்கொண்டு ஆப்பேற்றி தீஎரித்து பாதி வற்ற திளம்பெறவே முன்மருந்தை தூவிக்கிண்டி திறமாக நாலிலொன்ருய் சுண்டக்காய்ந்தால் நிறம்பெறவே விளாம்பிசி னும் குந்திரிக்கம் நிசம்கோழிக்கருவும் அத்திப்பிசினுமாமே.

194. அத்தியென்ற பிசினேடே நரும்பிசினும் அட வான கொம்பரக்கு வகைகளஞ்சாய் பதிபெற பொடித்திட்டு சுண்டக்காய்ந்தால் பதமான கம்பியுடபதத்தில்வாங்கி சித்தி பெற அரித்தெடுத்து உபயோகித்தால் தின்மைஎன்ற கலே களிலே முறிவுகொண்டு அமர்த்தியது திறவுகண்டு வெளி கண்டாலும் அடவாக குத்தியதை தைத்துக்கெட்டி.

195. கட்டியபின் இந்தஎண்ணே அதில்படவே கணித முடன் புண்ணுரும் புரையும்தீரும் வட்டமிட்டகண் விலகிக் கொண்டதென்ருல் வரிக்கண்ணினுள் செலுத்திப்பிரயோகித் தால் திடமுடன் மாமிசத்தில் பையற்ருலும் திறமுடன் பொருந்தியது சதைபெருக்கம் நட்டநடுதுணேயிலுள்ள மூச்சுவேறே நடுவழியே ஏகிமிக போய்விட்டாலும்.

196. வழிபிசகிப்போகாமல் தைத்துக்கெட்டி வரிசை யுடன் தைலமிட உறுதியாகும் வெளிசெருமமண்டை

நெருங்குண்டு மூர்ச்சைமேவியேவந்தாலும் சாந்தியாகும்பாரு டிதிலாக அத்திரின் நாலிசங்கிணலும் பஞ்சவர்ணக்குகை விழுந்துநெருங்கி சதைந்திட்டாலும் வெளிபடவே கவுத் துவாரவழிகளெல்லாம் ரெத்தமாய் அடர்ந்துமிகப் பிரண்டிட் டாலும்.

197. பிரண்டிடவே பலன்இறங்கல் காணவிட்டால் பிசகாமல் செய்துவிடு பழியுந்தீரும் அருண்டணையும் பிரு ணயமும் தீபமேறும் அல்லாமல் பலகாயம் நிவிர்த்தியாகும் சொரிந்திடவே தைலமதைப்பிரயோகித்தால் சூட்சாதி சூட் சமெல்லாம் மூலம்சேரும் அருந்தவத்தோர் சொன்னமருந் திதுவேயாகும் அன்பாகசொல்லிவிட்டேன் சுகமாய்தானே.

198. சுகமானநிலவாகை கொத்தான்சாகம் சோற்றுக் கற்றாளேயோடு பருத்திச்சாகம் அதமான தென்னம்பூ சங்கு புஷ்பம் அடர்வேப்பு காஞ்சிரையின் பழமீதெல்லாம் நிகழு மிடை சமனுகக்கொண்டு நீயும் நிசமான பசுவெண்ணெதானும் ஒப்பம்புகழுடைய மூன்றுநாள் இட்டுக்கொண்டால் புகழாக தீட்டியே தடவத்தீரும்.

199. தடவியுமே தீராதேபோகுமானல் திறமான கஷாயத்தை சேவித்துப்பார் மிஞ்சினல் தைலம்சேர்த்து அடவுடனே காச்சியதை மெழுகாக தாக்கி அரித்தெடுத்து இட்டுக்கையணைத்துப்பாரு திடமுடனேதீருமடா துவாலே செய்நீ சீராகப் பாதத்தில் மருந்தொளித்து படியுடனே ஒன்றாகச்சேரு மட்டும்வகைகண்டு நன்றாக சிகிச்சைசெய்யே.

200. செய்யவேசாகமது நின்றுகொண்டால் க்ஷணத் திலங்கும் நேரம்லகித்துப்பாரு பையவேசாகம்நின்ற மறு நாளில் பாங்காக வற்றும் மட்டும் ரகித்தல்செய்து நையவே ஒன்றாக ரகித்தபின்பு நன்றாக தேகமதில் துவாலேசெய்து துய்யவே பத்துநாள்வரையும் செய்து தொகுப்பாக கைய ணைத்துத்தடவிப்பாரே.

201. தடவிநீ பார்த்திடவே கொழுத்திருப்பு தடங் கள்விட்ட நரம்புத்தெற்று உடனேதீரும் அடவுடனே வரு மங்கள் கொண்டபோதே அணிவகுப்பாய் தீருமடா அறிந்து செய்நீ திடமுடனே மனமுரைத்து ஆய்ந்துபார்த்து செப் பிய முப்பொருளை சிந்தைகூர்ந்து ஜடமறிந்து அனுபான வழிகளாய் க்ஷணத்திலே தீர்க்கவழி பார்த்துச்செய்யே.

202. செய்யவே குன்னிவேர் தைலம் கேளே சிறிய தென்றெண்ணாதே தேர்ந்துசெய்வாய் ஐயவெண் குன்னிவேர் அமுதவள்ளி ஆமணக்கு குருந்தட்டி ஆடாதோடை வெய்யி சங்குவில்லைவேர் அருகுண்டின்வேர் புல்லாமணக்கு நற்று ளசி வேலாம் வையனூர் பழம்பாசி அடபதியன்வளர் ஆடுதீண் டாப்பாளை மூலம் மூலமென்ற காகக்லமும் பூலாவேரும்.

203. முறையான பருத்திவேர் கத்தரிவேர் காயம் என்ற ஆதாளை மாதளத்தின் வேரும் சரிவேலை மேனி சங்கங் குப்பி சீனமென்ற சிறுகீரை அவுரிவேராம் சின்னி கன்னி ஆவரைவேர் இவைகளொக்க ஞாலமதில் ஒருபலமாய் எடுத்து நன்றாய் நறுக்கியே சதவுசெய்து இளநீர் தாக்கே.

204 தாக்கிடும்நீ இருகுருணி இளநீர் வெள்ளம் தன் னிலிட்டு ஐநாளியாகவற்றி பாக்கியமென்றதனையிருத்து பாண் டத்தூற்றி பரிவான வேம்புமிச்சம்பழத்திறோடு நீக்கிய மாதளம்பழமும் கூவளைதான் நிசம்பருத்திக்கொட்டைப் பால் விளிச்சாகம் ஆக்கி என்ற நெல்லி கையான்கொன்றை சாகம் அணிபசுவின்பால் நகரைச்சர்கம்.

205. சாகமென்ன நீர்துள்ளி விபாலிச்சாகப் சரியான செங்கிளநீர் பொன் முசுட்டை ஆகமென்ற மேனிநல் தகரை தாழு அடவான உளிஞெ தாமரை கொளிஞ்சி பாகமென்ன கருணைமூலம் வகைச்சார் காளி பத்திரமாய் முன்மருந்தோடு ஒன்று சேர்த்து வேகமென்ன மருந்தெல்லாம் ரசித்துக் கொண்டு வேப்பண்ணை நறுநெய் எள்ளினெண்ணை.

206. ஆயிலிய எண்ணெயுடன் இதமாக தேங்காய் நெய் வகைக்குநாழி மெல்லநீ ஐந்துவகை எண்ணெசேர்த்து விதமாக ரகித்துப்பின் அடுப்பிலேற்றி உள்ளபடி பாதிவற்றி சுண்டக்காய்ந்தால் உரைக்கிறேன் கடைமருந்து உற்றுக் கேளே விதமான திரிகடுகு சாதிமூன்று விதமான திரிபலையும் உலுவாகொட்டம்.

207. கொட்டமுடன் நாகணம் கொத்தமல்லி கொடி தான கச்சோலம் சீரம்ரெண்டும் அட்டியில்லை வசுவாசிநாகப் பூவும் ஆசாழிசிங்கி அதிமதுரம்மேலாம் கெட்டியடாமாயக் காய் கிரும்பதுவும் கெட்டிடும்நீ அகிலப்பூ பச்சைப்பூரம் திட்டமுடன் கஸ்தூரி சவ்வாதாகும் திறமான குரோசானி கரியபோளம்.

208. போளமொடு பூவத்து செண்பகப்பூ நலமான அரிசியென்ற சனிஞாயர் தாயகமாய் இருவேலி ஓமம்தேற் றான் சரியான விழலரிசி புனுகும்கூட்டி நீயறிவாய் ரோசனை யும் சித்தரத்தை நினைவானவால்மிளகு பேராத்தைவாயமுட னிம்மருந்தைக் களஞ்சிவிதம்வாங்கி இடிதூளாக இட்டுக் காச்சே.

209. காச்சிடுநீ மெழுகுபதம் உடனேநீயும் காய்த் தெடுத்து வடித்திருத்து வைத்துக்கொண்டு கூச்சலுடன் வதைகாயம் கொண்டபேர்க்கு கொடுத்துவிடு ஐந்துநாள் பத்துநேரம் ஆச்சரியமாய்தீரும் தொண்ணூற்றாறும் அடர்ந்த தொரு பதினெட்டும் அடிகாயம்போம் நீச்சுநிலை அற்றவழி கடந்துபொங்க நின்றால் பிராணகலை மீண்டும்சேரும்.

210. மீண்டுகபம் சேருமடாகபத்தில் வேர்வைமீளாத உடல்உயிரோடு ஒன்றுசேரும் நீண்டுநிலைதளர்ந்து உயிரா ரும்பொங்கி நெருக்குமுற்றுக்கொண்டாலும் தீரும்பாரு தூண்டாத படுகாயம் மெய்யயர்ந்து துயரம்உரக்கொண் டெழுந்த மயக்கம்தீரும் தீண்டாததலைதனிலே பனியால் நீர்தான் ஏற்றுக்கபமேரித் தானேபொங்கி.



**211.** பொங்கிநின்ற விஷநீரால் மேனிசோர்ந்துபோன தினுல் மரணம்வந்து சூழாவண்ணம் பாங்குடனே தைலமதை தண்ணைஐந்து படிப்படியாய் கொண்டிடவே சயமற்றேடும் தாங்கிநின்ற உயிர்உடல் ஆயாசங்கொண்டு தளர்ந்துநின்ற உடலதிலே மயக்கம்தீரும் மங்காதபடி இதமாய் செய்து கொண்டால் வலிகாயம் தீருமடா அறிந்துபாரே.

**212.** அறிந்துபார் வாதஜன்னித் தைலமொன்று அறைகிறேன் ஜன்னிகபம் காயம்தீர செரிந்துபார் நொச்சி இசங்காடாதோடை செயலாடுதீண்டாப்பாளை மேனியறிந்து பார் முருங்கைதும்பை கருங்குரிஞ்சி மலமான செங்நெருஞ்சி நிம்பப்ட்டை அறிந்துபார் எருக்கலையும் ஊமத்துமாகும் மறுவேலிப்பருத்தியுடன் பேய்க்கும்மட்டி.

**213.** கும்மட்டிவிழியுடன் மிளகுதக்காளி குணமான தூதுவளை நெருஞ்சியாகும் இம்மட்டில் சாகவைகநாழி சேர்த்து இதைப்பாண்டத்திலூற்றியதில் முசருமுட்டை அம்மட்டில் பூநாகம் குழியான்தெண்டில் அரையாமல் மூஞ்சிறுபாம்புக்கண்டம் செம்மையுடன் இட்டு அடுப்பேற்றிக் காய்த்து செயலாக பாதிமட்டாய் சுண்டக்காய்த்தால்.

**214.** சுட்டமட்டாய் காய்ந்தபின்பு சுருக்குத்தாக்கு சொல்லுகிறேன் கடைமருந்து சுகமாய்கேளு கொண்டிடும் திரிகடுகு நவச்சாரம்தான் குணமான திருமுனிவர் காயம் உள்ளி விண்டிடவே கருஞ்சீரம் அபினும் கூடன்விதமான பழுக்காயும் குக்கில்மேதை பண்டான சித்தரத்தை ஆழியா வும் பகர்சாந்து வசம்புலுவாய் மஞ்சள் மிளகு.

**215.** மஞ்சளொடு சாதிலிங்க மிவைகளெல்லாம் வடிப் பாக இடித்துடனே தூளதாக்கி அஞ்சாமல் நிம்பெண்ணே படி தானொன்று அதிலூற்றி நாலொன்றாய் சுண்டக்காய்ந்தால் தஞ்சமுடன் கடைமருந்துமிட்டுக் காய்த்து தயவாக மணல் பருவம் அரித்து வாங்கு பஞ்சரித்துச்சன்னியது மூர்ச்சை யாகி பரந்தேரி வேர்வை கபம் மயக்கம் கண்டால்.

216 கண்டாலோ பொரிதலங்கள் பதிய உண்ணும் வீக்கா லும் இடைகுறுக்கும் குளிர்ச்சை காணும் சுண்டியது தீராட்டால் உள்கோ தாக்கு சுகமான சன்னி கபம் வேர்வை காயம் கொண்டிருந்த மூச்சடரும் பொரிதளர்ச்சை கொழுத் துடனே கலைமாறலுடனேதீரும் திண்டாடும் அறிவளிர்ச்சை மயக்கம்மூர்ச்சை தீருமென்று முனிசொன்னமொழிமாறாதே

217. மாறாத இருமல் சயம் தீரவேண்டி வழுத்து கிறேன் தோடைவேர் கிருதமொன்று வேமானதோடை வேர் சித்தாமுட்டி வில்லை வேர் நறுநன்றிக்கிழங்கிஞ்டு சீராகவகை வகைக்குப்பலம்தான்பத்து செப்புகிறேன் நல்ஜீரம் கொம் பரக்கு கூறுகவகை ஐந்துபலமாய் தூக்கி குருணி ஜலம் விட் டதனை எட்டொன்றாக்கே.

218. ஆக்கியபின் உளிஞெ குன்றி, செந்தட்டி அடங் காத பாதிரியும் பருத்தி சுண்டை நோக்கியபின் சங்குகுமிழ் விடயத்தோடு நுகாரத்தாதுவனை கண்டன்காரி சீக்கிரமாய் இதுகளுடவேரும்பாரு செங்கமல வளையம் நல் முசுட்டைக் கொடி நீக்கமில்லா வெள்ளருகும் மலைதாங்கியொடு நிறை சரி யாய் அரைப்பலமாய் சதைத்து வாங்கே.

219. சதைத்திடுவாய் இருகுருணி ஜலத்தினூடே தணலெரித்து எட்டொன்றாய் முன்னீரில் சேர்த்து கருதி டவே எள்ளெண்ணை ஆமணக்கெண்ணை காராவின் நெய் படி தான் வகைக்குச்சேறு வகுத்திடுவாய் மேல்மருந்து கோழி யொன்று வரித்தவளையது மூன்று அணில்தான் மூன்று குத்தித்த கரும்பூனையொன்று எலிதான் மூன்று குறையாமல் இடித்திதனை எண்ணை தனில்

220. சேர்த்ததனை சுண்டக்காய்ந்தால் இயம்புவேன் கடை மருந்தின்னம் கேளு மண்ணமுறு மாஞ்சி கொட்டம் மதுரம் சிங்கி வாலமிளகு திரிசாதி கண்டிவெண்ணை திண்ண முறும் குங்குமப்பூ மாயக்காயேலம் திரிகடுகு கச்சோலம் பெரும்சீரம்தான் எண்ணமுறும் மரமஞ்சள் திப்பிலி மூலம் இருவேலி குரோசானி கசகசாவே.

221. கசகசா தற்கோலம் அரிசி ஆறும் கனமான திப்பிலியும் நாங்கணம்தான் நிசமான தாளிசபத்திரி நாகப்பூ நிச்சயமாய் சந்தம் வகைக்கிருகளஞ்சி விசையாகப்பொடித் ததனை எண்ணைதள்ளி விரவியே கிண்டி நன்றாய் அணலை மூட்டி வசமாக மெழுகுபதம் தாக்கும்போது வடகலசந்தன்னிலிட மருந்து கேளே.

222. கேளப்பா கோரோசனை கஸ்தூரிமீரை கொடியாக கால்களஞ்சியிட்டு வாங்கி ஆளப்பா கணைமுகர்க்குப் பூஜைசெய்து அருந்திடுவாய் கரண்டிஎண்ணை பத்துநாளும் நாளப்பா இருபது போதுண்ணும்போது நாடியிடைகொண்ட வர்மம் இருமல்மேகம் மாளப்பா அளண்டசுரம் வரட்சை சோம்பல் மாறுதளலும்புருக்கி உள்ளுருக்கி.

223. உருகச்செய்யும் இளைப்பு ஈளை விசர்ப்பு வாய்வு ஓடுமடா கரிச்சனங்கள் நீர்க்கடுப்பு பொருக்குமண்டையிடி மயக்கம் கண்புகைச்சல்போம் கைகால் நோக்காடு இருகிருமி மூலம் பறக்குமடா கிறுணிமுதல் தேகம் பொன்னும் பல நோய்போம் தத்துவங்கள் நேரநிற்கும் அரையாமல் தீருமடா நோய்களெல்லாம் ஆனந்தம் துலங்குமடா அதிகம் காணே.

224. காணவே ஏலாதித் துவாலையொன்று கருதுவேன் ஏலமுடன் ஜாதிக்காயும் வேணுமே மாயக்காய் கோரோசனை விதமான சந்தனமும் புனுகும்கூட்டு கோணுமே குங்குமப்பூ வெள்ளரிவித்து குறையாமல் வகைக்கு ஒருகளஞ்சிவீதம் நாணுமல் பன்னீரால் அறைத்துக்கொண்டு நற்கதலிஎட்டு பூலாத்திப்பழம்.

225. பழமான இதுவகைக்கு களஞ்சி இரண்டு பத்திரமாய் தூக்கிஎடுத்தரவுசெய்து வழுவாமல் இரெண்டு மொன்றாய் ரகித்தபின்பு வார்த்துடனே அதினளவு எண்ணைசேரு முழுதுமொன்றாய் ரகித்தபின்பு சொல்லக்கேளு முக்கியமாய் நற்சீரம் மதுரம் சிங்கி நழுகாத நாகணமும் சிறுநாகப்பூ ஒன்றான மாதளையின்பழமும் கூட்டி.

226 கூட்டுநீ கத்தாரியோடமுதவள்ளி குணமான தாமரையின் வளையம்சேரு வாட்டமுற ஆம்பல்கொட்டிக் கிழங்கு நெய்தல் வகுப்பான வகைவகைக்குக்களஞ்சியுமாகும் மாட்டியே இளநீர்தான் இருநாழிக்குள் மகிமையாய் கஷாய மிட்டு எட்டொன்றுக்கி தாட்டிகமாய் முன்மருந்தை அதில் ரகித்து சரியாகப்பத்துநாள் துவாலைசெய்யே.

227. பத்துநாளதுகழிந்து துவாலைமாற்றி பத்திர மாய் தடவியதை தாக்கிப்பாரு நித்திரைகளில்லாமல் லகிரி வெப்பால் நின்றதொருஉள்ளணலும் நரம்புத்தெற்றும் அத்தி சுரம் வரட்சை அரோசிகமும் காந்தல் அடவான நரம்புவெட் டல் குன்னல்தீரும் ஒத்துநின்ற வாசியினுல் காயத்தாலும் உண்டான வினைகளெல்லாம் நிகழ்ந்துபோச்சே.

228. நிகழாதே கஷாயமொன்று சொல்லக்கேளு நிலை வாகை மலைதாங்கி அருகுரெண்டு துகையான வெட்டிவேர் ஆம்பல்மூலம் சுடர்கோடை சூடியுடன் ஆடாதோடை வகையான நல்தகரை தீண்டாநாழி வாகான திருப்பனுடன் செங்கொருஞ்சி தயவான முஞ்ஞை வேரிலந்தைவேரும் தவசி என்ற முருங்கைவேர் பூலாவேரே.

229. பூலாவும் நீர்நுள்ளி முள்ளிக்கீரை பொன் முசுட்டை தண்டுடனே வெள்ளைக்குன்னி மேலான ஆவரை வேர் நத்தைச்சூரி வெள்ளருகு சித்தாமுட்டி விளிவேரும் பாலான மூங்கில்பழம் பாசி நன்றி பத்திரமாய் ஓரிதள் தாமரையும் நெய்தல் மாலான பேய்புடலம் காக்கைநொச்சி மல்லிகைவேர் குருந்தலெழுத்தாணிதானே.

230. எழுத்தாணி உளிஞெகொட்டம் கொம்பரக்கு ஏலமொடு வசுவாசி அரத்தை சுக்கு தழுதான பச்சைமிச்சம் அகிலுமாஞ்சி தாரம் மல்லி திரிபலை மதுரம் தேக்கு நடுக்கான நாங்கணமும் கிரும்புசந்தம் நற்சீரம் கொத்தமல்லி சனி ஞாயர் ஒழுக்கமுடன் வகைவகைக்குக்களஞ்சிமூன்று உடன் சதைத்து மூன்றிலொரு பாகம்தன்னை.

231. பாகமெல்லாம் பங்குவைத்து நாளிரண்டு பாணிவிட்டு எட்டொன்ருய் இருத்துவாங்கி அகமிதை இரு வேளை மூன்றுநாளும், ஆறுவிசை கொண்டிடவே அகலும் மேகம் வேகமுள்ள நரம்புவலி கொழுத்துக்குத்து விசை நரம்பில்கொண்டிருந்த வர்மம்தீரும் வூருபெரும் குளிர்காச் சல்வரட்சைகுன்மம் வர்ம சயமுழுதும்போம் சூட்சம்பாரே.

232. சூட்சமாம் பசுவின்நெய் சென்னைஎண்ணை சுருக் கான தேங்காய்எண்ணை நிம்பத்தெண்ணை ஈச்சமாய் எள் ளெண்ணை ஐந்தும்கூட்டி இயலான மேல்மருந்து இயம்பக் கேளு பச்சமுள்ள தொட்டாக்கால் வாடிச்சாரும் பதமூடில் லாத்தாளி விருலிச்சாரும் அச்சமில்லாத்தூதுவளை வேலிப் பருத்திச்சாரு அடவாக வகைவகைக்குப் படிகாலாமே.

233. ஆமேமேகேள் அக்கரா சிங்கிசீரம் அதிமதுரம் கொம்பரக்கு அரத்தை சுக்கு நாமேமேகேள் திரிசாதி திப்பிலி கொட்டம் நலமான அரிசிஆறும் களஞ்சியொவ்வொன்று தாமேமேகள் முன்சாரும் எண்ணையோடு தயவாக பொடிதூவி அடுப்பிலேற்றி போமேமேகேள் கூவளத்தின் பழத்தின்சாரும் புகழாகத்தான்சேர்த்து புகட்டிக்காச்சே.

234. காச்சியே மணல்பருவம் ஆகும்போது கருத் துடனே வடிகலசம்தன்னில்கேளு ஏச்சாமல் வெண்குந்திரிக் கம் பொடித்துஇட்டு இரக்கிவடிகாண்டியிலை உள்ளேதாக்கு தாக்கப்போம் சயம்ஈடு இருமல் கக்கல் பொல்லாத இளைப்பிளை கொழுத்துக்குத்தும் வீச்சுதேநரம்புதெற்றல் விரைவாதம் வலிகபம் விளம்பக்கேளே காயராட்சாதிஎண்ணை காசினியில் திறமாய்முற்றே.

235. விளம்புகிறேன் குக்குடத்தின் தைலம் ஒன்று வேகமாய் சர்வ வர்ம ஈட்டிற்கெல்லாம் தளம்பெறவே கருங் கோழி கொண்டுவந்து தலைகுடல் கால்முடிதள்ளி எண்ணுளி நீரில் நலம்பட இடித்திட்டு எட்டொன்ருய் காச்சி நன்ருக இருத்ததின்மேல் கஷாயம்கேளு அழுந்தாமல் நாயுருவி உளிஞெவில்லை ஆமிசங்குதொட்டிவகைக்குப் பலம்பத்தாமே.

236. ஆமேமேகேள் முக்குறுணி இளநீர்வெள்ளம் அனலெரித்து எட்டொன்றாய் இருத்துவாங்கி தாமேமேகேள் கஷாயம்ரெண்டும் ஒன்றாய்சேர்த்து தக்க கடைமருந்ததனை சீர்றக்கேளு நாமேமேகேள் திரிசாதி அதிவிடையம் நற்சீரம் திப்பிலியோடக்கருவும் ஓமேகேள் அரிசிஆறும் மதுரம் அரத்தை உலுவாயும் கொம்பரக்கோர் களஞ்சி கூட்டே.

237. கூட்டுநீ ஆவின்நெய் படிதானென்று குணமான நல்லெண்ணை அரைதானப்பா பூட்டுநீ ஆமணக்கெண்ணை கால்தான் புகழாக முன்சாறும் எண்ணைசேர்த்து ஆட்டுநீ கற்கவகை அதிலேதூவி அடுப்பேற்றி அணலுற்று மெளுக தானல் காட்டுநீ வடித்து மணல் சுரண்டிவீதம் நலமான பிணியாளிக்குள்ளே பாச்சே

238. பாச்சப்பா மூன்றுநாள் ஆறுவேளை பாலகனே முருங்கையிலை சோறுமப்பா பத்தியமே போகாமல் குறித்துக் காத்தால் போகுகின்ற பிணியதனை இயம்பக்கேளுமூச்சுவிடக் கூடாத கொழுத்து கக்கல் முறைகேடாய் வந்தசமயம் இருமல் விக்கல் போச்சுதடா பழைய ஈடு இழுப்பிருமல் பொன் போலாம் தேகமெல்லாம் செம்மைதானே.

239. செம்மையுள்ள நாசித்தூளொன்று சொல்வேன் செயலான திரிகடுகு ஈருசு ஓமம் நன்மை என்ற கடல் பழமும் தலைப்புண்ணுக்கும் நவச்சாரம் வைகைசமனாய் தூளு பண்ணி திண்மையின்றி செவிநாசி ஊதினுக்கால் தீருமடா மயக்கமொடலகுபூட்டல் உண்மையிது சன்னி விஷம் பேயும் தீரும் உண்மையுடன் ஓகோகோ உன்மனதில் பயம் கொள்ளாதே.

240. கொள்ளாதே நசியமொன்று சொல்லக்கேளு குணமான தும்பையொடு துளசி சுக்கு விள்ளாதே மலையாளி மண்ணில் வேந்தன் விரைவான வைணமொடு மேனிச்சாறும் தள்ளாதே இதுகளெல்லாம் பிழிந்து கொண்டுதான் ஊற்று நாசி செவி கண்ணில்தானும் உள்ளான அலகுபூட்டல் மயக்கம் சன்னி ஓடுமடா உண்மையிது உறுதிபாரே.

241. உறுதியென்ற சிநேக பொட்டணத்தைக்கேளு ஓராத்தை முதிரை கடல்பழமும் மாஞ்சி மறுகருவாய் வீலமோடு செண்பகப்பூ மகிளம்பூ புன்னரிசி கிரும்பு கொட்டம் திரிகடுகு நாகணமும் அதிமதுரம் திரமான அகில்வசம்பு சீமைபச்சை நறுமலராம் குங்குமப்பூ உலுவாயுள்ளி நற்கடுகு தகரை ஆடிவிரையுங் கூட்டே.

242. கூட்டியே இதுகளெல்லாம் தேசிச்சாற்றால் குணமான அரைப்பதற்றால் நிழலிலிட்டு வாட்டியே காயமது மிஞ்சியேரி வலி வேர்வை சன்னி கபம் சீதமுற்றால் பூட்டியே பொடியைநீ கியாளம் கட்டி முறிதலங்கள் உச்சி முதல் பதிய ஒற்று நீட்டியே நிம்பனெண்ணை தன்னில் ஒற்று நின்றுவிடும் வேர்வை வலிதிட்டம்தானே.

243. திட்டமாய் வெள்ளருகு கஷாயம்கேளு திரமான வெள்ளருகு ஓரிலை திருப்பன் நட்டமில்லா பருத்திவேரு ஆமணக்கு நல்லல் புல்லாமணக்கு சொரியாணம் வேரும் சட்டமில்லை இசங்கு வெப்பூலாவேரும் சங்குபுஷ்பம் தோடை சிறுவளுதலைவேர் இற்றமுள்ள நன்றிபழம் பாசியோடே இதமான குருந்தொட்டி அருகின்வேரே.

244. அருகுடனே வெள்ளரியின் வித்து பூலா அலர் சின்னி மூங்கில்வேர் தூரவிசிந்தி சிறுகீரை மலைதாங்கி பொன்னுவரை சியலான் சதாவேலி உளிஞெயாகும் மறுபடி கேள்பேய்புடலம்நத்தைச்சூரி மாணை குட்டித்தக்காளியாகும்கொருவிதமாய் பாச்சொட்டி மொசுமொசுக்கை கேள் வெள்ளைக்குன்னியும் செம்பருத்திதானே.

245. செம்பருத்திவேருடனே பிச்சிப் பூவும் சேர்ந்திரிய வலுவேர் மாதளங்காய் அம்பரமாய் தாமரை வளையம் கூட்டி ஆம்பல் நெய்தல் கொட்டிமூலம் அகத்திவேரும் வேம்புகின்ற நாயுருவி கொளிஞ்சிவேரும் விரைவான வல்லாரை அடபொதியன் தேம்புடனே தென்னம்பூ முசுட்டைத் தண்டு திரமான இத்திமலர் நீர்முள்ளி.

246. நுள்ளியுடன் மழுக்காரை தோடைப்பூவும் நூதனமாய் நிலவாகைவேர் தன்னோடே அல்லி எடுகளஞ்சி இரண்டு அணலும் கூட்டி இருகுருணி நீரில் தாக்கு கள்ளமற மூன்னுளியாக்கிக்கொண்டு கலந்திடுநீ உடனதிலே ஆட்டின் பாலும் ஆவின்பால் இளநீர் மூன்றும் விதமாக வகைநாளி சேர்த்துக்காச்சே.

247. காச்சிடுநீ இருநாளியாக்கிக்கொண்டு கருத்தாக இருத்ததிலே இன்னும் கேளு கூச்சமாய் திரிகடுகு திரிசாதி தான் கொம்பரக்கு கோரோசனே ஆச்சரியம் கஸ்தூரி புனுகு சவ்வாது அதுகளைநீ ஓர்களஞ்சாய் பன்னீர்விட்டு மாச்சரவே நீயரைத்து வைத்துக்கொண்டு வகுப்பான கஷாயமதில் அரை உளக்கே.

248. அரை உளக்காய் பதினறு நேரம் கொள்ளு அரைத்துநீ பதினறிலொன்ருய் கூட்டி கரைத்துடனே இரண்மொன்ருய் ரகித்துக்கொண்டால் காஞமலோடிவிடும் உள்ளின் வெக்கை ஒருவிதமும் தீராத அஸ்தி நோவு உள்ள படி கள்ளங்கொண்டிருந்த காயம் தீரும் எழுந்துவரும் காய் வேரி மேகம் பித்தம் வாட்சை சயம் கொளுத்திருமல் கூம் புணக்கல் கொண்டே.

249. கொண்டாடும் பஞ்சவர்ணக் குகை வரண்டு கொடுங்கணலாய் சீமேகம் கொண்டிட்டாலும் திண்டாடிக் கபத்தில்வந்து நெஞ்சோடிளை சேர்ந்திளகி அனுதினமும் சீக் கொண்டாலும் பண்டான வெக்கையினுல் வாசிமிஞ்சி பரத் துடனே முத்தலங்கள் சூடும்தானே.

250. சூடான ரவிமிஞ்சி மதியில்மேவி தொக்கிமதிசென்று மேல் வெதுப்பித்தாவி ஆடாத விசைகளையும் தளரப்பண்ணி அம்பலத்தை அறியாமல் அறிவகன்று கூடாத வாக்குகளைப் பேசினுலும் கொண்டிளகி வெக்கையது மிஞ்சினுலும் பாடி வைத்தேன் இம்மருந்தைக் கொள்ளுமேவர்க்கு பலனுகச்செய் யுமிது பரமனுணே.

251. பரமனுந்தனுணை சொல்வேன் பகரக்கேளு அயன்மென்ற முக்கூட்டெண்ணை அறனும் உமையாளும் வணத்திலேகி ஆனைமுகன் தன்னைப்போற்றல்வாருபோலும் குருவான வாலை கண்டன்தனைவணங்கி கூறுகிறேன் முக்கூட்டெண்ணை நரிஇலந்தை புத்தரிச்சுண்டை தப்பான நறுநன்றி துளசிவேராடாதோடை.

252. தோடையுடனே இசங்குகன்னிவேலி செந்தட்டிதுவளை அமுதுவள்ளி வாடிவேருகன்வேர் மேனிவேரும் வல்லாரை மழுக்காரை புல்லாமணக்கு கூடிநின்ற வெண்குன்றி சித்தாமுட்டி குருந்தொட்டி எழுத்தாணி வெப்பூலாவும் நாடுகின்ற நல்த்தகரை பொன்முசுட்டை நற்துளசிவேர் சித்ரமூலிவேரே.

253. வேரான கொடுப்பைவேர் கண்டங்கத்திரி வெள்ளருகு கடலாடிவேருமாகும் கூறுன அத்திப் பொன்னுவரைவேர் குணமான தக்காளி பொன்னெருஞ்சி பதமான ஆனையருகதனின்வேரும் பகர்பருத்தி அத்திப்பழம் பாசிவேரும் பேரான தாமரையின் வளையம்கொட்டி பெலமான ஓரிலையுமூவிலையுமாகும்.

254. ஆகுமே வகைவகைக்குப் பலம்தாமொன்று அப்பனே எடுத்தொக்க ஒன்றாய்க்கூட்டி வாகுபெற நருக்கியந்த சதைவுசெய்து வகுப்பாக நால்குருணி இளநீர்தாக்கி பாகமுடன் ஐநாழியாக்கிக்கொண்டு பகருவேனுட்டின் பாலாவின் பாலும் சுகமுள்ள பருத்திப்பால் தேங்காய்ப்பாலும் சுகமான கொடுப்பைச்சார் கொவ்வைச்சாரே.

255. சாருடனே இவைகளெல்லாம் வகைக்கு நாழி சரியாக கஷாயமிதிலுறவுசெய்து ஏறுடனேகோழியொன்று இடித்துச்சேரு வகுப்பாகரெண்டும் நறுநெய்சேரு ஊறுகின்ற எள்ளினெண்ணை இரெண்டுமொப்பாம் உடன்மூன்றும் முன்நாழியாகச்சேரு கூறுகின்ற பாதிவற்றி சுண்டக்காய்ந்தால் சுகமான சுக்குடனே திப்பிலிதானே.

256 திப்பிலியும் நாகணமும் கரியபோளம் மூலம் கொம்பரக்கு தேக்கு பர்ப்படகம் அரத்தைதத்தானி மாயக்காயும் பண்பான நற்சீரம் கொட்டமேலம் தற்கோலம் தாளிசையும் கிரும்புபத்திரிதான் மதுரம் கசகசா குங்குமப்பூ அர்ப்பமெனநினையாதே சிறுநாகப்பூ அன்பான திரிபலை கச்சோலமாமே.

257. கச்சோலம் புனுகு கோரோசனை மேதைகண்டி வெண்ணை முந்திரிப்பழம் கஸ்தூரி அச்சமற இதுகளை நீ வகைக்குரெண்டு அரிகளஞ்சிவீதம் இடித்தரித்துக்கொண்டு சொச்சம்போல்தூவி யணலெரித்துவாங்கி பச்சமுடன் இருவேளைபத்துநாளில் பண்பாகக்கொடுத்திடுநீ பயமொன்றில்லை.

258. இல்லையென்ற தாதுநிலை கெட்டபேர்க்கும் இணங்கின்ற மேகமதுகொண்டபேர்க்கும் வல்லபமாய் படுகாயம் கொண்டபேர்க்கும் வர்மத்தால் இருமல் கபமானபேர்க்கும் பொல்லாத மயக்கம்வந்து சூழ்ந்தபேர்க்கும் பொரிதளர்ந்து வேகமுற்ற புதல்வர்க்கும் கொல்லாமல் கொல்லுகின்ற அஸ்திசூட்டிற்கும் கூத்துவனும் படுகாலம் கொண்டபேர்க்கும்.

259. படுகாலம் கொண்டடங்கல் எல்லாம்பார்த்து பரிதவித்து மயக்கமுற்ற பலபேர்க்கும் நடுவான பஞ்சவர்ணக்குகையிலிட்டு நாவரட்சி நரம்புவலி கொண்டபேர்க்கும் தடியடிகள்பட்டுடனே மயக்கமுற்ற சகலருக்கும் இந்தஎண்ணை பிரயோகித்தால் அடிபிசகிப் போகாமல் குற்றம்தீரும் அயன் முக்கூட்டெண்ணையை நீ அறிந்துபாரே.

260. கூர்ந்துபார் குக்குடத்தின் கஷாயமொன்று குறிப்பாய்கேளு வெண்குன்றி வில்லைவேரும் சேர்ந்துபார் சித்தாமுட்டி தயிளாமைவேர் திரமான கருஞ்சுண்டை அருகன்வேரும் நிசமான சிறுபீளை சிந்தித்தண்டும் சேர்ந்துபார் செஞ்சட்டிதோடைவேரும் சுகமான மாதுளைசமூலமஞ்சே.

**261.** ஐந்தான வளர்சுண்டைதாமேவேரும் ஆனுலும் தூதுவளை தக்காளிவேர் துஞ்சாத நெய்வள்ளி நறுநன்றிவேர் தோலுளிகுஞ தாழிவேரும் தஞ்சமுள்ள கரும்பு சதாவேலி மூலம் தானான விஷ்ணுகிராந்தியோடு வஞ்சமற்ற வகை வகைக்கு பலமொன்று சதைத்துநீ வைத்துக்கொள்ளே.

**262.** கொள்ளவே அரிசிவகை ஆறுமாகும் குணமான அமுக்கூரம் சீரகம்தான் விள்ளவேர்க்கொம்பு திப்பிலிமூலம் விதமேல் சித்தரத்தை சிறியதேக்கு தள்ளவே திரிபலை யோடரவுள்ளி தாளிசமும் தற்கோலம் சிறுநாகப்பூ மெல்லவே கச்சோளம் ஜாதிமூன்று மேவி எடு கற்கடகசிங்கிதானே.

**263.** தானான இலவங்கம் அயமோதகம்தான் தவறாமல் சந்தம்ரெண்டு ருமிச்சாரோடு தேனான சடாமாஞ்சியது மமக் கரா திறமான வாால்மிளகு மகிழப்பூவும் வானான திரிகடுகு வகைவகைக்கு வாங்குவாய் களஞ்சிரெண்டு வரிசையாக கானக சதைத்து முன்மருந்துமொன்றாய் கணக்காக மூக்குருணி புனலில்தாக்கே.

**264.** தாக்கவே குக்குடம்தானென்றுவாங்கி தவாமல் குடல்முடி கால்களைந்துவிட்டு ஆக்கியே கஷாயமதில் நொருக் கிப்போட்டு அணலெரித்து வற்றியது எட்டொன்றானல் நீக்கியே கஷாயமதில் உளக்கிருத்து நினைவாக சீனிமேல் பொடியுமிட்டு போக்கியே ஆறுநாள் குடிக்கும்போது புதுமை யாய் தீரும்நோய் புகழக்கேளே.

**265.** கேளப்பா சுமைவரட்டைசை கூம்புணக்கல் கெடி யான சயம் காசம் கொளுத்தும்தீரும் நாளப்பூா கல்லெரியின் உட்காயம்மாறும் நலமான சயம்ராகம் எட்டும் தீரும் பாழப்பாமேகமொடு பித்தவாய்வு கனிகபமும் அஸ்திசுரம் பறந்துஓடும் சூளப்பா வர்மம் நூற்றிஎட்டும்தீரும் சுகமாகு மென்று முன்னோர் சொன்ன நூலே.

**266.** நூலான சயம்வரட்டைசை வர்மம்தீர நுணுக்கமாய் கஷாயமொன்று சொல்லக்கேளு பாழானமுத்தங்காய் சித்தா

முட்டி பண்பான் பொடுதலையும் வில்லைவேரும் காலான சோடுப்பையொடு உளிஞெவேரும் கருத்த சுண்டை வேருடனே நிப்பிண்பட்டை கோலான செந்தட்டி அருகன் வேரும் குட்டித்தக்காளியுடன் பணப்புல் தானே

267. தானனை வேலிஎன்ற பருத்திவேரும் தாராவேர் நறுநன்று அமுதுவள்ளி உனனை வல்லாரை வெள்ளைக்குன்னி ஓரிலையும் விஷ்ணுகிரந்தியொடு தேனனை வகைவகைக்குக் களஞ்சிபத்து திறமாக நிறுத்தெடுத்து செப்பக்கேளு கோனுன் ஜாதிக்காய் கிரும்புபத்திரி குரோசாணி சுக்காத்தை ஏலமாமே.

268 ஆமேகேள் தாளிசை கொம்பரக்கு கோட்டம் அமுக்கூரம் முந்திரிகை நல்சீரம்வாமேகேள் அக்கரா அரிசி ஆறும் வகைவகைக்கு முக்களஞ்சாய் வாங்கிக்கொண்டு நாமே கேள் மருந்தையெல்லாம் சதைத்துஒன்றாய் நாயகமே பங்கு வைத்து ஆறிலொன்றே போமேகேள் இடங்களி இளநீரில் புகழாக இட்டுடனே அணலை மூட்டே.

269. மூட்டியே எட்டொன்றாய் காய்த்துவற்றி முகத் திருத்து பசுவின்நெய் மேலேயிட்டு ஊட்டிடுநீ இருவேளை அந்திசந்தி உருதியாய் ரோசனையும் உரைக்கநன்றாம் நாட்ட முடன் நாலுநாள் பன்னிரெண்டுநேரம் நலமாக பத்தியத்தை நாடிப்பார்த்தால் கோட்டிமுதல் தண்டிடிகள் கொண்ட வர்மம் குவளைசயம் ஓடிமடா திண்ணம்தானே.

270. திண்ணமுடன் காரிரல் வெள்ளீரல் தீராதகூம்பு வர்மம் சயவர்மம்போம் எண்ணமுடன் இளைப்பிருமல் ஈளை கோளை எப்பிளைப்பு அஸ்திசுரம் இருமல் காயம் வண்ண முடன் உள்சொருத்து வலிசுபர்போம் வாய்வுகபம் நெஞ் சடைப்பு எரியுர்தீரும் கண்மணியே நரம்புத்தெற்றல் உழுக் கும்தீரும் கைகண்டதிந்தமுறை தேகம்பொன்னே.

271. பொல்லாத சயவர்மம் வரட்சைதீர சொல்லு கிறேன் தெற்றிப்பூ கஷாயம்கேளு நல்லதொரு தெற்றிமலர்

படிமூன்றப்பா நவிலுகிறேன் பிச்சிப்பூ படி மூன்றப்பா வேணுநன்றி மூன்றுடன் வல்லாரையொன்று வில்லை ஒன்று இசங்கொன்று மதுரம் திப்பிலி சுக்குசீரம் வால்மிளகு மல்லி நிலவாக திரிசாதி கொம்பரக்குமாமே.

272 ஆமேதான் வெண்தூபம் அரிசியாறும் அக்கரா கற்கடக சிங்கிவலம் போமேதான் வகைவகைக்குக் களஞ்சி மூன்று புகழாக சதைத்து இருகுருணிநீரில் காமேதான் அணலிட்டு எட்டொன்றுக்கி காலிருத்து மீரைமேல் பொடியு மிட்டு ஓமேதான் கோழிரத்தம் தானுமூற்றி உள்ளுக்குக் கோரோசனை தானுமிட்டே.

273. இட்டுநீகொடுத்திடவே சயம்வரட்சை ஏகுமடா இளைப்பீளை இருமல்கக்கல் விட்டுவிடும் உள்கொழுத்து மேக வெட்டை வீறுன உள்ளுவர்மம் ஆறும்தீரும் நிட்டைஎன்ற அஸ்திவெக்கை நயனச்சூடு நீங்குமஸ்திசுரம் தாதுபெல முண்டாகும் ஒட்டாது தெற்றிமலர் கஷாயத்தாலே உண்மை யிது முனியுரைத்தார் உலகில்தானே.

274. தாமென்ற திருமேனி எண்ணைகேளு தரணி யுள்ள மானிடர்க்கு வர்மம்தீர நாமென்றமேனிச்சார் தைவளைச்சார் நாயுருவி தமிளாமை கையான்சாரு போமென்ற சம்பாவெற்றிலையின்சாரு புகழான மொசுமொசுக்கை ருமிச் சச்சார் ஆமென்ற குருந்தொட்டி பழத்தின்சாரோடே அப்பனே வகையொன்றுக்குளக்கதாமே.

275. ஆகுமே பாண்டமதிலரித்துவிட்டு அழகான காஞ்சிவேரும் கெருடன்வேரும் வேகுமேப் நறுநன்றிக்கிழங்கி ஞெடுவெட்டி வகைவகைக்குப் பலமொன்று விபரமாக பாக மாய் சாபதனிலரைத்துப்போட்டு பத்திரியும ஜாதிக்காய் கரியசீரம் போகவே கார்கோலும் துருசு துத்தம் பொருந்தும் நல்லசீரகமும் தேவதாரம்.

276. தாறமொடுகொட்டம் ருமிச்சம்சந்தம் தனிமீரை மேதை கஸ்தூரியாகும் வாரமுடன் கோரோசனை வெண்

பின் அபினும் கிரிசாத்து அக்கருசித்தரத்தை மதுரமேலம் கீரமுட னோர்களஞ்சி இடித்தரைத்து கருத்தநல்லெண்ணை படி ஐந்துவிட்டு திறமாய் பாண்டமதிலெல்லாம் தீளரித்து மெழுகுபதம் வடித்துவையே.

277. வையேநீ தைலமதை சரீரம்தன்னில் வளர்சிரசு பாதமட்டும் தேய்த்துநன்றாய் செய்யேநீ சாமமது மூன்று சென்றால் செயலான வெந்நீரில் முழுகும்போது பையவே மண்டையிடி மண்டைக்குத்து பறக்குமடா நரம்புப்பிடி திமிருமாரும் உய்யவே அலவாடு ஜன்னிவர்மம் ஒருக்காலும் மாறாத மண்டைக்குத்தே.

278. குத்துடனே ஆயாசம் மயக்கம்விக்கல் கூறு கெட்டு ஓடுமடா கிறக்கம்தானும் சத்தியுடன் உச்சிவலி மூலச்சூடு சரம்பிலக்கும் நரம்புப்பிடி கொழுத்தும்தீரும் வித்தான உள்கொழுத்து மண்டைசூலை விரண்டோடும் வாத சுரம் முதலாய்த்தீரும் சித்தான காயமுதல் வர்மம்தீரும் திரு மேனிஎண்ணெயிது தரணியோர்க்கே.

279. தாரணியில் மனுவோர்கள் ரோகம்தீர தன்வந்தி ராதிஎண்ணெயொன்று சாற்றக்கேளு சீரணியும் வேம்பு புங்கு முருங்கைசென்னை சிறந்தபாவிலங்கு அழிஞ்சி செங்கந்தாரி வராணியும் தாணிகொன்றை அரசு அத்தி வளமான இவை களுடபட்டையாகும் பட்டையுடன் யாழியும் வெள்ளை நொச்சி சித்ரமூலம் இருவாதமடக்கி ஆடல்அவுரிவேரே.

280. வேரோடே எழுத்தாணி ஆமணக்கின்வேரும் வேங்கையுடன் சாதல்பசும் மும்மூன்றாகும் வாறடாதூணி ஜலம் எட்டொன்றாக்கி வற்றவைத்து அதின்மேல்சார் கூறக் கேளே கூறடா கைதோனி குப்பைமேனி நிகர்வாதமடக்கி சங்குகுப்பி நொச்சி ஆறடா ஆமணக்கு முத்துதோடை அடர்நாறன் எருக்கலை வெள்ளருகுகாளி.

281. பொடுதலை பிரமிஇரண்டு வகையொன்றுசார் உறுதியாய்எடு வெவ்வேறாய் அளந்து ஆமணக்கெண்ணை எள் ளும் சென்னைஅழகான வேப்பெண்ணை ஆவின்நெய்யும்

வகையொன்று படிநாழி வீதம்வாங்கி நலமான கற்கவகை நவிலக்கேளு தாளிவிழாம்மல்லி திரிகடுகு பச்சை சந்தனம் மெண்டரத்தை சிறுதேக்குத்தானே.

282. தானனதாரம் வெந்தயமோடேலம் தனிவேப் பலாதாளிகொட்டம்வங்கம் ஆனைதாக்கோலம் சிறுநாகப்பூ அரத்தைதிப்பிலியுடனே அடுத்த திப்பிலிமானேகேள் சனி ஞாயர் மூன்றுசாதி மாஞ்சிகொப்பை செவ்வள்ளிழமம் கூரம்கோஷனை வாலுளுவை கஸ்தூரிமஞ்சள் கொட்டம் குளவிந்தம் குரோசானியாமே.

283. ஆமப்பா செவியமுடன் கார்சீர்கோழி அழுகு நறுநண்டு பொன்மெழுகு சோளம் போமப்பா பெருஞ்சீரம் சிவதைவேலி பூநாகம் ருமிச்சம் சாஸ்திரபேதி நாமப்பா குக் கில்நருக்குமூலம் கல்மதம் நவிலரக்கு மீமை செங்கிளநீர் மூலம்தாமப்பா ஓண்ணைகால் களஞ்சிவீதம் தவராமல்வாங்கி இடித்தரைத்துக்கொள்ளே.

284. கொள்ளுமுன் சொன்னஎண்ணை சாரோடெல் லாம் குணமாக உருளிதன்னில் அடுப்பிலேற்றி விள்ளுநீ அனல்மூட்டி வற்றக்காய்த்து வேருகபல்லுபதம் வருதல் கண்டு வள்ளுநீ கோரோசனை நீளத்திரத்திலிட்டு வடித்து வைத்து சனிபுதனில் மெழுகு உட்கொள் அள்ளிநீ மெழுக வெண்ணீர் வார்டிமெல்லாம் அருஞ்சுரமும் புறவீச்சும் வலியும் போமே.

285. போகுமேஉஷ்ணத்தால் வந்தமேகம் பொல்லாத இளைப்பிருமல் மந்தாரகாசம் கர்ணிகவாய்வு கபாலவாய்வு எப் பிளைப்பு பித்தம் சயம் சோகைபோகும் ஆகுமே மெய்நோயு நடுநடுக்கம் அனலெரிவு கைகால்கள் கண்ணுகாந்தல் வாகுமே புறமேகம் சொரிகரப்பன் வண்டுகடி சிலவிஷமும் மாறும் தானே.

286. தானன அரையாப்பு லிங்கப்புற்று தனிப்பவுந் தரம் மூலமுளை கண்டமாலை ஊனன குறைநோவு குட்ட

மூரல் யோனிப்புண் சூலைபிளவை வீக்கம் பாணுன கரப்ப ஞெடு கிரந்திவெப்பு பல்லாணை பல்லோசி பக்கசூலை வேருன கண்டத்தில் பொரியல் வெட்டை வெருப்பு தடிப்பு சொரிகள் போம் கண்டாயே.

287. கண்டாயே கரண்டியிடை உள்ளேகொள்ள கனத்தபக்க வாதமேகம் வாதந்தீரும் விண்டாயோ நடுக்கு வாதம் குடல்வீக்கம்போம் விசைநரம்பில் பட்டுவந்த முடக்கம்தீரும் மண்டபம் மூன்றதனில் வந்தமயக்கம்தீரும் மறை யோர்கள் முறைப்படியே செய்தபேர்க்கு பண்டான வர்ம வகை சயகாசங்கள் பறக்கும்இந்த எண்ணைமுறை பாடும் வாறே.

289. வாருன மாருடி நெய்யைச்சொல்வேன் வாழு மந்த கானகத்தின் பூனையொன்றின் கூருன தலையுடல் கால் தோலியும்தள்ளி கொத்தியதை முக்குருணி புனலிலிட்டு மாருமல் எட்டொன்ருய் வற்றக்காய்ச்சு மைந்தனே இருத்துப்பின் சொல்லக்கேளு தாருவும்தோடை கொற்ருன் தனியமிர்து நாயுருவில்லைவேரே.

289. வில்லையொடு செஞ்சட்டி இசங்குநற்றி வெண் குன்றி சீதாவேலிப்பருத்திவேரும் இல்லை இல்லை என்ற குருந் தட்டி கொடுப்பை விருலி இசுமான பொடுதலைவல்லாரை யோடு தொல்லைஎன்று எண்ணுதே பலம்பத்து துரிதமாய் கொண்டுவந்து சதைத்துஒக்க இருகுருணிநீரிலிட்டு தீஎரித்து எட்டொன்ருய் இருத்திவாங்கே.

290. வாங்கியே முன் கஷாயத்தோடேசேர்த்து வரிசையுள்ள கடைமருந்து வழுத்தக்கேளு தேங்கியே திரி கடுகு திரிபலைதான் திரிசாதி வால்மிளகு அரத்தைதேக்கு ஏங்கியே அதிமதுரம் மாயக்காயும் இருசீரம் கொம்பரக்கு ஏலம் சந்தம் ஆங்கிய திப்பிலி மூலம் சோளம் கோலம் அரிசி வகை ஆறுடனே அக்கருவே.

291. அக்கரா கற்கடகசிங்கிநாகம் அகில்பச்சை சடா மாஞ்சி கசகசாவும் மிக்கரு செண்பகப்பூ வங்கபத்திரி மேவரிய தாளிசமும் தேவதாரம் தக்கதாம் வெண்தூபம் கண்டிவெண்ணை தயவான சதகுப்பை வகையொன்றுக்கு ஒக்கவே ஓர்களஞ்சாய் இடித்தரைத்து உற்றகஷாயத்திற்கு எண்ணை கேளே.

292. கேளப்பா ஆவின்நெய் நாழியாகும் கெடியான நல்லெண்ணை மூஉழக்காகும் ஆளப்பா நிம்பெண்ணை உரியமாகும் ஆமணக்கின் எண்ணையது உரிதானப்பா வாளப்பா நீரொட்டி தெங்கினெண்ணை வகைக்குழக்கு சென்னை எண்ணைதானும்வாங்கி நாளப்பா முன்மருந்தோடொக்கச் சேர்த்து நலமான உருளிதன்னில் ஊற்றிக்காச்சே.

293. காச்சியே கல்லுபதமாகும்போது கலசமதில் கஸ்தூரி கோரோசனை வாச்சுதே மேதைமீரை வெண்காரம் தான் வடிசமனாய்இட்டு வடிகுப்பிக்குள்வை ஆச்சுதேகாண்டியிடை ஆறுநாளும் அப்பனே நோய்தேகம்வயசுகண்டு போச்சுதே சயங்கள் ஈடுகாயமெல்லாம் பொல்லாத குவளை வலி கபமிளைப்பே.

294. இளைப்போடு குத்திருமல் ரத்தவாடை எப்பிளைப்பு தேளை இடி கைகால் கடுப்பு களைப்போடு குருக்குளைவு கொழுத்துக்குத்து கண்ணெரிவு தலைச்சுற்று உச்சிக்குத்து உளைவோடு வாதபித்த சிலேற்பனத்தாலே உண்டாகும் வர்மமொடு உள்ரோகம்போம் களைப்பாகும் தேகமெல்லாம் பொன்போலாகும் தாது பெலமுண்டாமே தாணியோர்க்கு.

295. தாணியோர்க்கின்னமொரு நெய்தான் கேளு தானென வெள்ளாட்டின் குருக்கெலும்பை சாணமென்று எடுத்துவந்து கொத்தி நன்றாய் சதைத்துடனே இளநீர் வெள்ளம் பதக்கிலிட்டு நிற்ணயமாய் எட்டொன்றாய் இறுத்து வைத்து கேளுநீ ஆவின்நெய் நாழியாகும் நாணமென்ற முத்தெண்ணை உரியாகும் திறமான நல்லெண்ணை நாழியுடனின்னும்கேளே.

296. கேளப்பா திரிகடுகு நல்சீரம் கெருடபச்சை ரெண்டு திரிசாதிஏலம் நாளப்பா அதிமதுரம் கொட்டமிச்சம் நல்லவெண் தூபமோடு கொம்பரக்கு தாளப்பா வால்மிளகு சிங்கிமூலம் தளர்சோலம் கோலம் சிறுநாகப்பூ ஆளப்பா செண்பகப்பூ முந்திரிகை அக்கரா அரிசிஆறும் களஞ்சொன் றொன்றே.

ஒன்றான குமரிச்சார் தேசிச்சாறும் ஒரிலேச்சார் தோடைச்சார் கொடுப்பைச்சாறும் நன்றாக வகைவகைக்கு நாழியாகும் நாயகமே கடைமருந்தை இடித்தரைத்து நன்றாக அடுப்பேற்றி அனலேமூட்டி ஐயனே கல்லுபதம் வடித் தெடுத்து குன்றுமல் கரண்டியிடை ஆறு நாளுண்கூட் டோடே வர்மமெல்லாம் குலைந்துபோச்சே.

298. போச்சுதே அஸ்திசுரம் வரட்சைமேகம் புணர் சூடு கூம்புணர்தல் வரட்சைவெட்டை கோச்சுதேகொழுத்து வலி சயமிருமல் குவளைகக்கல் குருக்குவலி பல்நோய்தீரும் வாச்சுதே வர்ம வெள்ளாட்டினெண்ணை வைத்தருந்து வோருக்கு வயதுநூறும்.

299. நூறான சிறுஉழுக்கு சிறுபிடிகள் கலைமாய்த்தீர ஒருஎண்ணெ கேளு கேளப்பா முருங்கைபில் கரியுப்புமாகும் முறையுடனே சிவந்த கொடுவேலியின் கிழங்கும் இவை சதைத்து நல்லெண்ணை தன்னிலிட்டு தவராமல் மணல் பருவம் பதமாய்காச்சி பிடிஉழுக்குத்தலமறிந்துதடவத்தீரும் தீருமடா சொன்னமுறை தவராதப்பா தப்பாமல் ஒவ் வொன்றும் செய்துபாரே.

300. செய்துபார் குருமுனிவர் சொன்ன வார்த்தை ஜெக்மதிலொருபோதும் தப்பாதப்பா தப்பாமல்பாடிவைத்த நிகண்டகராதி நித்தியமும் சத்தியமும் நிறைந்தநூலே கலைத் திதனை கலைகாண ஜெகமுள்ளோர்க்கு புண்ணாகச்சொல்லி விட்டேன் முன்னூறும் முற்றே.

ஒடிமுறிவுஞானம் முற்றிற்று.

குருவேதுணை.

ஓம் பரப்பிரம்மணநம.

கடவுள் துணை

# வர்மசூஸ்திரம் ஐம்பது.

1. ஆதிபராபரத்தினுடனருளைப்போற்றி ஆனந்த குரு பரனின் அருள்தான் போற்றி கோதில்லா முப்பத்திரண்டு உருப்புக்களை குருமுறையாம் ஈரெங்கிநூறு சொன்னேன் நீதிவழுவாததொரு வர்மமெல்லாம் நிலவரமாய் சொல்லிவிட் டேன் நிலத்துள்ளோர்க்கு வேதனைகளில்லையடா சூத்திரந்தான் ஐம்பதுக்குள் விளம்புறேனே.

2. விவரிப்பேன் எண்ணையொடு கஷாயம் கிருதம் மேலான தடவுமுறை கஷாயந்தானே நிவரிப்பேன் ஒற்றல் பாகந்தான் நிர்ணயமான குருமுறைதான் இதுபோலுண்டோ சௌகரிப்பேன் சண்டாளர் அறிவாரோதான் சாஸ்திரத்தைப் புரட்டி வைப்பான் சாதிக்காரன் எவருக்காய் இந்நூலை சொன்னேனென்றால் எண்ணெழுத்தை அறிந்தவர்க் கியம் பினேனே.

3. இயம்புகிறேன் ஆசானை அடுத்துக்கேளு இல்லாவிட் டால் எவர்க்குந்தான் வம்புரைத்த வழிகள்போலே வழிகளெல் லாம் வகைவகையாய் வகுத்துவைப்பேன் வளமாக நயம் பெறவே சாத்தியமசாத்தியம் நன்றாராய்ந்து நாடிபார்த்து நலம் பெறவே சாத்தியங்கள் நன்றாய் ஆய்ந்து சூட்சமுள்ள மருந்து வகை துணிந்து செய்யே.

4. செய்வது குணங்களுட குறியறிந்து குருவருளால் குருதொட்டுக்காட்டிச் செய்தால் நைவதென்றால் நோயதுவும் நழுகிப்போகும் நல்முறையாய் நானறிந்து நாட்டில்வைத்தேன் பொய்யருக்கும் புரட்டருக்கும் பலியாதப்பா புண்ணியவானு னுக்கால் பலிக்கும் சூட்சம் எய்வதெல்லாம் எவருக்கும் கிடைக் கும் சொன்னேன் இல்லாவிட்டால் கிடையாது எரியில் வீழ் வான்,

5. எரிதணிலே விளாமல் குருவைப்போற்றி இணங்கு மொழி பிசகாமலிசைந்தால் சரிசரி என்று உலகர் முன்னமே பாரு சாஸ்திரத்தை மெய்யென்று நம்புவார்கள் அரிதான நாலுண்டு திறவுகோல்தான் அடங்கல்முறை பதினாறில் அடக்கி வைத்தேன் நரி எய்த்த வகைபோலே எயாமல்தான் ஆசாரம் குருவோடே நாடிநில்லே.

6. நாடிநின்ற வகையைக்கேளு குருவைத்தானே நல் மனதை வருத்திக்கோ நாள்தோறும்தான் தேமிக்கோ குரு வசனம் மறவாமல்தான் தினம்தினம் தான்கேட்டு திடம்கொண் டாக்கால் பேடிபில்லை என்னேயும் செய்தால் வாய்க்கும் பிச கொன்றும் இல்லையடா பேணிக்கொள்ளு சோடித்துநான் புகல் வேன் எல்லோருக்கும் சூட்சநிலையறியாமல் துள்ளுவாரே.

7. துள்ளாமல் செய்வதற்கு சாத்தியங்கள் சுறுக்காக திறவுகோல் தான்திறந்து பார்த்தால் விள்ளாதே திறவுகோல் அதுவின் மேன்மை தேர்ந்தோர்க்கு வேதனைகளில்லையடா விரித்துச்சொன்னேன் தள்ளிவிட்டுக் கொடுத்தாக்கால் தன் மாத்திரைமீறி சாவார்கள் பாவமடா சாபந்தானே.

8. சாபந்தான் எய்யாமல் சார்ந்துநில்லு தன்மையுள்ள அம்பிகையும் சார்வதாகும் சார்வான கண்டங்கத்திரிக்கிருதம் சொல்வேன் பழையவர்மம் சயம் முதலாய் தீருதற்கு காவதி லேகத்தரியும் தோடைரெண்டும் கணக்காக வகைசாறு படியதா கும் நாவதிலே பசுவினுட நெய்யும் நாழி நாட்டுகிறேன் கெதிப் பெண்ணை நாழி.

9. எண்ணையுடன் கர்க்கவகை இயம்பக்கேளு எடு சுக்கு திப்பிலியும் அரத்தை ஏலம் திண்ணமுடன் வால்மிளகு அக் கறு சிங்கி சேர் வகைக்குக்களஞ்சியடா திறமதாக நண்ணறி வாய் பூநாகம் பலமதஞ்சு நணுக்கமுள்ள மயில்துாவல் கரிய தொன்று வண்ணமுடன் இதுகளெல்லாம் கலந்துவற்றி வடி பருவவேளையிலே பாத்ரபாகம்,

**10.** பாத்திரத்தில் வெள்ளையடா ருந்திரிக்கம் வடியிடு ரோசனையும் வகைக்குக்களஞ்சி சூத்திரமாய் மெழுகு பதம் வடித்து வாங்கி சுருக்காக கரண்டியளவுள்ளேகொள்ளு கொள் ளேநீ ஈறுறு வேளையப்பா தன் மக்கள் பத்தியம்தான் விட்டி டாதே ஏத்திவிடு எட்டாம்நாள் முழுகச்சொல்லு இசைவாக விடு பத்தியம் நிறுத்திக்கொள்ளே.

**11.** பத்தியம் தானில்லாமல் முழுக எண்ணை பாடு கிறேன் குருந்தொட்டி இசங்கு நன்றிமுற்றன தாய் தளுதாளை மூலமப்பா முறையோடே வகைவகைக்குப்பலம்தான் பத்து கொத்தியரிந் தறுகுருணி எட்டொன்றுக்கி கூசாமல் அரித்தெ டுத்துத்தான் கூறக்கேளு சாத்தியமாய் கோவையொடு மொசு மொசுக்கை தானடித்து வில்லையொடு இலைசாறு நாழி.

**12.** சாருடனே கடைச்சரக்குச்சாரு கொட்டம் தனி ஏலம் மதுரமுடன், சீரகம் கூறுகிறேன் குரோசாணி கிரும்பு மூலம் கொழுத்த சந்தம் இருவேலி கோலத்தோடு வீறுடனே பலம் ஒன்றாய் வாங்கிவிட்டரைப்பாய் பசுவின்பால் நாளிதன் னில் வீறுகொள்ள நல்லெண்ணை நாழிதன்னில் விட்டொன் றாய் அனல்மூட்டி எரித்துவாங்கே.

**13.** வாங்கியது சரல்பருவம் வடித்துக்கொண்டு வள மாக வென்னீரில் மெளுகும்போது தாங்கலில்லா நரம்புப்பிடி உளைச்சல் குத்து தாகமுடன் இளைப்பும் சயகாசங்கள் ஏம மொடு கிருக்கும்சத்தி இடறுசெய்யும் வாதமுடன் காயந்தீரும்.

**14.** தானுன கருங்கோழி தைலம்தன்னை தாணியோர் மெய்த்டவே சொல்லக்கேளு மானே கேள் கோழி குடல்தூவல் தள்ளி வகையாக துண்டித்து குருணிநீரில் கோனேகேள் எட் டொன்றாய் குருக்கி வாங்கி குருந்தொட்டி கட்லாடி உளிஞெ மூலம் ஏனஉடன் வகை பலம் பத்தாய்க்கொண்டு இன்பமாய் முக்குருணி எட்டொன்றுக்கே.

**15** ஒன்றுக்கு கிளாயமதில் விளக்கின் எண்ணை உத் தமமேன நறுநெய்யும் எள்ளினெண்ணை மன்றாக வகைநாழி சேர்த்துக்கொண்டு வாங்குவாய் திரிஜாதி மதுரம் சீனம் நன்

ரான திப்பிலியும் விடயம் ஏலம் நாட்டுமல்லி வெந்தயம் கோரோசனைதான் குன்றுமல் வகை பலம் காலாய் வாங்கி குணமாக இடித்து வடித்தரைத்துச்சேரே.

**16.** அரைத்துடனே கரைத்தொன்றாய் பாண்டத்தூற்றி அணல்மூட்டி காய்ந்துபற்றி மெழுகதானால் உரைத்தபடி தப்பாமல் வடித்துக்கொண்டு உத்தமனே உண்டிடுவாய் ஈராறு வேளை திறமுடனே உண்டிடவும் பத்தியமுங்கேளு திறமாக புளியும் புகையிலையும் தள்ளு தூரத்துதற்கு வெந்நீரால் முழுகுவாய் நீ சுகமாகத் தீருகிற நோயைக்கேளே.

**17.** கேளப்பா காயமுடன் சுமைகபங்கள் கெடியான குரல் கம்மல் கொழுத்து நோவு நாளப்பா சேரரைக்காயம் வறள்காயம்தான் நடுக்கமுடன் கிரிவுடன் மெலிவு கைகால் சூளப்பா குத்துடனே விக்கல் ஈளை சுழுக்குடனே நெஞ்சுமாரடைப்பும் தூளப்பா பருதி முப்பனி போலாகும் சுகமான தைலமது துணிந்துசெய்யே.

**18.** துணிந்துசெய்ய பஞ்சாதிக்கஷாயம் கேளு தூதுவளை இசங்குடனே கண்டங்கத்திரி பணிந்தவில்லை சித்தாமுட்டி வகைசேரு பலம் பார்த்தெடுப்பாய் இளநீர்தான் படியே யொன்று இட்டுவைத்த கஷாயமதில் சமனாய்க்கூட்டே.

**19.** கூட்டுவாய் கொம்பரக்கு களஞ்சி ஆறு குணமாக சதைத்து ஒருகிளியாய் கெட்டி வட்டமில்லாமுன் இளநீர் கஷாயத்திட்டு வகையாக படி இரண்டும் எட்டொன்றாக்கி நாட்டமுடன் இருநேரம் சீனிபோட்டு நன்றாக அருந்திடுவாய் திரிநாள் வட்டும் கூட்டிடலாம் அதுவோடு கிருதம் சேர்த்துக் கொண்டிடுகில் திண்மையது கூறப்போமே.

**20.** கூறுகிறேன் குக்குடக்கஷாயந்தன்னை குடல்சிறகும் வால்தலையும் காலும் தள்ளி மாறுபட துணிகையுடன் துண்டு துண்டாய் அறிந்திட்டு பாண்டத்தினில் வீருள்ள நன்னாரி வேடன் வேரும் வெண்டும் வகை பலங்கள் ஐந்தாய்க்கொண்டு ஆறுமடா முக்குருணி அடுப்பதினில் அடவாக அணலெரித்து வற்றக்காச்சே.

21. காச்சியிட்டு மூன்றுபடி குறுக்கிக்கொண்டு காலை யொடு மாலையுடன் இருநேரம்தான் துச்சமுடன் ஈராறு நேரம் தான் துடர்ந்துகுடி புத்தியம்புளியுமப்பா போச்சுதடா தேக மதில் கொண்ட காயம் துடித்து மயங்குகின்ற வர்மமெல்லாம் மூச்சுவிடாக் கொளுத்துடனே பிடித்தநோவு முடக்குமுதல் இழுப்புடன் ஓடும்தானே.

22. தானனை மிளகுவேர் கஷாயம் கேளு சர்வசுரம் ஈடு முதல் ஓடிப்போக மானனை மிளகுவேர் வளயமுட்டி மாதோடை உளிஞு குட்டிநத்தைசூரி தேனனை நற்கொளிஞ்சி காஞ்சொறி அமிர்தெனவே மாதுளை மூலம் மானனை திரிகடுகு திரிபலாதி இசைந்த கடகசிங்கியொடு அரத்தை.

23. வாங்குவாய் புடலமொடு அமுக்கூரம்தான் வகை வகைக்குக்களஞ்சிரண்டு ஆங்குடனே சதைத்திடு கஷாயம்முன் போல் முன்போலே எட்டொன்றுக்கி சீனிபோட்டு பாங்கு டனே பத்தியமாய்குடி யப்போது பறக்குமடா உடல்கொழுத்து சுமை கபங்கள் எச்சலில்லா மூச்சடைப்பு திட்டுமுட்டு எங்கே என்று ஓடுமடா இசைந்து கொள்ளே.

24. இசைந்துகொள் கஞ்சியொன்று இடவே நீர்க்க எடுத்திடுவாய் சிற்றுமுட்டி உளிஞு இரண்டு அசைத்திடித்து பலம் பத்து தூணிநீரால் வழுவாமல் குறுணியதாய் குறுக்கிக் கொண்டு துயர்நெடுப்பாய் ஆதாளி அரிதானென்று துகை யுடனே அரிசியாறு அமுக்கூரம்தான் கடையாக குறுக்கி ஆறு படிதானுக்கி கட்டாகக் குடித்திடுவாய் காலைமாலை.

25. மாலையிலே குடித்திடுவாய் ஈராறு வேளை மாறிவிடு புளியுப்பு மறைத்திடுநீ சாலவே சயம் விக்கம் அரோசியம் சாத லுடன் தளர்ச்சையுமே சார்ந்திடாது பாலருடன் கிழவருக்கும் கர்ப்பிணிக்கும் பாச்சடா கஷாயமது புரிந்துசெய்தால் தால மதில் பிறந்தவற்கு ஈடுமுண்டோ சண்டாளர்க்காகாத சரணம் தானே.

26. தானனை பூச்சொன்று சொல்லக்கேளு தல்லு இடு சலதுநோவு முரிவுக்கெல்லாம் வானனை மரமஞ்சள் வரட்டு மஞ்சள் வகையான சுக்குடனே சதையின்குப்பை நேமமுள்ள

ஓரிலை முருங்கையிலையும் எள்ளும் எடுத்திடுவாய் வகைவகைக்கு
சமனாய் வாங்கி பாலுமுள்ள மதுதன்னில் அரைத்து வெதும்பி
பாங்காகத்தானெடுத்துப் பூசினுக்கால் வீணசனைநோவு குத்து
களைப்பு விக்கல் வடிநரம்பில் திமிருடனே உளைச்சல் போமே.

27. போமப்பா தாரையொன்று புதுமையாக புகட்டு
வேன் உலகத்தோர் பிளைக்கவென்று நாமப்பா நறுநெய்யும்
எள்ளினெண்ணை நலமுடனே எரெண்டத்தெண்ணை மூன்று
தாமப்பா குமரியுடசாரு நாழிதயவாக சீனியது உளக்கே
போட்டு ஓமம்பா நெல் பொரியும் பருவம் பார்த்து உத்தமனே
தானிரக்கி நோவில் போடே.

28. போடப்பா சர்வசயம் தீரவென்றால் பொடியொன்று
சொல்லுகிறேன் கூரக்கேளு நாடப்பா இஞ்சி சீரகம் சுக்கு
மல்லி நாயகமே களஞ்சி ஐந்ததாகும் தேடப்பா திப்பிலியும்
விடையம் ஏலம் திடம்பெறவே வகைவகைக்குக் களஞ்சி
யொன்று கூட்டப்பா ரோசனை அரத்தை சுக்கு அக்கரா குண
மான வால்மிளகு மதுரம் வாங்கே.

29. வாங்குவாய் இடைபிசகாமல் களஞ்சிரெண்டு வருத்
திப்பிடி சூரணத்தை சீனிசேர்த்து பாங்குடனே பத்தியமாய்
கொண்டபேர்க்கு பறக்குமடா கொளுத்து சுரம் தாகம் மேகம்
ஏங்கலுட் இழுப்பு கபம் ஈளை காயம் சுமைகள் திகட்டிசார்த்
தல் பேதி சீதம் தாங்கலில்லா ஆயாசம் கிறுக்கம் மூர்ச்சை
தளர்ச்சையொடு சயம் காயம் தீரும் காணே.

30. காணப்பா ஷீகாழியுட கஷாயம் கேளு கருத்தாமல
முத்தமொடு கொடிப்பை முட்டு நாணப்பா உளிஞெயொடு
பொடுதலை வில்வம் நல்பருத்தி வெண்குன்றி கருத்தச்சுண்டை
தோணப்பா தக்காளி வேப்பின் பட்டை குருக்குடனே செந்
தட்டி அருகு சூரி காணப்பா பணப்புல்லு விஷ்ணு மூலி நல்
தாறு வல்லாரை உருவிவேரே.

31. வேரோடே இதுகளெல்லாம் களஞ்சிரெண்டு
விள்ளுகிறேன் ஏலம் சுக்குச்சாரோடு வால்மிளகுப் மதுரம்
ஏலம் அக்கரு சாநதமுள்ள சிரகமும் திரிகடுகும் சேரடா அரி

ஆறும் ஓமம் இரண்டும் திடம்பெறவே அமுக்கூரம் மாஞ்சிக் காரம் பாத்தியே வகைரெண்டு களஞ்சி வாங்கு பாலகனே சிவந்த உள்ளி உளக்குரெண்டு.

32. ரெண்டோடே குக்குடம் கால்போக்கி குணமாக நாலுதுண்டாய் தரித்துக்கொண்டு கண்டாயோ நால்நாழி இரு குருணி புனலதிலே சுருதி வெந்துவிண்டாயோ ஆறுபடியாக்கிக் கொண்டு விள்ளுகிறேன் இருநாளியதிலேவாங்கு முண்டாயோ இளநீர் பால்வகைக்குநாழி முறையோடே நால்படியொன்று யாக்கே.

33. ஆக்குவாய் கொம்பரக்கு குங்குமப்பூ அடவாக வகைக்கு ஒருகளஞ்சி வாங்கே தாக்குவாய் கிழிகட்டி அதிலே போட்டு தயவாக எட்டொன்றாய் இருத்துவாங்கி நோக்கவே இருகளஞ்சி மீரை சீனி நுணுக்கமுடன் மேல்சேர்த்துக் கொண்டபோது நாக்குமடா சர்வ ஈடகன்றுபோகும் சதை செய்யும் கொழுத்துகடம் சாறுதென்றே.

34. சாறுமலிருப்பதற்கு முறிவுகட்கு சாந்தமுடன் ஒற்றல்லொன்று சொல்லக்கேளு தயாவின் இலையைவாங்கி கூறுமல் ஒருபிடிதான் சதைத்துக்கெட்டி குணமுடனே நல்லெண்ணே தனிலேவெந்து பாராமல் முறிவுதான் சவக்குமட்டும் பார்த் தெடுத்து அனத்திவிடு பாகமாக ஆருக்கும் சொல்லப்போமோ இந்தப்போக்கு அறிவுள்ளோரறிவார்கள் அறிந்துசெய்யே;

35. செய்வதற்கு ஆலம்பால் எண்ணேகேளு செகத்தி லுள்ள மானிடற்கு முறிவுதேர வசமான ஆலம்பால் நாழி கூட்டி கட்டாகவே காட்டுச்சி சதைதான்நாழி வையகத்தோர் வலியான தோலும்லொன்று மொய்வதுகேள் நன்னாரி முமிச்சோடு உத்தமனே வகைவகைக்கு களஞ்சிரெண்டுவாங்கே.,

36. வாங்கியே இடித்ததெல்லாம் ஒன்றாய்சேர்த்து வழ மாக நல்லெண்ணே நாழிதன்னில் வாங்கியே அடுப்பேற்றி சிறு தீபம்போட்டு தப்பாமல் கிண்டிவடித்துக்கொண்டு நீங்காமல் தைலமிட்டு நவநாள்மட்டும் நினைவோடேசெய்துவர வாய்கும் சொன்னேன் தூங்காத ,புண்புரைகள் முறிவுகெட்டு சதை தள்ளல் சாறுதென்றே.





37. என்றபொரு முறிவுகண்டவர்களுக்கு குளிக்க எண்ணெ விளம்புகிறேன் விளம்பவே மேனிச்சார் காணுச் சாரும் நன்றெனவே வகைசாறு நாழியாகும் நலமான திரிகடுகு தகரம்கொட்டம் மானேகேள் சனிஞாயர் அரத்தைபாலே வழமாக வகைவகைக்கு களஞ்சிரெண்டாம் ஒன்றுகசேர்த்தரைத்து எண்ணெநாழி உத்தமனே சேர்த்தொன்றாய் கலந்துகாச்சே.

38. காச்சியே வடித்திடுவாய் சரல்பருவம் கைகண்ட தைலமது குளித்துவந்தால் போச்சுதடா நரம்புப்பிடி அசைவு நோவு புண்போலே நோவுகின்ற நோக்காடெல்லாம் காச்சலொடு கண்மயக்கம் கண்வீக்கம் கண்வலி காதில்வலி கவிட்டல் நோவும் மூச்சப்பா விடுமுன்னே தீருமென்று முனியுரையின் வாக்கியத்தை முகந்துசெய்யே.

39. முகந்துசெய்ய வசவெண்ணெ வைக்கும் மார்க்கம் முறையோடே சொல்லுகிறேன் குமரி நீரும் புனைந்து பழம் பிளிந்தெடுத்து சாகம் ரெண்டும் புனை முருங்கை இலைச்சாகம் கூட்டச்சேரு நனையாமல் தனிச்சாகம் வகைக்குளக்கு நல் எண்ணெ தேங்காய் நெய் ஏரெண்டெண்ணெ ஆனநடை வகைக் குளக்கு அதுவோடொக்க அடக்கிவை தோடைவேர் கசகசா வேர்.

40. கசகசா நன்னாரி சூரைவித்தும் கட்டாக முக் களஞ்சி கருதியாட்டி அசவில்லா தொண்டோடே அரைத்துக் காச்சி அழகான மெழுகுபதம் வடித்துக்கொண்டு வசையாகப் பொரிதனிலே முக்கூட்டிட்டு வளமாகத் தடவி வந்தால் வசனிப்பேன் கேள் வசையாத தலமுண்டோ மருந்துகண்டால் மடையருக்கும் மட்டிகள்க்கும் வசனிக்காதே.

41. தோடைவேர் கஷாயம் தன்னை சொல்லக்கேளு வகையான தோடைவேர் பலம்தான் பத்து வகையாகத்தரித்துக் கொண்டு இசைவுடனே கொம்பரக்கு களஞ்சிமூன்று பொடித்துக் கிளிகட்டி எசவுடனே எட்டொன்றாய் வற்றக் காச்சி நினைவாக அரித்தெடுத்து வைத்துக்கொண்டு அசைவுடனே தேன் சீனி மேதை அரிசியிடை இட்டிருந்த அகலும் நடை

42. சொல்லுவேன் ஆடாதோடை நெய் இதனை ஈடென்ற சகலசயம் தீரவென்றால் இயம்புகிறேன் தோடைவேர் கண்டங்காரி நாட்டுகிறேன் நிலவாகை நன்னாரிசிந்தல் நல்சந்தம் வில்லை முத்தம் இங்குருவி காட்டிலுள்ள கருந்துடரி கருத்தச் சுண்டை காஞ்சதாவேலி வெள்ளருகு உளிஞ தூதுவளை கூட்டுவாய் சாரணைவேர் படர்தாளி குணமான வளையமொடு தாராவேரே.

43. வேரான இரண்டுபத்து பலமாய் வாங்கி விள்ளு கிறேன் தூணி நீரொன்றாக்கி காருவின் நெய்படிதா னென்றுசேரு கடைமருந்து சீரகம் இரண்டு கற்கடக சிங்கி நேரான திரிசாதி திரிகடுகு நிலமதுரம் கொட்டமொடு விடயம் குப்பை சேரடா வேப்பிலை அரத்தை மாஞ்சி திடமுள்ள வால் மிளகு ஏலம் மல்லி.

44. மல்லியடா கெருடக்கல் தகரம் ஓமம் வாங்குவாய் கோரோசனை கல்மதமும் தங்கம் சொல்லிவிட்டேன் வெள்ளி யொடு வகைக்கு ரெண்டு துணிந்தெடுத்துப் பாகமுடன் பொடி யும் செய்து அல்லலில்லா தோடை கத்திரி கையான் சங்கு அரிகரும்பு தூதளைப்பூ சோலம் சட்டிவல்லியரே வகைக்குச் சாகம் படியாய் வாங்கி வெள்ளாடு உடும்புரத்தம் படிவாங்கே.

45. வாங்கியே இதுகளெல்லாம் ஒன்றாய்ச்சேர்த்து வரும் பாண்டம் அதிலூற்றி அனலேமூட்டே ஓங்கியே கிண்டி வற்றி மெழுக்தானால் குருபொருளை தாள் நினைந்து வடித்துக் கொண்டு தாவுகின்ற நோயாளி தனக்குநெய்யை துடமொன்று ஈறாறு நேரம்கொண்டால் ஏங்கியே ஓடுமடா தோடை நெய்யால் என்சொல்வேன் தீரும் நோய்தன்னைக் கேளே.

46. கேளப்பா வருமமது நூற்றெட்டால் கொண்ட கேடு சயம் எட்டுடனே வாட்சை ஈளை நாளப்ப அஸ்தி சுரம் அஸ்தி காச்சல் நாடோறும் வந்திடும் காந்திச்சூடு சூளப்பா அரோசிகமும் கிராணி வாய்வு சுளுக்குடனே கொளுத்துவலி வன்னி கடைத் துரும்புபோலே துலங்குமடா நெய்யுனுட பெருமைதானே.

47. பெருமைபெரும் சாத்தியத்தின் குணத்தைக் கேளு பலத்த பித்தகாடியது பிசந்துதானல் அருமையுள்ள வர்மத்தில் அணல்தான் மீறி அடங்கல் தலம்தான் குளிர்ந்து முரிவு குன்னும் திருதிரென நெஞ்சிவிடி ஏங்கல் விக்கல் திட்டுமுட்டு கொளுத்துடனே சுவாசம் காணும் வருங் கபங்கள் குலகோபோலே அப்பனே சத்தில் வரும் வாகான அன்னமது திகட்டும்பாரே.

48. காணுது நாடிநிலே மூன்றும் பம்மும் கண்மயக்கம் காச்சல்சுரம் கடினம் காணும் தோணுது சொல் குளறும் மறதி மெத்த துப்பல் கபம் அடிக்கடிதான் சுழட்டும் வாய்நீர் காணுது பித்தமுடன் புலம்பும் தோற்றம் நடுநடுங்கி வாய் குளறும் நடுக்கம் காணும் வானளை வாங்குமிந்த குறிகள் கண்டால் வையகத்தான் இதையறியான் மயங்குவானே.

49. மயங்காமல் சொல்லிவிட்டேன் குறிகுணத்தை மாய்கையிலே வீளாமல் வழியில் நில்லு தியங்காதே சூஸ்திரத்தில் சொன்னபாகமது துணிந்து முறை பிசகாமல் மருந்தைச்செய்தால் பயங்காட்டி ஏழைகளைக் கெடுக்க வேண்டாம் பழநூலை நீ அறிந்து பார்த்து நில்லே

50. நில்லென்ற வழிதப்பி நடந்தாயானல் நிலம் இரண்டும் வாய்க்காது நிலையாய் சொன்னேன் சொல்லொன்றும் தப்பாது சூட்சம் பாரு துணிகரமாய் வினையொன்றும் செய்ய வேண்டாம் நில்லானமகள் மதிகேடு செய்யவேண்டாம் முறைப்படியே நடப்பவருக்கு பலிதமப்பா பாரான புறங்கடந்து பாராதோர்க்கு பாக்கியமே இல்லையடா சூட்சம் சூட்சம் பண்டான முறையிதுவே வர்ம வைத்திய சூஸ்திரம் பார்தனிலே பாடிவைத்தேன் ஐம்பதிற்குள் ஐம்பதினிலடக்கமது பதினறுகும் ஆகமுள்ள பீரங்கி நூறுமாகும் நூலதனை சொல்லிவிட்டேன் நுட்பமாக நீயறிந்து செய்திடுவாய் நூலும் முற்றே.

வர்ம வைத்திய சூஸ்திரம் முற்றிற்று.

குருவே துணை.

## வர்ம அளவுநூல் உரை.

1. கண்டத்தின்மேல் திலர்தக்காலத்திலிருந்து சீறுங் கொல்லியுள்பட சுற்றளவை எடுத்து இரண்டாய் மடக்கிப் பார்த்தால் சீறுங்கொல்லியும் திலர்தக்காலமும் அறியலாம் அதை இரண்டாய் மடக்கினால் திலர்தக்காலத்திலிருந்து ஒட்டுவர்மமும் செவிக்குற்றிக்காலமும் குறுந்துக்குற்றியும் சுளியாடி வர்மமும் உச்சிவர்மமும் கோர்சைக்காலமும் அறியலாம் அதுபோல் இடமும் வலமும் கண்டுகொள்க.

2. அதை இரண்டாய் மடக்கினால் நட்சத்திரக்காலமும் மின்வெட்டி வர்மமுமறியலாம் அதை இரண்டாய் மடக்கினால் கண்ணுமணி வர்மமும கண்ணாடிக்காலமும் பாலவர்மமும் அறியலாம். பின்புறத்தில் சீறுங்கொல்லியிலிருந்து நாலாய் மடக்கி கீழ்நோக்கி வளமுடிந்த வர்மமும் காக்கட்டைகாலமும் நெட்டிவர்மமும் அறியலாம் அதுபோல் இடத்தும் வலத்தும் உண்டு

3. கண்டத்தில் தொண்டை நடுவில் அளவெடுத்து இரண்டாய் மடக்கினால் முன்நாக்குத்தள்ளி வர்மமும் பின் நடுக்கு வர்மமும் அறியலாம் அதை இரண்டாய் மடக்கினால் கண்டத்தில் இடத்தும் வலத்தும் நடுக்குவர்மமும் காரக்குளி வர்மமும் அறியலாம் அதை இரண்டாய் மடக்கினால் கீள் தும்மிக்காலமும் மேல்உறக்கக்காலமும் வலது பக்கத்து நேர் மூத்திரக்காலமும் அறியலாம் இதுபோல இடத்தும் வலத்தும் உண்டு.

4. தும்மிக்காலத்திலிருந்து கீழ்பக்கம் உந்திவர்மத்தை அளவெடுத்து இரண்டாய் மடக்கினால் நேர்வர்மம் அறியலாம் நேர்வர்மத்திலிருந்து வலதுபக்கம் அளவெடுத்தால் அடப்பக்காலம் அறியலாம் அதின் கீழ்ப்பக்கம் பார்த்தால் சுருதி வர்மம் அறியலாம் மேல்ப்பக்கம் பார்த்தால் புஜவர்மம் அறியலாம் அதை இரண்டாய் மடக்கினால் நடுக்குவர்மமும் எல்லு

வர்மமும் அறியலாம் கீள்உருமி வர்மமும் அறியலாம் இத்தனையும் பரந்த அளவில் அறியலாம்.

5. முன்மார்பு குதிக்காலம் இரண்டும் நேரே அளவெடுத்துப்பார்த்தால் மேல்பக்கம் திவளக்காலம் அறியலாம் வெள்ளீரல் வர்மத்தையும் அறியலாம் கீழ்காரீரல் வர்மத்தையும் அறியலாம் அதை இரண்டாய் மடக்கினால் சித்திரைக்காலமும் எலும்புருக்கியும் அறியலாம் அதுபோல் வலதுபக்கம் அளவுநூல் சரி அத்திக்காந்தாரியின் கீழ்பக்கம் எலும்பு வர்மம் நேரே மேல்பக்கம் காரீரல் வர்மமிது நாலுக்கும்நடுவான ஸ்தலம் குற்றிக்காலமும் உந்தியிலிருந்து சடையாந்த காலமும் சுற்றளவு எடுத்து.

6. அதை இரண்டாய் மடக்கி இடத்தும் வலத்தும் உந்திக்கு நேரே மேல் இளங்குருந்து வர்மமும் அதை இரண்டாய் மடக்கினால் சிறிய அத்திச்சுருக்கியும் அந்த அளவில்தானே நேர்வலிய அத்திச்சுருக்கியும் அதை விலகி நேர் அளவில் முண்டெல்லு வர்மமும் இதுபோலே இடத்தும் வலத்தும் உண்டு.

7. வளமுடிந்த வர்மத்திற்கு கீழ்உந்தி வர்மத்திற்கு மறுகாலமும் அதை அளவெடுத்து இரண்டாய் மடக்கினால் கொம்பேரி வர்மத்தை அறியலாம் அதை இரண்டாய் மடக்கினால் நெஞ்சில் நடுக்குவர்மத்துக்கு மறுகாலம் மேலறியலாம் கொம்பேரி வர்மத்துக்கு மறுகாலம் கீழ்ப்பாகம் உருமிக்காலத்துக்கு மறுகாலம்அறியலாம்.

8. இனி பூட்டில் தள்ளெலும்பு மேல் எலும்பில் காக்கட்டை காலத்திலிருந்தும் நெடிய அளவெடுத் திரண்டாய் மடக்கினால் சிப்பித்தூங்கி ஸ்தலவர்மம் அறியலாம் அதை இரண்டால் மடக்கினால் மேல்பக்கம் சிப்பிவர்மம் அறியலாம் தள்ளெலும்பிலிருந்து மேல்பாகம் அந்த மடக்கை பிடித்தால் நாவரி எல்லுவர்மம் அறியலாம்.

9. சிப்பித்தூங்கி சதையிலிருந்து நேரே புறதாரை பிடித்தால் அகத்தில் வார்வர்மமறியலாம் மேல்சிப்பிவர்மத்தி

லிருந்து நேர்புறதாரை சிப்பி அசைவு வர்மம் அறியலாம் சிப்பி வர்மத்திலிருந்து அளவெடுத்தால் கைப்புஜ பொருத்து அறியலாம் இதுபோலே மறுபுறத்தும் உண்டு.

10. சிப்பி வர்மத்திற்கு அகதாரை புஜவர்மத்தை சேர்ந்ததில் பள்ளையின் உள்ளேகொண்டது மறுகாலம் புஜ வர்மம் அதற்கு இடத்தும் வலத்தும் உள்ளே கொண்ட வர்மத்திற்கு புறதாரை மறுகாலம் என்றறிக உந்தியிலிருந்து கீழ்பக்கம் கல்லிடைக்காலம் வரை அளவெடுத்து இரண்டாக மடக்கினால் மூத்திரைக்காலம் அறியலாம் அதே அளவை மூத்திரக்காலத்திலிருந்து இடம் வலம் திருப்ப பதப்புவர்மம் அறியலாம்

11. பதப்புவர்மத்திலிருந்து அந்த நூலே அதே அள வோடு கீழ்பாகம் எடுத்துப்பார்த்தால் அகஉருளை விசை நரம்பு அறியலாம் கல்லிடைக் காலத்திற்கு மறுகாலம் தும்பு வர்மம் கல்லிடைக்காலத்திலிருந்து முன்சொன்ன அளவு பிரகாரம் வலதுபாகம் வித்துவர்மம் அறியலாம் கல்லிடைக் காலத்திலிருந்து அந்த நூலே இரண்டாக மடக்கினால் லிங்கத் தின் நடுக்குவர்மம் அறியலாம்.

12. அந்தநூலே கல்லிடைக்காலத்திலிருந்து கீழ்பக்கம் அளவெடுத்துப்பார்த்தால் மும்மூர்த்தி வர்மம் மூன்றும் அறியலாம் இந்த ஒன்பது வர்மமும் செய்யக்கூடாது செய் தால் கங்கைக்கரையில் காராம் பசுவைக் கொன்றபாபமுண்டு அகத்தில் சந்தெலும்பு சதையெலும்பு கீழ்படை காலு வெள்ளைகண்ணு சரிந்துவிட்டு வரும் அந்தநூலே இரண்டாக மடக்கினால் வரும் இடம் முறிந்தால் பிழையாது.

13 அதின் மேல்பக்கம் ஒருவர்மம் கீழ்பக்கம் ஒரு வர்மமும் அங்கே உண்டு அதை ரெண்டாக மடக்கினால் சரி யாய் முறிந்த ஸ்தலம் தொண்ணூறு கழியவேண்டும் அதில் அகதாரையும் புறதாரையும் இரண்டு வர்மங்கள் உண்டு நடு அளவிலிருந்து மேல்பக்கம் அளவைப் பார்த்தால் அகதாரை

யும் புறதாரையும் இரண்டு வர்மங்கள் உண்டு அடித்துடை மொளியுள்பட அகநரம்பு விசையுள்பட.

**14.** கீழ்பாகம் கீழ்நோக்கியும் மேல்நோக்கியும் வந்த வர்மம் எட்டும் நரம்பு முரிந்தாலும் பிசகினாலும் குற்றம் திராது முட்டுச்சிரட்டையுள்பட சுற்றளவெடுத்துப் பார்த்தால் சிரட்டை பிசகியிருப்பதை அறியலாம் அதை மூன்றாய் மடக்கினால் வலதுபக்கம் பதைப்புவர்மம் அறியலாம் அதிலிருந்து ஒரு சுற்றுவிட்டு மிச்சம் அளவெடுத்தால் மொளி பொருத்துவர்மம் அறியலாம் முட்டுக்கண்ணு வருமத்திலிருந்து கரண்டைக்கண்ணு அளவெடுத்து இரண்டாய் மடக்கினால் மேல்பக்கம் குதிரை முகமும் கீழ்பக்கம் நுனிநாக்கும் முரிந்தால் பிழையாது.

**15.** நுனிநாக்கு வர்மத்திலிருந்து கீழ்பக்கம் அதை இரண்டாக மடக்கினால் வயறாதி வர்மமும் மேல்பக்கம் தும்மிக்கால வர்மமும் தெண்ணூறு கழியவேண்டும் கபில் கண்ணும் பெருவிரல் நுனியும் அளவெடுத்து இரண்டாய் மடக்கினால் பாதசக்கிர வர்மம் அறியலாம் முரிந்தால் பிழையாது பாதசக்கிர வர்மத்தில் மேல்ப்பக்கம் பார்த்தால் மொளிப் பொருத்து வர்மம் அறியலாம் மறுபுரத்தில் கண்ணுவர்மம் அறியலாம்.

**16.** அதை இரண்டாய் மடக்கினால் கண்ணு வர்மத்திலிருந்து குதிங்கால் வர்மம் அதை இரண்டாய் மடக்கினால் நரம்பு நடுக்கு முடிச்சிவர்மம் அறியலாம் அங்கே முரிந்தால் பிழையாது இதுபோலே மறுபக்கங்களிலும் உண்டு மேல்பாகம் கையில் கமுக்குழி பொருத்திலிருந்தும் முளங்கை வெள்ளை மொளியிலிருந்தும் அளவெடுத்து இரண்டாய் மடக்கினால் நடுக்கு வர்மத்திலிருந்து மேல்பக்கம் பார்த்தால் அங்கே முரிந்தால் பிழையாது அந்த அளவை இரண்டாய் மடக்கினால் நடுக்குவர்மத்திலிருந்து மேல்பக்கம் பார்த்தால் அங்கே முறிந்தாலும் அங்கே முறிந்தால் பிழையாது நாற்பத்தொன்று கழிய வேண்டும்.

17. புறங்கை மொளியிலும் முன்சொன்ன அகத்து வெள்ளையிலும் அளவெடுத்து இரண்டாய் மடக்கி நடுவி லிருந்து கீழே அளவைப் பார்த்தால் நாடிசுத்தி வர்மம் அதிலும் முரிந்தால் பிளையாது முட்டின் சுற்றளவெடுத்து இரண்டாய் மடக்கிப்பார்த்தால் மேல்பக்கம் கைமண்ண வர்மமும் கீழ்பக்கம் மொழிப்பொருத்து வர்மமும் அறியலாம் அதை இரண்டாய் மடக்கினுல் முடிப்பதப்பு வர்மமும் புற தாரை பிளைநரம்பு வர்மமும் அறியலாம் கையில் பெருவிரல் விட்டு சுற்றளவெடுத்து இரண்டாய் மடக்கினுல்.

18. அகதாரை புறதாரை சக்கரைக் கைவர்மம் அறி யலாம் அதை இரண்டாய் மடக்கினுல் மொளிப்பொருத்து வர்மம் புறதாரை அறியலாம் நாலுவிரலில் மொளி சுற்றள வெடுத்து சிறுவிரல் மொளியிலிருந்து மேல்பக்கம் சொர்ண வெற்றிலைக்காலம் மூன்றுமறியலாம் சொர்ண வெற்றிலைக் காலத்திலிருந்து அந்த நரம்பின் மேல்பாகம் நெருக்கு வர்மம் மூன்றும் அறியலாம்.

19. பெருவிரலிலிருந்து கைமணிக்கட்டு வரைக்கும் உள்பட நேர் அளவெடுத்து இரண்டாய் மடக்கி அதை இரண் டாய் மடக்கினுல் கவளிகாலம் அறியலாம் கோழிக்கழுத்து வர்மம் சுற்றளவெடுத்து இரண்டாய் மடக்கினுல் கோழிக் கழுத்து அகதாரை அறியலாம் பிரதாரை பிரந்தல்வர்மம் அறியலாம் இதுபோல் இடத்தும் வலத்தும் கண்ணுவறும் இரண்டும் கண்டுகொள்க அவ்விடம் முரிந்தால் குற்றம் தீராது.

20. பிளைக்கும் மேலெழுதிய வர்மங்களுக்கு மற்று முள்ள பிரமாணங்கள் பார்க்கவும் முன்னே எழுதியுள்ள வர்மங்களுக்கு அறிந்தவர்க்கும் இப்படித் தெரிந்தால் மாற் றுளை செய்துகொள்ள வேண்டும் இப்படி அறியாமல் செய்த பேர்கள் பதினெட்டு கொண்ட ரோகங்களில் நிச்சயம் ஒன் றில்பட்டு மரிப்பான் வர்மம் சகலமும் இளக்குவதற்கு அடங் கல் சொல்லுகிறேன் ஆராதருவது வர்மம் கொண்டால் சகல குருகடாட்சத்துடன் உள்பயந்து இளக்கவேண்டும் இளகுமா

24

இளகாதா என்றறிய சோதனை முகத்தில் அடக்காலம் பிடித்துப் பார்க்கவும்.

**21.** அடங்கல்காலம் அறிய இருசெவியும் பிடித்துக் கைகொண்டமர்த்தி நாசியிலும் வாயிலும் இருகைகொண்டும் கமர்த்திப்பார்த்தால் கொஞ்ச நேரத்தில் ஜீவன் இருந்தால் ஆள் அதகம் சுவாசம் முட்டி சஞ்சலப்படும் இப்படிப் பரீட்சித்துதான் சாரம் இல்லையானால் மூக்கு இரண்டிலும் வெற்றிலையும் நல்ல மிளகும் உப்பும் குடத்தும்பைப்பருவும் தல்லிப் பிழிந்து இரண்டு மூக்கிலும் இரண்டுசொட்டுச்சாறு விட்டால் ஜீவன் இருந்தால் கண்டத்தை எடுத்து அசைக்கும் அப்போது கொஞ்சம் ஜீவன் உண்டென்று அறிக இப்படிச் செய்தும் அசைவில்லாமலிருந்தால் வெற்றிலைச்சாற்றில் நல்லமிளகை உரைத்து கண்ணில் கருவிழியில் போடவும் ஜீவனுண்டானால் கண்ணில் நீர் வடியும் கண்ணிமை பொடுபொடுவென்று தட்டி விழிக்கிறதும் இருந்தால் ஜீவனுண்டென்று அறிந்துகொள்ளவும் அதிலும் சோதனை இல்லாவிட்டால் வேலிப்பருத்தியை பிழிந்து சாரெடுத்து இரண்டு சொட்டு நாசியில் நசியம் அடைக்கவேண்டும்.

**22.** ஜீவனிருந்தால் கண்டத்தை அசைக்கும் இதிலும் [illegible]ளில்லாவிட்டால் சரீரத்தில் நுள்ளிப்பிடிக்கவும் பிடிக்க[illegible]த்தக்க இடம் குளிர்ந்திருக்கும் அப்போது ஜீவனில்லை என்று காண்க பிடித்த இடம் முன்போலானால் ஜீவனுண்டு அது மறுத்து தலையெடுத்து உயர்த்தினால் ஜடம் ஒன்றாக இளகும் ஜீவனிருந்தால் தலை குழைந்திருக்கும் முன்சொன்ன அடக்கக் காலத்தின் கீழ் சொன்ன பரீட்சை பிரகாரம் ஜீவனுண்டாகி இருந்தால் ஒன்றரை நாள் அதாவது தொண்ணூறு நாளிகைகுள்பட்ட ஒரு அவதியை அவ்வப்போதுள்ள குருக்கு நிலைமைக்குத் தக்கதாக சொல்லி விலகிக்கொள்ளவும்.

**23.** இப்படியும் சமாதானம் சொல்லி கேட்காவிட்டால் உடையக்காரனின் சம்மதத்தின்படி நாம் அறிந்த பிரகாரம் அடங்கலில் கொண்டோ அதல்லாமல் அடிபட்ட இடத்தின் ஸ்தலம் திட்டப்படுத்தியோ மறுகாலங்கள் கை

யமர்த்தியோ இளக்கிப் பார்க்கவேண்டும் இதல்லாமல் அக தநுரை தும்மிக்காலம் கீழ் கல்லிடைக்காலம்வரை கொண்ட வர்மங்களுக்கு மறுகாலம் கொண்டால் முன்பிறங்கை அமர்த் துவது தவிர தட்டக்கூடாது.

24. இடதுபக்கம் விலாவுக்கு வலதுபக்கம் விலாவுக் கும் கொண்டிருந்தால் முன்சொன்னதுபோலே கையமத்தி விடவும் எடுத்து இருத்தி முன்சொன்னதுபோல் சுக்கு பொடித்து நாசியிலும் செவியிலும் ஊதி கைபொத்தி உச்சி பதைப்பில் சுக்கை சவைத்து ஊதி உச்சியை கசக்கி பாக மாய் இடதுகை அடியிலும் வலதுகை மேலும் நாலுவிரல் உயரம் கையுயர்த்தி தட்டொன்று தட்டி இடத்தும் வலத் தும் இரண்டு கைகொண்டும் தடவி விலங்கு வர்மத்தில் கொண்டு கையமர்த்திக் கொள்க.

25. இரண்டாவது முன்புறம் தும்மிக்காலம் வரை பின்புறம் வளமுடிந்த வர்மம் வரை தடவிக் கையமர்த்திக் கொள்க இந்தப்பிரகாரம் கண்டத்தின்மேல் ஐந்திடங்களிலும் செய்துகொள்க அங்கேயிருந்து கண்டத்துக்கும் கீழ்தும்மிக் காலத்திலிருந்து கீழ்கல்லிடைக்காலம் வரை பிறதாரை வள முடிந்த காலத்திலிருந்து சறடப்பிறந்தகாலம்வரை கைநிறை பிணையாமல் முன்னும் பின்னும் ஒருப்போல்தடவி முன் சொன்ன ஸ்தலம் இரண்டிலும் கையமர்த்திச்கொள்க இது போலே கமுகுளிக்குள் இடத்தும் வலத்தும் கையிட்டு அச் சிக்காந்தாரி வரை தள்ளெலும்பில் கையமர்த்திக்கொள்க.

26. இது புறங்காரை எலும்பு நடுக்குவர்மத்திலிருந்து வலதுபுறம் புரதாமை தோள்புறம் உயர்ந்த ஸ்தலத்திலிருந்து கைநிறையோடே தடவி முண்டெலும்பு வர்மத்தில் பிடித்து கையமர்த்திகொள்ளவும் முன்புறம் சிறிய அத்திச்சுருக்கியில் தடவி அமர்த்திக்கொள்ளவும் இப்படி இருபக்கமும் கண்டு கொள்க கீழ்புறம் உந்திக்கும் கீள்முகம் மூர்த்திக்கும் மேல் ஒன்பது வர்மமும் கொண்டதானல் முன்பிரமாணத்தின்படி செய்யவும்.

27. கைகால் நோவுமானால் கைச்குழியிலிருந்து ஒரு விரல் மேலே கைநிறைய தடவி கோழிக்கழுத்து வர்மத்தில் கொண்டு கையமர்த்தி இதுபோலே மறுபுரத்தில் அக்கையிலும் அமர்த்தி கையை ஒன்றுதறி விரல்களை இழுத்து நிமிர்த்திவிடவும் இப்படி நாலு அடங்கலிலும் ஒரு கையில் செய்க அதுபோலே காலில் அகம் உருக்கையிலும் பிறதாரை சிப்பியிலிருந்து தடவி காலின் கண்களில்கொண்டு நிறுத்தவும்.

28 இதுபோலே மறுகாலிலும் செய்யவும் விரல்களை எல்லாம் இழுத்துவிட்டு ஒன்று உதறிவிடவும் மேல் சொன்னகண்டத்தின் அடங்கல் ஐந்தும் செய்து நாடியைப் பிடித்தேந்தி பின்கலையையும் பிடித்து இடத்தும் வலத்தும் அசைத்துவிடவும் கண்டத்தின்கீழ் கையிரண்டும் முன் பக்கத்தில் கட்டி புறதாரைநின்று உப்புக்குத்தியில் சவட்டி கையிரண்டையும் நெஞ்சில் சேர்த்து அசைத்துப்பிடித்து நெஞ்சில் நெருக்கி விடவும் கால் இரண்டும் உதறிவிடவும்.

29. எந்த அடங்கல்செய்தாலும் நோயாளிக்கு நினைவு உணர்ச்சை எப்போ உண்டாகின்றதோ அப்போது உடனே தண்ணீர் கொடுக்க வேண்டும் எந்த வர்மத்திற்கும் கஞ்சி சுக்குப்பொடி போட்டுக் காய்த்துக்கொடுக்க வேண்டும் தும் மிக்காலத்திற்குக்கீழ் மூத்திரக்காலம் வரை பிரதாரை வள முடிந்த காலத்தின்கீழ் சடையாந்த காலம் வரை நிரப்பு சரி யிட்டுக் கையமர்த்திப்பார்த்தால் அலறி சுவாசம்விடும் சாதா ரணமாகிவிட்டால் இளகுவது நிச்சயம் இதுபோலே இடத் தும் வலத்தும் கீழ்ப்பட,வலிய அத்திச்சுருக்கி வரை கைய மர்த்திப்பார்த்தால் சுவாசம் அலறும் சாதாரணமாய் விடுகி றதாயிருந்தால் பிழைக்க இதல்லாமல் வருமத்தில்கொண்டு முன் சொன்னபடி கையமர்த்தினால் அமரும் சுவாசம் அப் பிரகாரமே போனால் நாம் சொன்னபிரகாரம் கைபாகமாய் இளக்கிக்கொள்ளவேண்டும்.

30. இப்பிரகாரம் யாராகிலும் வர்மம் கொண்டதற்கு மொட்டைத்தலையோடே நடைபிடித்துவந்து அழைத்தால்

போகக்கூடாது உள்ளேயும் வெளியேயும் கால் வைத்தழைத்தால் போகக்கூடாது முற்றத்தின் உள்ளேவந்து காலைச்சுரண்டியும் தேகத்தை சொறிந்து அழைத்தாலும் போகக்கூடாது அல்லாமலும் பெண்கள் தலைகுலைந்து ஓடிவந்து முற்றத்தில் நின்றாலும் வெளியில் நின்றாலும் தலையில் கையை வைத்து அழுதுகொண்டு அழைத்தாலும் போகக்கூடாது வெளியில் இறங்கும்போது நாய் உதரலும் மொட்டைத்தலை காணிலும் மண்வெட்டி காணிலும் எங்கே என்று கேட்பினும் வலது காலிடறினாலும் இடதுகால் மடங்கினாலும் போகக்கூடாது சொன்னேன் இதுமுறைப்படி கண்டறிந்து கொள்ளவும்.

அளவு நூல்முறை முற்று.

குருவே துணை.

---

## பிரங்கித் திரவுகோல்.

1. அண்ட சராசரம் படைத்த அருளைப்போற்றி ஆனந்த பராபரத்தின் அருளை வாழ்த்தி குண்டலிக்குள் அமர்ந்து நின்ற குகனைப்போற்றி குருபொருளை அனுதின மும் குறிப்பாய் போற்றி மண்டலத்தில் குருமுனிதான் மலர் தாள் போற்றி மாதவத்தோர் மாமறையை வாழ்த்திப்போற்றி கண்டகண்ட நூல்கள் பார்த்துக் கலங்கவேண்டாம் கைப் பொருளை கரத்தில் வைத்து பூரணத்தில் நில்லே.

2. பூரணமாய் பிரங்கி நூற்றுக்குள்ளே பூட்டி வைத் தேன் வர்மத்தின் புதுமை எல்லாம் காரணமாய் சூஸ்திரமது ஐம்பதற்குள் கைகண்ட மருந்துவகை கருத்தாய்ச் சொன் னேன் தாரணியில் மெய்ப்பதற்காய் திரவுகோலே சாற்றினேன் பதினாறில் அடக்கமாக ஆரணத்தின் உட்பொருளே அடவாய் நின்ற அனாதியருள் இறைவா காப்புத்தானே.

3. காப்பதற்குப் பொரிபட்டு மயங்கினோரை கருத் துடனே பார்பதற்குக் குறியைக்கேளு பார்பது கண்வட்டம் பாரு சுற்றிடும் பார்த்திடுமாம் மலஜலம் மூர்ச்சை நாலுமுண்டு ஏற்பதுவே இக்குறிகள் நாலும் கண்டால் என்மக்காள் இள கிடாது அடுத்திடாதே.

4. சாவதுபோய் பிழைபதற்குக் குறிகள் நாலுண்டு சாக்கரியும் நாடிநிலே சரியாய் பாரே பாரப்பா நால்குறியும் சத்தத்தோடு சாற்றுகின்ற நால்குறியும் சரியாய் கண்டால் சீரப்பா பிழைப்பதற்கு ஐயம் வேண்டாம் திடமனதாய் குரு பாதம் சிரசில் வைத்து அரைவீட்டில் மறைந்திருந்து ஆள் தனை இடங்காலில் அணைத்திருத்தி கூறப்பா கூம்பின் கைப் புரத்து முட்டையுமே கொடுத்துப்பிடி கீழ்நாடி கையா லேந்தே.

5. ஏந்தியே முட்டதனை அணைத்துக்கொண்டால் ஏங்கியே சுவாசம்து நேரே போகும் கரந்தனையே வலமார்பு முதல் தடவிக்கொண்டு இடதெல்லில் கோறிக்கொள்ளு சாந்த

முடன் இடமார்பும் அதுபோலப்பா தப்பாமல் இரை யொன்றி இரக்கிக்கொண்டு ஆள்தனையும் மும்மூன்று வளையும் செய்து அப்பனே நேரேதான் தடவு மூன்றே.

மூன்றென்ற நேரே கைமுறைதானப்பா முன்னும் கத்தரிக்கோல் மாறலாக சான்றோர்கள் கைமுறையாய் காண வேணும் சண்டாளர் தடவுமுறை தடவொண்ணாது ஆன்றோர் கள் அளவுதப்பி நடக்கவேண்டாட் அதுகடந்தால் கீழ்நாடி இறையொன்றுக்குள் ஊண்றடா நடுவிரலால் இரையே ஒன்று ஊன்றிடவே கண்விளிப்பான் உண்மைதானே.

7. உண்மையுடன் இளக்காவிட்டால் உறுதிகேளு ஊன்றடா கடவாயில் விரல் நாலுக்குள்ளே வண்மையுடன் பெருவிரலால் ஊன்றிக்கொண்டு பார்த்திருப்பான் கண்பார்த் துக்கொள்ளு வண்மையுடன் அதற்குமேல் வலதுகையை தாக்கடா பிரங்காலில் புரத்தே தண்டில் கண் வட்டமாய் பாம்பு விரலால் இரையே ஒன்று பற்றியே இருகரத்தும் ஏந்தித்தூக்கே.

8. தூக்கையிலே கண்விளித்து எழுந்திருப்பான் துரிதமுள்ள சர்வாங்கம் இதுதானப்பா ஆக்கையிலே சுக் கிட்டு சாமையன்னம் அருமையுடன் கொடுத்துவிடு அவுஷ்தம் மாகும் பார்க்கையிலே கடவாயில் புரத்தே நோக்கி பாலகனே விரல் பத்தும் ஏந்திக்கொள்ளு நோக்கு முன்னே எழுந்திருப் பான் துள்ளிபமாய் நூல்பார்த்துக் கைமுறையாய் அறிந்து கொள்ளே.

9. கொள்ளுதற்கு வர்மத்தால் சன்னிவெட்டு கொண்ட தென்றால் பெருவிரலிடையே தன்னில் விள்ளுமே ஓரிரை தான் தள்ளிமெள்ள வெட்டிப் பிடித்திடுவாய் சன்னிபோகும் கள்ளமில்லை வர்மமுடன் மயக்கம் தீரும் கைகண்ட காலடங் கல் முறைதானப்பா உள்ளபடி கைக்குழியில் ஓரிரைதான் உத்தமனே கொடுத்தூன்றித் தூக்குவாயே.

10. வாய் மொழிவாய் வளுவிலாச் சொல்லிவிட்டேன் வையகத்தோர் பிழைப்பதற்கு வகைதானப்பா தாய்மொழியாய் நெற்றி முடிதன்னில் நின்று தப்பாமல் பதினோரு விரலில்தானே காய் பழுத்த கனிபோலே சடுகளவு வீதி கை காட்டி குருமுறையாய் தலத்தைக்கண்டால் நாய்போலே அலைவானேன் ஜீவன்போக நல்மணிபோல் தமமொன்று நன்றாய்க் காணே

11. நன்றாகக் காணவென்றால் ஜீவன் போனால் நலமாக காணுமடா துவாரம் ஒன்று குன்றாதே ஒருவருக்கும் சொல்ல வேண்டாம் குருமுறையாய் குருதொட்டுக்காட்டவேணும் மன்றாடி மான்போல மருகுவாரோ வாய்க்காத முறையுண்டோ வையகத்தில் தன் பெருமை கொள்ளாதே தவறிடாதே சத்தியத்தை மறவாதே தயவாய் நில்லே.

12. நில்லென்று சொல்லிவிட்டேன் நிலத்துள்ளோர்க்கு நிலைகுலைந்து மாத்திரையில் மீறினுக்கால் வல்லவினை வர்மமது இளகிடாது மதிமயங்கிக் கண் சிவந்து காணும் அல்லவிலை அதுசமயம் மருந்தும் கையும் அமர்த்திவைத்தேன் அன்புள்ளோர் அறிந்து கொள்வார் தொல்லையில்லை வேலி தனைப்பிழிந்து சாற்று சுருக்காகப் பாதம்முதல் உச்சிமட்டும்.

13. மட்டாகத் தாளியிட்டுத் தேய்த்துக் கொண்டு வளமாக பேன்குழி விரலாலூன்றி திட்டமுடன் மாத்திரைதான் இஞ்சியொன்று சுகமாகத் தாக்கிவிட்டு மறுகாதில் ஊதி சட்டமதாய் உச்சியிலோர் அடியடித்து தடவிவிடு குருக்கதிலும் தயவுதாக விடுகிறதாயுள்ளவற்கு எய்து பொய்யும் மெய்முறையாய் தலமொன்று விளம்பக்கேளு.

14. விளம்புவேன் ஆசாமக்காலம் ஒன்று வீராபின் ஜீவன்வரும் மேன்மையுண்டாம் கலங்கமில்லா அடக்க மொன்று சொல்லக்கேளு காதில் முன் குருத்தின் கீழ் இறையில் தானே வழக்கமுடன் நெல்போலே ஏறிதானென்று வளமாக அரைவிரல்தான் ஊன்றித்தாக்கே இளகியே மயக்கம்

விடும் ஜீவனுண்டாம் விள்ளாதே ஒருவருக்கும் மேன்மை போச்சே.

15. போச்சென்று நினையாதே பிலன்கொள்ளாதே பொய்யொன்று சொல்லாதே பொருளதாச்சே ஆச்சப்பா அடங்கல்முறை அடக்கிச்சொன்னேன் ஆசானை அடுத்து வைத்து அறிந்துகொண்டால் மூச்சப்பா விடுமுன்னே ஜீவன் வந்து மூன்றுக்குள் எழுந்திருப்பான் முற்றும் சொன்னேன் ஆச்சப்பா அடங்கல் முறை அசாத்தியம் கண்டால் வாங்கி விடு நில்லாதே மாண்டுபோமே.

16. போகுமுன்னே கெடுவதிலே இளக்கிக்கொள் வாய்பூட்டெல்லாம் திறந்துவிட்டேன் புதுமையாக ஆக்க மிந்த புத்தியுனக்கிருந்ததானால் அஞ்சாதே அலையாதே அடுத்துப்பாரு வற்கையிலே இறைவனை தியானஞ்செய்து என்குருவே தஞ்சமென்று எழுந்துபோவாய் வாகான ஐந் தெழுத்தை ஓதிப்போடு வளமான திரவு பதினாறும் முற்றே.

பீரங்கித் திரவுகோல் முற்றிற்று.

குருவே துணை.

## கெர்ப்பிணிகள் வர்ம இளக்குமுறை.

1. சதமுடனே மயக்கம் உள்ள தையலர்க்கு கூந்தல் தனைக்குலைத்து விதமான நாலுபங்காய் வகுத்துப்போட்டு நினைவாக குருபரனை இருத்திப்போற்றி போற்றியே நீ நிலொருகை அசக்கையாலே புண்ணியனே பதைபதைத்து முன்பதைப்பு மட்டும் ஆற்றியே தடவிப்பின் நாபியிலும் அப்பனே அப்பு சிப்பி அரையின்கீழ் கழுத்துமட்டும் போற்றியே நால்வசமும் கசக்கிருவி முதுப்புறமேதான் தடவி அமர்த்திவைத்து சாற்றியே மேலடங்கல்தனனில் சாற்றி சார்பாக மேலடங்கல் செய்துகொள்ளே.

2. கொள்ளப்பா இப்படியே செய்துகொண்டு கோர் வாக மேல் சங்குதிரியில்தானும் நாளப்பா இருவசமும் திரிச் சுற்றி நாயகமே தோளிரண்டும் அமர்த்திப்போடு போடப்பா உச்சியின்மேல் கையை வைத்து விதமாக மூன்று தட்டு லேசாய் தட்டி தட்டியே முறைப்படியே செய்தாயானால் ஜீவனது வந்துவிடும் மீண்டுதானே மீளவே சுக்கு வென்னீர் குடிக்கச் சொல்லே.

3. சொல்லவே மயக்கமென்றால் நீக்கிப்பார்த்து சுருக்கார் கலசத்தில் தண்ணீர்கொண்டு பரப்பிரம்மத்தை சிவம் என்று சேவித்து போற்றியே வீசிகாணவே முகத்தெளிப் பாய்மயக்கம் தீரும்.

4. நலமான கஞ்சிமுறை விளம்பக்கேளு நாயகமே உளிஞ்ஞ குருந்தட்டி வில்லை வில்லையொடு சீரகமும்மதுரம் ஏலம் வகையான வெந்தயத் தோடேளுமாகும் வகையாக களஞ்சியொன்று நிறுத்துக்கொண்டு வண்ணமாய் சதைத்து இருகிளியாய்க்கட்டி மணமாகத்தான் காச்சி கிளியைநீக்கி அன்னப்பாலது அருந்தி பத்தியம் காத்து துகையாக இப்படியே ரெட்டிப்பாக சூட்சுமாய் அருந்திடிகில் வர்மம் போச்சே.

5. போகவே சொழுத்து நரம்பு தெற்றல்கண்டால் ஆவின்நெய் சீனி சிங்கன்பழம் ஓரிலையுமாகும் சமமாக எடுத்துக்கொண்டு நிச்சயமாய் குழியம்மிதன்னில்வைத்து வெந்நீரால் மைபோலாட்டி வண்மையாய் கெர்பிணியின் வயர் விலாக்கள் வள்ளிசாய் முதுகுடமுற்றும் இடத்தில்பூசே எண்ணமாய் கொளுத்தோடு நரம்புத்தெற்று உளைச்சல்களும் ஓடிப்போகும் சூட்டம் சூட்சம் சூட்சமென்ற அமிர்தநிலை தெளிவாய் சொன்னேன் ஐயடா இத்தலங்கள் தெளிந்து கொள்ளே தெளிந்துகொண்டு தையலற்கு இளக்கம் செய்தால் ஜெயமாகும் குறைவில்லை சூட்சம்முற்றே.

கெற்பிணிகள் வர்ம இளக்குமுறை முற்றிற்று.

குருவேதுணை.

---




பங்கஜம் பிரஸ், போடிநாயக்கனூர்:-3-38.

# பிழை திருத்தம்.

| பக்க நிர். | வரி நிர். | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| 8 | 3 | முதுவருயில் | முதுவரியில் |
| 9 | 20 | பர்த்தென்ன | பார்த்தென்ன |
| 13 | 26 | கோவென்ற | கோனென்ற |
| 14 | 13 | சுருக்கியுன் | சுருக்கியின் |
| ,, | 28 | நீர | நீரது |
| 15 | 9 | அண்டைக்காலம் | அண்டக்காலம் |
| ,, | 26 | மாட்டை | மாட்டே |
| 16 | 15 | பிரியக்காலம் | உயிர் பிரியக்காலம் |
| ,, | 24 | செய்யாவிட்டால் | (பதிலாக) தீருமடா |
| ,, | 25 | போட்டு | போட |
| 17 | 5 | சுருக்கு | சுளுக்கு |
| ,, | 6 | சுருக்கிக் | சுளுக்கிக் |
| 19 | 3 | ஞால் | னூல் |
| ,, | 19 | பர்நொடி | நொடி |
| ,, | 29 | தைலமிட்ால் | தைலமிட்டால் |
| 20 | 5 | பரத்தின் | பராபரத்தின் |
| ,, | 16 | நைபப்பா | நையப்பா |
| 21 | 14 | கடிமைடா | கடினமடா |
| 24 | 5 | மொழியாறும் | மொழியானும் |
| ,, | 5 | கேட்டேனே | கேட்டேன் |
| ,, | 17 | குங்குப்பூ | குங்குமப்பூ |
| ,, | 25 | சுட்டிடவே | எடு |
| ,, | 26 | தாட்டிடுமே | எடு |
| 25 | 2 | வாங்கே (அடுத்து) | வாங்கியே (சேர்க்க) |
| 27 | 25 | மேனதான | மேலான |
| ,, | 28 | தண்டிடத்தான் | கண்டித்தான் |
| 29 | 26 | பனி | பளி |
| 30 | 8 | பூருன | பூணை |
| 31 | 29 | கடிமை | கடினம |
| 34 | 19 | குரும் | குருகும் |
| ,, | 27 | கடிமையப்பா | கடுமையப்பா |

| பக்க நிர். | வரி நிர். | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| 35 | 12 | சுமத்திடுக ல் | சுமைத்திடுகில் |
| 36 | 1 | முள்ளா..க்கரங்காலதுவும் | முள்ளாகிகரங்காலதுவும் |
| ,, | 17 | அதிகாரமுண்டாம் | அதிசாரமுண்டாம் |
| 39 | 7 | ஆட்டம் | ஆட்டமப்பா |
| ,, | ,, | பாதிடமாக | திடமாக |
| 43 | 13 | கையான | வகையான |
| 45 | 8 | தீருமெபன்று | தீருமென்று |
| 46 | 9 | சிறப்பிடனே | சிறப்புடனே |
| 57 | 9 | கெற்றி | தெற்றி |
| 62 | 27 | ஜன்னி | சென்னி |
| 64 | 12 | பம்பரச்சுடர | பம்பரச்சுடர் |
| ,, | 26 | கொண்டையின் | தொண்டையின் |
| 73 | 2 | மொருத்தாகும் | பொருத்தாகும் |
| 79 | 2 | திரிமிர்ந்து | திமிர்ந்து |
| ,, | 12 | சரியாநங்கை | சிறியாநங்கை |
| 93 | 16 | எணப்படி | எண்ணப்படி |
| ,, | 19 | சீழ் | கீழ் |
| 96 | 12 | மதருக்கு | மனிதருக்கு |
| ,, | 30 | தவம்போடவும் | தவளம் போடவும் |
| 101 | 22 | மடங்கும் | மடக்கும் |
| 102 | 23 | சேர்ந்த | சேர்ந்து |
| 103 | 15 | படியாக்கு | படியாக்கி |
| ,, | 26 | தைவளை | தைவேளை |
| 105 | 24 | பத்திற்கு | கபத்திற்கும் |
| ,, | 26 | முதங்காய் | முத்தங்காய் |
| 111 | 25 | குடிதானே | குடிதானேரி |
| ,, | 26 | நல்தரமாய் | நல்லரமாய் |
| 116 | 12 | அசுலநில்லி | அகலநில்லு |
| 117 | 3 | வலிவிலகி | வளிவிலகி |
| 118 | 9 | சரிபாய் | சரியாப் |
| 124 | 2 | குறைந்தாலே | குறைந்து |

| பக்க நிர். | வரி நிர். | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| 125 | 21 | ப'கத்துன்ளு | பக்கத்துள்ளு |
| 128 | 30 | காலவது | காலமது |
| 130 | 7 | குடலைப்பற்று | குடலைப்பற்றி |
| ,, | 11 | செய்யாகே | செய்யாதே |
| 131 | 16 | கூம்மெலும்பின் | கூம்பெலும்பின் |
| ,, | 17 | பித்தக்காய் | பித்துக்காய் |
| 132 | 1 | சனிவேகம் | சன்னிவேகம் |
| ,, | 6 | கவருமாகில் | தவருமாகில் |
| ,, | 19 | சரற்றார் | சரமற்றார் |
| ,, | 24 | சற்றேகெளு | சாற்றேகேளு |
| 139 | 4 | மறுபண்டம் | மறுபாண்டம் |
| ,, | 14 | நாளியால் | நாளியாய் |
| ,, | 20 & 21 | செம்மரியின் கிழங்கின் சாகம் வகையான | (தள்ளுபடி செய்யவும்) |
| 141 | 1 | கல்—டையும் | கல்சடையும் |
| ,, | 2 | மீரைசேர | மீரைசேரவே |
| ,, | 8 | அசைவுறிக் | அசைவுமுறிவுக் |
| ,, | 8 | மென்றதணை | மென்றதனை |
| 143 | 24 | நீர்பபூலா | நீர்பூலா |
| 146 | 2 | ஆங்குமெற | ஆங்குபெற |
| 151 | 12 | காகக்லமும் | காக்கலமும் |
| ,, | 24 | நீர்துள்ளி | நீர்முள்ளி |
| ,, | 24 | விராலிச்சாகப் | விராலிச்சாகம் |
| 152 | 31 | தானேடுபாங்கி | தானேபொங்கி |
| 153 | 9 | மேனிமறிந்து | மேனிஅறிந்து |
| 155 | 4 | அணாலை | அனாலை |
| ,, | 22 | கோணுமே | தோணுமே |
| 156 | 1 | கததாரியோடே | கத்தரியோடே |
| 157 | 10 | பசமூடி | பாதமூடி |
| 160 | 15 | இரண்மொன்றாய் | இரண்டுமொன்றாய் |

| பக்க நீர். | வரி நீர். | பிழை. | திருத்தம். |
| --- | --- | --- | --- |
| 161 | 1 | பரமனுந்றுணை | பரமனி[illegible]ணை |
| 163 | 7 | விள்ளவே | விள்ளவே வேர் |
| ,, | 19 | அணலெரித்து | அனலெரித்து |
| 167 | 5 | பலாதாளி | பூலாதாளி |
| ,, | 11 | சோளம் | சோலம் |
| ,, | 18 | பல்லுபதம் | கல்லுபதம் |
| 168 | 28 | சோளம் | சோலம் |
| 172 | 1 | குருவைம்போற்றி | குருவைப்போற்றி |
| ,, | 4 | திறவுகேல் | திறவுகோல் |
| 173 | 13 | சரருடனே | சரழுடனே |
| 174 | 21 | வட்டமில்லா | வாட்டமில்லா |
| ,, | 24 | வட்டும் | மட்டும் |
| 176 | 2 | மதுதன்னிய் | மதுதன்னில் |

---

